ஹிமாலயா
புக்கே
உபயோகித்து
அதன்
அதிகப்படியான
புதுப்பொலிவை
உணருங்கள்
—நாள்முழுவதும்!



# ஹிமாலயா புக்கே

டால்கம் அண்டு டாய்லெட் பவுடர்ஸ்



வெப்புக் கோடிட்ட ஹிமாலயா பொக்கே டாய்லெட் பவுடர் டின் ஒரு பவுடர் பப்புடன் கூடியது.

HBP. 12-50 TM   இராஸ்மிக் கம்பெனி லிட்.லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது.

மலர் 14
இதழ் 42

# கல்கி

மன்மத ௵
வைகாசி ௨

1955 மே 15

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

சென்னை
காஸினோ
பிரபாத்
ஸரஸ்வதி
மற்றும்,
தமிழ் நாடெங்கும்

# கணவனே கண்கண்ட தெய்வம்

நடனங்கள்
கேவா கலரில்
டைரக்ஷன்
T.R. ரகுநாத்




நாராயணன் கம்பெனி தயாரிப்பு



மலர் 14 இதழ் 42

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மன்மத ஆண்டு வைகாசி 1

# இலங்கை விஷயம்

## ராஜாஜி எழுதுகிறார் :

பாண்டுங்கில் கூடிய கிழக்குலகு சம்மேளனத்தைப் பற்றி நான் எழுதியதில் இலங்கைப் பிரதமர் கோத்தலேவாலா அவர்களை நான் தாக்கின முறை அவரைப் புண்படுத்தியதாகத் தெரிகிறது. அதற்காக மிகவும் வருந்துகிறேன்.

"வயதின் காரணம் அவர் மூளை சிதைவு அடைந்திருக்கிறது. ஆனபடியால் நான் அவருடன் போராடப் போகிறதில்லை" என்று அவர் மிகவும் பெருந் தன்மையாகவே சொல்லி விட்டார். அவருடைய பெருந்தன்மையால் என் குற்றம் இரு மடங்காயிற்று.

அவருடைய புண்ணில் நான் ஊசி போட்டுக் கிளறியது தவறு. ஆனால் குற்றத்தின் காரணம் வயதின் கோளாறு அல்ல. கோபமே காரணம். எனக்கு வந்த கோபத்தினால் நான் பிரயோகித்த சொற்களுக்காக வருந்துகிறேன் அமெரிக்கருடைய குற்றத்தை எடுத்துக் காட்டாமல் அவர்களுக்கு ஒத்துப் பாடினாரே என்கிற கோபத்தால் தமிழிலுள்ள பழைய பாட்டு நினைவுக்கு வந்து, ('கான மயிலாட' என்கிற பாட்டு) அதைக் குறித்து விட்டேன். அவ்வாறு சொல்லி யிருக்க வேண்டியதில்லை. விஷயத்தை மட்டும் சொல்லி யிருக்கலாம். தமிழை ஆங்கிலப்படுத்தும்போது கோணல் இருமடங்காகி விடுகிறது.

அமெரிக்காவினுடைய குற்றம் பெருங் குற்றம். அணுவைச் சேதித்து ரௌத்ராகாரமாகிய தாதுக்களை உலகம் முழுதும் பரப்பி வருகிறார்கள். இது இயற்கைப் பரிணாமக் கிரமத்துக்கு விபரீதமான போக்கு, உலகத்துக்குச் செய்யும் பெருந் துரோகம்.

இதை பாண்டுங்கில் கிழக்குலகம் ஏகோபித்துக் கண்டித்திருக்கிறது. கிழக்குலகம் மட்டுமல்ல. அமெரிக்காவிலும் எண்ணற்ற மக்கள் நான் சொல்லுவதை உள்ளத்தில் ஆமோதிக்கிறார்கள்.

அமெரிக்க அணுசக்திக் கமிஷனில் ஒரு அங்கத்தினர் தாமஸ் மறே அவர்கள் நியூயார்க்கில் சென்ற ஞாயிறு அன்று சொன்னார்: "அணுசக்தியால் உலகம் நாசமாகாமல் ஆண்டவன் காப்பாற்ற வேண்டும். சர்வேசுவரன் நமக்கு நல்லறிவு தருவானாக. உலகத்தில் அனைவரும் உதவினாலுங்கூட ஆண்டவன் அருள் இல்லையேல் இந்த அணுசக்திப் பிரயோகத்தினால் நாசமாகப் போவோம். நாம் கடவுளை இறைஞ்சுவோமாக. பிரார்த்தனையே வழி. இல்லையேல் சர்வ நாசம் நிச்சயம்" என்றார்.

கோத்தலேவாலா அவர்கள் இதைக் கவனிப்பாராக. அமெரிக்காவின் போக்குக்குப் பரிந்து பேசுபவர்களும் எழுதுபவர்களும் நம் நாட்டில் சிலர் இருந்து வருகிறார்கள். அவர்களும் கவனிப்பார்களாக. அணுசக்தியின் அபா

யங்களை நம்மில் பெரும்பாலோர் நன்ருக உணரவில்லை. தங்கள் பிடிவாதச் செயல்களினுல் உலக மக்கள் அனைவருக்கும் அமெரிக்கர் பெருந் தீமை விளைத்து வருகிருர்கள். பௌதிக சாஸ்திரம் படித்தவர்களுக்கு இது நன்ருகத் தெரியும். அமெரிக்க அணு சக்திக் கமிஷனிலேயே அங்கத்தினராக இருப்பவர் ஒருவர், "ஆண்டவனை பிரார்த்திப்போம். இல்லையேல் இந்த அபாயத்திலிருந்து தப்ப மாட்டோம்" என்கிருர். இதை நம்முடைய நாட்டிலுள்ள படித்த மக்கட் தொகுதி கவனிக்க வேண்டும். பணம் தருகிருர்கள், அதை ஏன் விட்டுவிட வேண்டும் என்று அமெரிக்க சர்க்காரின் குற்றத்துக்கு உடந்தையாகாம விருப்போமாக. நம்முடைய காங்கிரஸ் காரிய கமிட்டியிலும் பாண்டுங்கில் செய்த தீர்மானத்தை ஆதரித்திருக்கிருர்கள். சூரிய மண்டலப் பிரபஞ்சத்தில் உயிரிருக்கும் உலகம் நம்முடைய பூமி ஒன்றே என்கிருர் ஸர் ஹாரல்டு ஸ்பென்ஸர் ஜோன்ஸ் என்னும் பெரிய ஆங்கில விண்மீன் பௌதிக விஞ்ஞான நிபுணர். உண்மை. எத்தனை யுகங்கள் கழிந்து பூமண்டலத்தில் உயிர் தோன்றி மக்கள் ஜாதி தோன்றிற்று! அணுசக்தியின் தேஜஸ் தணிந்து இந்த பூமண்டலம் தோன்றி நாமும் தோன்றினேம். தற்போது அதைத் தலைகீழாகத் திருப்பும் ராக்ஷஸ முயற்சியானது உலகம் அழிவதில்தான் முடியும்.

திரு கோத்தலைவாலர் மற்றுமொரு விஷயத்தைக் கவனிப்பாராக. பாண்டுங்கில் இந்தோனீஸியா நாட்டிலுள்ள சீன மக்களைப் பற்றி எவ்வளவு நீதியாகவும் கண்ணியமாகவும் முடித்து விட்டார்கள்! உங்களுக்குச் சீன ராஜ்ய பிரஜாவுரிமை வேண்டுமா, இந்தோனீஸியா பிரஜாவுரிமை வேண்டுமா, சொல்லுங்கள் அந்தப்படி பதிவு ஆகும் என்று முடித்து விட்டார்கள். இலங்கையிலுள்ள இந்தியர்களை விடப் பன்மடங்கு அதிகத் தொகைச் சீனர்கள் இந்தோனீஸியாவில் இருக்கிருர்கள். ஆயினும் இம்மாதிரியான தாராளமான ஒப்பந்தம் செய்து கொண்டு, சீனத் தலைவரும் இந்தோனீஸியத் தலைவரும் கையெழுத்திட்டு விட்டார்கள். இந்த சாமர்த்தியத்தையும் தரும சிந்தனையையும் பாண்டுங்கில் இலங்கைப் பிரதமர் நேரில் கண்டார். அதனின்று கற்கவேண்டிய நீதியைக் கற்று நடந்துகொள்வாராக. "தருமத்வீபம்" என்கிற மிகப் புனிதமான பெயரைக் கொண்ட இலங்கையின் அரசாட்சி இதைச் செய்து விட்டால் இந்தியாவுக்கும் இலங்கைக்கும் தரும சங்கிலி பிணைத்துப் பூட்டியவாறு ஆகும். சந்தேகமில்லை.

கம்யூனிஸ்ட் நாடாகிய சீனவுடன் சம்பந்தப்பட்ட மக்களைப் பற்றி, இந்தோனீஸியத் தலைவர் பயப்படவில்லை. அப்படியிருக்க இலங்கையில் பாடுபட்டு ஜீவித்து வரும் இந்திய சாது ஜனங்களைப் பற்றி இலங்கையர் ஏன் பயப்பட வேண்டும்? வேண்டாம். நியாயத்தைச் செய்வார்களாக. புத்த பெருமான் காட்டிய வழியில் நடந்து புகழ் பெறுவார்களாக. சிக்கல்களும் நிபந்தனைகளும் புகுத்திக் குழப்பிக் கொண்டு, போகாத ஊருக்கு வழி தேட வேண்டாம். இந்தோனீஸியா செய்தபடி செய்து விடுவார்களாக.

**– சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி**

அட்டைப்பட விளக்கம்

## மாமல்லபுரத்தில் இந்துமதி

அமரதாரா தொடர் கதையில் வரும் இந்துமதியும், கலோசனுவும் மாமல்லன் அமைத்த சௌந்தரிய உலகமான மாமல்ல புரத்துக்குப் போகிருர்கள். அங்குள்ள அமர சிற்பங்களையும், அற்புத கற் கோயில்களையும் கண்டு மகிழ்கிருர்கள். இந்த எழில் மிக்க காட்சியைத்தான் நமது ஓவியர் மணியம் வண்ண ஓவியமாகத் தீட்டியிருக்கிருர்.

# என்ன சேதி

## பிரிட்டிஷ் தொழிற்கட்சி அறிக்கை

பிரிட்டனிலே இந்த மாதக் கடைசியில் பொதுத் தேர்தல் நடக்கப் போகிறது. அதை யொட்டித் தொழிற் கட்சி அறிக்கை கூறுவதாவது:

"நாம் தேர்தலில் ஈடுபடும் இச்சமயத்தில் ஹைட்ரோஜென் குண்டு மானிட சமூகத்தையே பயமுறுத்தி வருகிறது. இந்தப் பேராபத்தைச் சமாளிக்க நாம் என்ன செய்ய முடியும்? இரும்புச் சுவருக்கு இரு புறங்களிலும் இந்தப் பயங்கரமான ஆயுதம் இருப்பது எல்லோருக்கும் அழிவை உண்டாக்கி விடுமோ என்ற பீதியை உண்டாக்குகிறது. உலக நாடுகள் பரஸ்பரம் ஒத்துழைப்பதா அல்லது அடியோடு நாசமாவதா என்பதை நாம் கால தாமதமின்றி வெகு சீக்கிரத்தில் முடிவு செய்ய வேண்டும்...

"உலகத்தில் அமைதியும் உலக நாடுகளுக்குப் பாதுகாப்பும் ஏற்படும்படி செய்யும் முயற்சியில் ஐக்கிய நாடுகள் அமைப்புக்கு பிரிட்டன் பூரண ஆதரவு அளிக்கத் தயாராக இருக்கிறது. உலக நாடுகள் ஒருமித்துப் போர் அமைப்புகளைக் குறைத்துக் கொள்வதன் மூலம்தான் ஆபத்தை அகற்ற முடியும். இவ் விஷயமாக ஏற்படும் எந்த உண்மையான திட்டத்தையும் நாங்கள் ஆதரிப்போம். இதற்காக எங்கள் ஸ்வதந்திரங்களைக் கூடத் தியாகம் செய்யத் தயாராக இருக்கிறோம்.

"மனிதனின் ஆராய்ச்சிகளால் நாகரீகம் அழியாமல் இருக்க வேண்டுமாயின், நம்பிக்கை வேண்டும்; தீர்க்க திருஷ்டி வேண்டும்; உற்சாகம் வேண்டும். மானிட வர்க்கம் உண்மையான சுதந்திரத்துடன் விளங்க வேண்டும் என்பதே எங்கள் நோக்கம்."

## டாக்டர் ஜான் மத்தாய்

உயர் பதவிகள் தானுகத் தேடிக்கொண்டு வரும் ஒரு சில பெரிய மனிதர்களில் டாக்டர் ஜான்மத்தாயும் ஒருவர் என்பதாகத் தெரிகிறது.

சில தினங்களுக்கு முன் ராஜாங்க பாங்குச் சட்டம் பார்லிமெண்டில் நிறைவேறியது யாவரும் அறிந்த விஷயம். அதன்படி இம்பீரியல் பாங்க் ராஜாங்க பாங்க் ஆகிறது. அந்த பாங்க் டைரக்டர்கள் போர்டின் தலைவராக இப்போது டாக்டர் மத்தாய் நியமிக்கப்பட்டிருக்கிறார். இந்திய சர்க்கார் அவரை அப் பதவியில் நியமித்ததும் அதை டாக்டர் மத்தாய் ஒப்புக் கொண்டதும் மிகவும் விசேஷமாகும். ராஜாங்க பாங்கின் நிர்வாகம் எதிர்காலத்தில் சரியாக நடை பெறும் என்பதற்கு இது ஒரு அறிகுறி.

## வாழ்த்துகிறோம்!

காரியத்துக்குத் தகுந்த மனிதர் கிடைப்பது அருமை; மனிதருக்குத் தகுந்த காரியம் கிடைப்பது அதை விட அருமை. இவை இரண்டும் பொருத்தமாகச் சேர்ந்திருக்கும்படியான ஒரு நியமனம் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இப்பொழுது நடைபெற்றிருக்கிறது.

திரு டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தலைவராகப் பதவியேற்றிருக்கிறார். அந்த நியமனத்தைப் பாராட்டுகிறோம்.

அவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்த அண்ணாமலைப் பல்கலைக் கழக நிர்வாகிகளை வாழ்த்துகிறோம்.

திரு நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் தமிழ் நாட்டுக்குப் பல துறைகளில் சிறந்த முறையில் தொண்டாற்றி யிருக்கிறார். சென்னை இந்து சமய நிலையக் குழுவின் தலைவராக இருந்து அவர் செய்த தொண்டு அபாரம்.

ஆனால் அவருடைய தொண்டு சமயத் துறையோடு நின்றுவிட வில்லை. மிகவும் சிக்கலான, தர்ம சங்கடமான அரசாங்க உத்தியோகஸ்தர் நியமனக் குழுவின் தலைவராக இருந்து அதைத் திறம்பட நடத்தி நல்ல பெயர் வாங்கியிருக்கிறார்.

திருச்சி ஜில்லாக் கழக உறுப்பினராகவும் அதன் தலைவராகவும் இருந்து அதற்கு ஆக்கமும் பலமும் தந்திருக்கிறார்.

கூட்டுறவுத் துறையில் புகுந்து அவர் ஆற்றியுள்ள சேவை மறக்க முடியாதது. திருச்சி ஜில்லாக் கூட்டுறவு பாங்கின் தலைவராகவும், சென்னை மாகாண



திரு நாராயணசாமிப் பிள்ளை

## கேட்ட குரல்!

## கல் ஜீரணமாகுமா?

பாஷைப் பிரச்னை சம்பந்தமாகப் பாரதப் பார்லிமெண்டில் உள்நாட்டு மந்திரி பேசியிருக்கிறார்.

## மலையேறு படலம்!

1957 தேர்தல்

பார்லிமெண்ட் அங்கத்தினர்கள்

தேர்தல் கமிஷனர் அடுத்த வருஷம் மக்கள் சபையைக் கலைந்து விடலாம் என்று யோசனை கூறியிருக்கிறார்.

## சுய கௌரவம்!

எனக்கு வேறு வேலை ஏதாவது கொடுங்கள்!

சுய கௌரவமே முக்கியம்! வேலையிருந்தாலும் சரி; வேலையில்லாவிட்டாலும் சரி!

வாடகைக் கார்

1957-ம் வருஷத்துக்குள் சென்னை நகரத்தில் ரிக்ஷாவை ஒழித்துவிடச் சர்க்கார் தீர்மானித்திருக்கிறார்கள்.



திருவனந்தபுரம் சுவாதித் திருநாள் சங்கீத சபையில், சங்கீத பூபதி மகாராஜபுரம் விஸ்வநாத ஐயருக்கு மிகவும் சிறப்பான முறையில் ஒரு பாராட்டு விழா ஏப்ரல் மாதம் நடைபெற்றது. மகாராஜபுரம் விசுவநாதய்யருக்கு ஜனாதிபதி ராஜன் பாபு இவ்வாண்டு அளித்த கௌரவ விருதைப் பாராட்டும் முறையில் இவ் விழா கொண்டாடப்பட்டது. அரசாங்கப் பிரதம காரியதரிசி ஸ்ரீ பி. வி. கே. மேனன் ஐ. ஏ. எஸ்., தலைமை வகித்தார்.

பிரபல சங்கீத வித்வானும் சங்கீத பூபதியின் சீடருமான ஸ்ரீ செம்மங்குடி சீனிவாசய்யர், தம் குருவைத் தக்க முறையில் பாராட்டி உருக்கத்துடன் பேசிய பின், குருவினிடம் தாம் கொண்டிருக்கும் அளவு கடந்த பக்திக்கு அறிகுறியாக ஒரு தம்பூரா, வைர மோதிரம், பொன்னாடை இவ்வனைத்தையும் அவரிடம் சமர்ப்பித்து வணங்கினார். சங்கீத பூபதி மேற்படி பரிசுகளை அன்போடு ஏற்றுக் கொண்டார்.

விழா, சங்கீத பூபதி மகாராஜபுரம் விசுவநாதய்யர் அவர்கள் கச்சேரியுடன் இனிது முடிந்தது. கச்சேரிக்குப் பாப்பா வெங்கடராமய்யர் வயலினும், அவரது குமாரன் இளம் மிருதங்க வித்வான் நாகராஜன் மிருதங்கமும் வாசித்தனர்.

கூட்டுறவு பாங்கின் நிர்வாக அங்கத்தினராகவும், அகில இந்திய கூட்டுறவு மகா நாட்டின் சென்னை மாகாணப் பிரதிநிதியாகவும் அவர் நல்ல தொண்டு ஆற்றி யிருக்கிறார்.

இவை எல்லாவற்றையும் விடக் கல்வித் துறையில் சென்ற பல ஆண்டுகளாக ஈடுபட்டு உழைத்து வந்திருக்கிறார். சென்னைப் பல்கலைக் கழகப் பாடதிட்டக் குழுவின் தலைவராகவும், சென்னைப் பல்கலைக் கழக ஸெனேட் சபையின் அங்கத்தினராகவும் இருந்து அவர் தொண்டாற்றி யிருக்கிறார்.

சமீபத்தில் மேல் சபை அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அரசியல் துறையிலும் அனுபவம் பெற்றார்.

அவர் பணியாற்றிய எல்லா இடங்களிலும் "இன்னும் கொஞ்ச காலம் திரு நாராயணசாமிப் பிள்ளை இருக்க மாட்டாரா?" என்றுதான் விரும்புவார்கள். அவருடைய இனிய சுபாவம் அவ்விதம் எல்லாருடைய அபிமானத்தையும் கவர்ந்திருக்கிறது. அந்த சுபாவமும், நிர்வாகத் திறமையும், பட்சபாதமற்ற நீதி உணர்ச்சியும், சுதந்திர நாட்டின் மாணவர்களுக்கு வேண்டிய பரந்த மனப்பான்மையை ஊட்டும் தினசரி நடவடிக்கையும், அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் அவருக்குத் துணை நிற்குமாக!

## அணு குண்டுகளைப் பற்றி அசோக் மேத்தா

பிரஜா சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த ஸ்ரீ அசோக் மேத்தா சென்ற வாரம் சென்னைக்கு வந்திருந்தார். முதல் காரியமாக ராஜாஜியைச் சந்தித்துப் பேசினதாகத் தெரிகிறது. ராஜாஜி அணு குண்டுப் பரிசோதனைகளை நிறுத்துவதற்கு அமெரிக்க உதவியைத் தியாகம் செய்யும்படி கூறும் யோசனையைப் பற்றி அவருக்கு ஏற்பட்டிருந்த சில சந்தேகங்களை ராஜாஜியைக் கேட்டுத் தீர்த்துக்

கொண்டதாகக் கூறியிருக்கிறார். அன்று மாலை கூடிய பத்திரிகையாளர் கூட்டத்தில், "நான் ராஜாஜி கூறும் யோசனைக்கு என் பரிபூரண ஆதரவையும் ஒத்துழைப்பையும் தருகிறேன். உலகத்துக்குக் கேடு விளைக்கும் முறையில் அமெரிக்கா புரிந்து வரும் அணு ஆயுதப் பரிசோதனைகளை நிறுத்தும்படி செய்வதற்கு அமெரிக்க உதவியைத் தியாகம் செய்வதே வழி என்று ராஜாஜி கூறுவது சரியான யோசனை.



திரு அசோக் மேத்தா

"நமக்கு மிக மிக அவசியமானதைத் தியாகம் செய்வதால் எதிராளி 'ஏன் இவன் தியாகம் செய்து நஷ்டத்துக்கு உள்ளாகிறான்?' என்று சிந்திக்கத் தொடங்குகிறான். இதுதான் ஒத்துழையாமையின் ரகசியம். இம்முறையில் தான் அமெரிக்க அரசாங்கத்தை அணு ஆயுதப் பரிசோதனைகள் சம்பந்தமாக நாம் எதிர்க்க முடியும். இதுவே காந்திமகான் காண்பித்த வழி" என்று அசோக் மேத்தா கூறினார்.

உலக நலத்தில் அக்கறை கொண்ட தலைவர்கள் தீவிர முயற்சியும் கருத்தும் கொண்டால் அணுகுண்டு பரிசோதனைத் தீங்கிலிருந்து உலகைக் காப்பாற்றும் பெருமையைப் பெறலாம்!

நம்முடைய தேசியத் திட்டங்கள் ஏதும் கெட்டுப் போகாது.

## பௌத்தர்களின் பிரார்த்தனை

மே மாதம் 6-ம் தேதி இலங்கை முழுவதிலும் விசாக் பண்டிகை சிறப்பாகக் கொண்டாடப் பட்டது. பகவான் புத்தர் பிறந்ததும், ஞானோதயம் பெற்றதும், நிர்வாணமடைந்ததும் வைசாக பௌர்ணமி தினத்தில். அந்த மூவகைப் புனிதம் வாய்ந்த தினத்தையே விசாக் பண்டிகையென்று உலகிலுள்ள பௌத்தர்கள் கொண்டாடுகிறார்கள். இலங்கை அன்றிரவு புத்தபகவானின் வாழ்க்கையைச் சித்திரிக்கும் வர்ண ஓவியங்களுடனும், தீபாலங்காரங்களுடனும் ஜகஜ் ஜோதியாகக் காட்சியளித்தது. பௌத்த ஆலயங்களில் பல்லாயிரக் கணக்கானோர் கூடிப் பிரார்த்தனை நடத்தினார்கள். பௌத்த தர்மத்தின் மெய்யறிவு இலங்கையில் பரவி, மற்ற நாடுகளுக்கு வழிகாட்டுமாக!

# சக்கரவர்த்தித் திருமகன்

## 68. புத்திமதாம் வரிஷ்டம்

தனியாகச் சிறை வைக்கப்பட்ட ஒரு ஸ்திரீ எவ்வளவு தைரியசாலியாக இருந்தாலும், எவ்வளவு திடமான உறுதி கொண்டவளாக இருந்தாலும் பல நாள் சிறையில் வைக்கப்பட்டு வாடி வதங்கிப் போனால், மனத்தாழ்ச்சி யடைந்து போவதில் ஏதொரு வியப்புமில்லை.

தன்னைக் காக்க வேண்டியவர்கள் வருவார்கள் வருவார்கள் என்று பல மாதங்கள் எதிர்பார்த்தாள். ராமனும் வரவில்லை. லக்ஷ்மணனும் வரவில்லை. மனமுடைந்து நின்றவளுக்குத் தைரியம் சொல்லுவதற்காக எவரும் வரவில்லை. ஏங்கி ஏங்கி மிகக் கஷ்டத்துடன் உயிரை வைத்துக் கொண்டிருந்தாள்.

ராக்ஷஸிகள் பேச ஆரம்பித்தார்கள்: "நாங்கள் சொல்லுவதைக் கேட்க மாட்டாயா? உன் ஜாதி மனுஷ்ய ஜாதி. உனக்குப் புத்தி இல்லை. ஒரு அற்ப மனிதனையே கட்டிக் கொண்டு அழுகிறாய். உனக்குத் தகுந்த அந்தப்புரம் ராவணேசுவரனுடைய அந்தப்புரம், எல்லா சுகங்களையும் அடையக் கூடிய இடம். அதை வேண்டாம் என்று தள்ளி விட்டு உபயோகமற்ற புருஷனைப் பற்றியே தியானித்துக் கொண்டிருக்கிறாய். ஊரிலிருந்து துரத்தப்பட்ட துரதிர்ஷ்டக்கார மனிதன் ஒருவனிடம் உனக்கு ஏன் இவ்வளவு பிரியம்? அவனை நீ ஒரு நாளும் அடைய மாட்டாய். ராவணன் சொல்வதைக் கேட்டுச் சுகத்தை அடை" என்றார்கள்.

இதைக் கேட்ட சீதை கண்ணீர் விட்டு அழுதாள். "மகா பாபமான வார்த்தைகளைச் சொல்லுகிறீர்கள். நான் ஒருநாளும் நீங்கள் சொல்வதைச் செய்ய முடியாது. ராமன் ஏழை என்றும், ஊரிலிருந்து துரத்தப் பட்டவனென்றும் சொல்லுகிறீர்கள். அதுவெல்லாம் எனக்குத் தெரியும். இந்தக் காரணங்களைக் கொண்டு புருஷனை மனைவி விட்டு விடுவது மானுட வழக்கமல்ல. ராக்ஷசேசுவரன் ஒரு மானுடப் பெண்ணை விரும்பலாகாது. மானுட ஸ்திரீ எப்படி ராக்ஷசனுக்கு மனைவியாக முடியும்? சூரியனை சூரியனுடைய பிரகாசம் தொடர்ந்து நிற்பது போல் நான், நான் மணந்த ராமனைப் பற்றி நிற்கிறேன். சசிதேவி இந்திரனைப் பற்றி நிற்பது போல், வசிஷ்ட முனிவரை அருந்ததி பற்றி நிற்பதுபோல் நான் ராகவனைப் பற்றி நிற்கிறேன்" என்றாள்.

இதைக் கேட்ட ராக்ஷஸிகள் இனி இவளிடம் சாந்தமாகப் பேசிப் பயனில்லை என்று "இவளைத் தின்று விடுவதே நலம்" என்றார்கள்.

ஒருத்தி "எனக்கு மசக்கை. இவள் மார்பைக் கிழித்து இவளுடைய இதயத்தை நாளத்துடன் இழுத்தெடுத்துத் தின்ன வேண்டும் என்றிருக்கிறது" என்றாள்.

மற்றொருத்தி "இவளைக் கழுத்தைப் பிசைந்து கொன்று விட்டு, துக்கத்தால் செத்துப் போனாள் என்று ராவணனுக்குச் சொல்லி விடுவோம். வீணாக அரசன் இவளை விரும்பித் துயரப் பட்டுக் கொண்டிருக்கிறான். 'செத்துப் போனாள்' என்று தெரிந்தால் பிறகு நம்முடைய அரசன் சுகமாக இவளை நினைக்காமல் தூங்குவான்" என்றாள்.

"இவளுடைய கல்லீரலும் பிலீகமும் மிக ருசியாயிருக்கும்" என்றாள் மற்றொருத்தி.

இன்னொருத்தி "இவளைக் கொன்று எல்லாரும் உட்கார்ந்து சந்தோஷமாகப் பங்கிட்டுக் கொண்டு சாப்பிட்டுத் தீர்ப்போம். வியஞ்சனங்களைக் கொண்டு வாருங்கள். கள்ளைக் கொண்டு வாருங்கள். இவளைத் தின்று விட்டுக் கள்ளும் குடித்து விட்டு நிகும்பிலா தேவி கோயிலில் கூத்தாடுவோம்" என்றாள்.

• • •

இப்படியெல்லாம் மிக குரூரப் பேச்சுக்களைக் கேட்டும், பயங்கர சொரூபங்களைப் பார்த்தும், சீதை "ஓ!" என்று வாய்விட்டு அழுதாள். எவ்வளவு தைரியமாக இருந்தாலும் இயற்கை வேகத்தை வழி யடைப்பது கஷ்டம். ஆனபடியால் குழந்தைபோல்

அழுதாள். அழுதபோதிலும், சித்தம் கலங்காமல் ராமனை தியானித்துக் கொண்டே யிருந்தாள்.

"பதினாலாயிரம் ராக்ஷசர்களை ஜனஸ்தானத்தில் நிர்மூலம் செய்த என் ராமன் ஏன் என்னை மீட்டுக்கொண்டு போக இன்னும் வரவில்லை? தண்டகாரண்யத்தில் விராதனை வதம் செய்த வீரர்கள் ஏன் என்னைப் பற்றி இன்னும் சும்மா இருக்கிறார்கள்? நான் இவ்விடம் இருப்பது அவர்களுக்கு இன்னும் தெரியவில்லை யென்றே எண்ணுகிறேன். தெரிந்திருந்தால் சும்மா இருப்பார்களா?

"கழுகரசன் ஜடாயுவும் அரக்கனால் கொல்லப்பட்டான். அவன் உயிர் வைத்திருந்தால் விஷயத்தைச் சொல்லியிருப்பான். ஆனால் என்னை அரக்கன் தூக்கிப் போவதைப் பார்த்துப் பொறுக்க முடியாமல் கோர யுத்தம் செய்து அவன் உயிர் நீத்து விட்டான். ராமனுக்கு நான் இருக்குமிடம் இன்னும் தெரியவில்லை யென்றே எண்ணுகிறேன்.

"ஆனால் தெரியாமலா போகப் போகிறது? இந்த லங்கையும் ராக்ஷசர்களும் அழியாமலா போகப் போகிறார்கள்? கட்டாயம் இந்த நகரத்தில் ஒவ்வொரு வீட்டிலும் அரக்க குலத்துப் பெண்கள் விதவைகளாகி அழுது புரண்டு அலையப் போகிறார்கள். இந்த நகரமும் ராவணனும் அரக்கர் குலமும் அழிந்து போவது நிச்சயம்."

இவ்வாறு தனக்குள் யோசித்துக் கொண்டிருந்தாள். யோசித்துத் தைரியம் அடைந்தாள். மறுபடியும் வேறு எண்ணங்களை எண்ணித்துத் துக்கத்தில் மூழ்கினாள்.

"என்னை இழந்த துக்கத்தினால் ஒரு வேளை ராமன் உயிரை விட்டு விட்டானோ? அப்படியே நடந்திருக்கலாம். இல்லாவிட்டால் இப்படி என்னை விட்டு விட்டு இவ்வளவு நாட்கள் சும்மா இருந்திருக்க முடியாதே! ஆஹா! அவனல்லவோ பாக்கியவான். தேவர்களோடு சேர்ந்து விட்டான். நானல்லவோ பாபம் செய்தவள், இந்த நிலையிலிருக்கிறேன். என் இதயம் கல்லாகவே இருக்க வேண்டும். இவ்வளவு நேர்ந்தும் உயிருடன் இருக்கிறேனே!"

மறுபடி வேறு பயம் தோன்றிற்று. "ஒருவேளை தவம் செய்தே ஆயுளைக் கழிக்கத் தீர்மானித்து விட்டு என்னைப் பற்றி எண்ணம் விட்டு விட்டார்களோ? இல்லை, இல்லை! அப்படி ஒரு நாளும் செய்ய மாட்டார்கள். வீரன் தன் கடமையை விட்டு விட்டு, மனைவியைப் பகைவன் வசத்தில் விட்டு விட்டு சந்நியாச வாழ்க்கையில் புகுவானா? இதை நான் எண்ணியது அறியாமை. நான் இருக்குமிடம் அவர்களுக்குத் தெரியவில்லை யென்பதே காரணம்.

"ஒருவேளை என்மேல் ராமனுக்கு இருந்த அன்பு ஓய்ந்து போய் விட்டதோ? உருவம் மறைந்தால் அன்பும் மறையும் என்கிறார்களே, ஒருவேளை அப்படி யிருக்குமோ? மறைந்தது மறந்தும் போகும் என்கிறார்களல்லவா?

"சீ, சீ, இந்த எண்ணம் பாபமாகும். என் ராமன் என்னை மறப்பானா? ஒரு நாளும் இல்லை. என்னை ராமன் மறந்து விடும்படியான குற்றம் நான் ஏதும் செய்ததில்லையே! அதுவல்ல காரணம். ஒரு வேளை ராவணன் ஏதோ திருட்டும் மோசமும் செய்து வஞ்சித்து ராஜகுமாரர்களைக் கொன்று விட்டானோ?"

ராஜாஜி

இவ்வாறு மாறிமாறிப் பல யோசனைகள் செய்துகொண்டு துயரக்கடலில் மூழ்கினாள். உயிரை விடுவதே நலம் என்கிற முடிவுக்கு வந்தாள். சிம்சுபா மரத்துக் கிளை ஒன்றில் தன் தலை மயிரைக் கொண்டு சுருக்குப் போட்டுக் கொண்டு துக்கத்திலிருந்து விடுதலை பெறலாம் என்று எண்ணினாள்.

• • •

அரக்கிகள் சீதையைத் தங்கள் எண்ணத்துக்குத் திருப்ப முடியவில்லையே என்று இன்னது செய்வது என்பது தெரியாம லிருந்தார்கள். அவர்களில் சிலர் காரியம் முடியவில்லை என்று ராவணனுக்குச் செய்தி சொல்லப் போனார்கள். சிலர் அங்கேயே நின்றார்கள்; சீதையைப் பயமுறுத்திக் கொண்டிருந்தார்கள்.

அவர்களிடையில் திரிஜடை யென்கிற ராக்ஷஸி வந்து அவர்களைக் கண்

டித்து, "மூர்க்கிகளே, என்ன உளறு கிறீர்கள்! நான் கண்ட கனவைக் கேளுங்கள். இந்த லங்கை அழிந்து போகும் காலம் நெருங்கிற்று" என்றாள்.

பிறகு தான் கண்ட கோர சுவப்னத்தை விவரித்துச் சொன்னாள்.

"சீதையை அழைத்துப் போக ராமன் சூரியனைப் போல் திவ்ய பிரகாசம் வீசிக் கொண்டு லங்கைக்கு வந்து விட்டதாகக் கனவு கண்டேன். ராவணன் அழிந்து யமனுடைய வீட்டுக்குப் போனதைக் கண்டேன்.

"சீதையை எடுத்து யானையின் மேல் ஏற்றிக் கொண்டு ராமன் சென்று விட்டதைக் கண்டேன். ராவணனும் ராக்ஷச சமூகம் முழுதும் அவலக்ஷண வஸ்திரங்கள் உடுத்திக் கொண்டு அவலக்ஷண நிலையில் யமனால் இழுத்துப் போகப்படுவதைக் கண்டேன்."

இப்படி திரிஜடை ராக்ஷஸிகளுக்குத் தான் கண்ட கெட்ட கனவைச் சொல்லி "இந்தப் புண்ணியவதியை இம்சிக்காதீர்கள். அழிந்து போவோம். இவளுடைய அருளைக் கேட்டுப் பெறுங்கள்" என்று போதித்தாள்.

இப்படி திரிஜடை சொல்லிக்கொண்டிருந்த சமயத்தில் உயிரை மாய்த்துக் கொள்ளுவதென்று நிச்சயித்த சீதைக்குப் பல நற்சகுனங்கள் திடீரென்று உண்டாயின. கண்களும் கை



கால்களும் மங்களகரமாகத் துடித்தன். மனதில் எதிர்பாராத தைரியம் தானாக உண்டாயிற்று. உயிரை நீக்கும் யோசனை மறைந்து போயிற்று.

* * *

வனத்தில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் மேலே மறைந்திருந்து பார்த்துக் கொண்டிருந்த ஹனுமான் இனி என்ன செய்யலாம் என்று யோசித்தான்.

லங்கைக்கு வந்து அங்கே சீதையைக் கண்டபின் வேறு என்ன இருக்கிறது என்று வாசகர்கள் எண்ணலாம். ஆனால் காரியம் அவ்வளவு எளிதாக இல்லை. ஹனுமான் யோசித்த விஷயங்களைக் கேளுங்கள்:

"மற்றவர்கள் செய்ய முடியாத காரியத்தைச் செய்து விட்டேன். கடலைத் தாண்டி சீதை யிருக்குமிடம் கண்டாயிற்று. ராக்ஷசர்களுடைய நகரம், அதன் காப்பு முதலிய எல்லா விஷயங்களையும் பார்த்து அறிந்து கொண்டேன். பகைவனுக்குத் தெரியாமல் தூதனாகிய நான் செய்ய வேண்டியது செய்தாயிற்று. ஆனால் நிலைமை அபாயமாக இருக்கிறது. கண்ட விஷயங்களை ராமனிடமும் அரசனிடமும் சொல்ல நான் இப்போது திரும்பிப் போய்விட்டேனானால் இங்கே நடக்கும் சம்பவங்கள் என்ன? ராமலக்ஷ்மணர்களும் வானரசேனையும் இவ்விடம் வருவதற்குள் சீதை துக்கத்தைப் பொறுக்க முடியாமல் உயிரை விடுவாள். அப்போது எல்லாக் காரியமும் அழிந்ததாகவே யாகும். சீதையைக் கண்டது மட்டிலும் போதாது. அவளுக்கு ஆறுதல் மொழிகள் சொல்லி, ராமனுடைய செய்தியை அவளுக்குச் சொல்லித் தைரியப்படுத்தி விட்டே செல்ல வேண்டும். சீதையிடம் பேசாமல் திரும்பினால் ராமனுக்கு என்ன திருப்தியாகும்? ஆனபடியால் எப்படியாவது வழிதேடி சீதையுடன் பேசியே தீர வேண்டும்."

ஆஞ்சநேய ஸ்தோத்திர மாலையில் 'புத்திமதாம் வரிஷ்டம்' என்று ஒரு பெயர் வரும். அதாவது 'புத்திமான்களில் சிறந்தவன்' என்று. அது உண்மைதானே!

"சீதையுடன் எந்த பாஷையில் எந்த உருவத்தில் நின்று நான் பேசுவது நலம்? இந்த அசோக வனத்தில் திடீர் என்று ஒரு குரங்கு வந்து ஏதேனும் பேச வந்தால் நிச்சயமாக சீதை, 'இது ஒரு மோசம். ராவணனுடைய வஞ்சக வேலை' என்று எண்ணுவாள். பயப்படுவாள். கூக்குரலும் இடுவாள். அவள் இப்போது இருக்கும் மனோ நிலையில் இவ்வாறுதான் நடக்கும். காவலிருக்கும் ராக்ஷஸிகள் இப்போது தூங்கிப் போயிருப்பவர்களும் எழுந்து விட்டு என்னைக் கண்டு கொள்வார்கள். இவன் பகைவனுடைய தூதன், மோச வேஷக்காரன் என்று எண்ணி ராக்ஷசர்களை அழைத்து வருவார்கள். இவ்விடம் பெரிய யுத்தம் நடைபெறும். நானும் சும்மா இருக்கமுடியாது. எதிர்ப்பேன். அவர்களை வதம் செய்வேன். உண்மை. ஆனால் சீதையை மீட்கும் காரியம் கெட்டுப் போகும். என்னைப் பிடித்துச் சிறையில் வைப்பார்கள். பிறகு ராமனுக்கு விஷயம் சொல்லக் கூடியவர்கள் யாருமே இல்லை. அப்படி ஆகாது, நான் பிடிபடாமல் யுத்தம் வெற்றிகரமாகச் செய்வேன் என்றாலும் சங்கடமும் காயங்களும் பட்டு, பிறகு கடல் தாண்டும் சக்தி இழந்தாலும் இழப்பேன். நான் வந்து சீதையைப் பார்த்தது பயனற்றுப் போகும். அவசரப்பட்டு ஏதும் செய்யலாகாது. வந்த காரியம் கெட்டுப் போகும் வழியில் பரபரப்பாக எந்தக் காரியமும் செய்யலாகாது. என்னை நம்பியல்லவா அரசனும் ராமனும் காத்திருக்கிறார்கள்? என்னுடைய சிறிய தவறு பெரும் நஷ்டத்தில் முடியும். எப்படியும் சீதையுடன் பேசிவிட்டே திரும்ப வேண்டும். அப்படிப் பேசுவதில் அவளுக்குப் பயம் உண்டாகாதபடி முதலில் அவள் உள்ளத்தில் நம்பிக்கையும் தைரியமும் உண்டாக்க வேண்டும். என்னை ராவணன் என்றாவது அவனுடைய ஆள் என்றாவது சந்தேகப்படாமல் இருப்பதற்கு என்ன செய்யலாம்?

"சரி, ராமனுடைய குணங்களையும் சரித்திரத்தையும் மதுரமான முறையில் அவள் மட்டும் கேட்கும்படி சொல்லுவேன். அப்போது சீதையின் உள்ளத்தில் சந்தோஷமும் நம்பிக்கையும் உண்டாகும். பயப்படமாட்டாள். பிறகு காரியம் நிறைவேறும்."

இவ்வாறு யோசித்து மரத்தில் மறைந்திருந்தே மெதுவான குரலில் 'ராம்', 'ராம்' என்று ஜபம் செய்ய ஆரம்பித்தான்.


பரிபூர்ண மாக நம்புவதற்க்கும்...
கவர்ச்சிகர மானஅமைப்புக்கும்...
உட்பூச்சுக்கும்,வெளிப்பூச்சுக்கும்...


நேர்த்தியான வர்ணவேலைகளுக்கும்...
அதைப்பற்றி சந்தேகமே இல்லை...அதுதான் எல்லோரும் விரும்பும் நேர்த்தியான ஸிந்தடிக் எனமல்...
ஷாலிமார் ஸுபர்லாக்
ஸிந்தடிக் எனமல்
ப்ரஷ்ஷினுல் பூசலாம், தோய்த்துப்பூசலாம், அல்லது ஸ்பிரே பண்ணலாம், பல தடவைகள் கழுவுவதற்கு ஏற்றது. 38 விதப் பளபளப்பான கலர்களில் கிடைக்கின்றது.

பெட்டியும் படுக்கையுமாக உள்ளே நுழைந்த சங்கரனைக் கண்டதும் அவன் தாயாருக்கு ஒரே ஆச்சரியமா யிருந்தது. வாசற் புறம் எட்டிப் பார்த்தாள், அவள். சங்கரன் வந்து இறங்கிய மாட்டு வண்டி திரும்பிப் போய்க் கொண்டிருந்தது.

"என்னடா, இது! ஒரு கடுதாசி கூடப் போடாமல் திடுமென்று வந்திருக்கிறாயே! உடம்பு ஒன்றுமில்லையே! நீ மட்டுமா வந்தாய்! ஜானகி எங்கே!" என்று கேள்விமேல் கேள்வியாக அடுக்கினாள், சங்கரனின் தாயார் விசாலாட்சி.

"ஒரு மாசம் லீவு போட்டிருக்கிறேன், அம்மா! வருஷப் பிறப்புக்கு உன்னோடுதான் இருக்க வேண்டும் என்று தோன்றியது. வந்தேன்!" என்றான் சங்கரன்.

"வந்தமட்டும் சந்தோஷந்தான். ஜானகியையும் அழைத்துக் கொண்டு வரக் கூடாதோ! ஜானகி சௌக்கியந்தானே!" என்று குசலம் விசாரித்தாள் விசாலாட்சி.

"எல்லாரும் சௌக்கியந்தான், அம்மா! அவளுக்கு ஆபிஸிலே வேலை ரொம்பக் கடுமை. ஆபீஸ் வேலைதானே அவளுக்கு முக்கியம்! உம்... அது கிடக்கட்டும். நான் போய்ப் பல் தேய்த்து விட்டு வருகிறேன், நீ காப்பி போடு!" என்று கூறி விட்டுப் புழக்கடைப் பக்கம் சென்றான் சங்கரன்.

அவன் திரும்பி வந்தவுடன் காப்பியைக் கொண்டு வந்து வைத்த விசாலாட்சி, "ஜானகி ஏன் வரவில்லை! நிஜத்தைச் சொல். வருஷப் பிறப்புக்கு அவளுக்கு மாத்திரம் ஆபீஸ் உண்டா, என்ன!" என்றாள் குழைந்த குரலில்.

"அவளுக்குப் பரீட்சை தேறி விட்டதம்மா! அவள் சூபரிண்டெண்ட் ஆகப் போகிறாள்" என்றான் சங்கரன் குரோதம் நிறைந்த குரலில்.

"உனக்கு என்ன ஆச்சு! நீயும் எழுதி யிருந்தாயே!" என்று தாயார் கேட்டாள்.

அவன் முகம் கனங்கி விட்டது. "எனக்கா! இரண்டு தடவை இதற்கு முன்பு எழுதினேனே, என்னவாயிற்று! அதேதான் இப்போதும். எனக்குத் தேறவில்லை; அவளுக்குத் தேறிவிட்டது. இனிமேல் சூபரிண்டெண்ட் ஜானகியின் கணவன் நான்! உன் மாட்டுப் பெண்ணுக்குப் பரீக்ஷை முடிவு தெரிந்ததிலிருந்து தலைகால் தெரியவில்லை. முடிவு தெரிந்த அன்றைக்குத் தன் சிநேகிதிகளுக்கெல்லாம் 'தேநீர் விருந்து' வைத்தாள். இருபது ரூபாய்க்கு மேல் செலவாம்!" என்று ஏகத்தாளமாகக் கூறினான் சங்கரன்.

அவன் மனநிலை ஓரளவு விசாலாட்சிக்கு விளங்கியது. "இதற்காகவா கோபித்துக் கொண்டு அவளை விட்டு விட்டு வந்தாய்! பேஷ்! மூன்று வருஷமா ஒரு ஆண் பிள்ளைக்குத் தேறாத பரீட்சையிலே ஒரு பெண் முதல் வருஷமே தேறிவிட்டாளே என்று நீ வெட்கப் படாமல், கோபப்பட்டு என்னடா பிரயோசனம்! உனக்குத் துப்பு இல்லை, பாஸ் பண்ண! அதுக்கு அவளா பொறுப்பு!" என்று அவன் அம்மாவே அவனை இடித்துக் கூறினாள். அதைக் கேட்டதும் அவன் உள்ளம் எரிமலை போல் கொந்தளித்தது.




"சரிதான் அம்மா! நீயும் அவள் கட்சிதான் போலிருக்கிறது! உனக்குக்கூட நியாய, அநியாயம் தெரியாமல் போய் விடுமென்று நான் நினைக்க வில்லை. நிலைமையைச் சீர்தூக்கிப் பார்த்தால் உனக்கு உண்மை புலனாகும். இதோ அவள் நாளைக்கே சூபரிண்டெண்ட் ஆகி விடுவாள். அதே காரியாலயத்தில் நான் ஒரு சாதாரண குமாஸ்தா! அவளுக்கு அடங்கி நடக்க வேண்டியவன்! இதைவிட அவமானம் எனக்கு என்ன வேண்டும்!" அவன் உள்ளத்தில் வீசிய புயலின் வேகம் வார்த்தைகளின் கடுமையிலிருந்து விசாலாட்சிக்கு விளங்கியது.

"நான்தான் சொன்னேனே—நீ அவமானப் பட இதில் ஒன்றுமே யில்லை. அப்படி நீ உன் கௌரவம் குறைந்து விட்டதாக எண்ணினால், அது உன் தோல்வியால் விளைந்ததுதானே யொழிய அவளுடைய வெற்றியால் இல்லை. அவள் பாஸ் பண்ணினால், அது அவள் பெருமைப்பட வேண்டிய விஷயம். வீட்டு வேலை

களையும் கவனித்துக் கொண்டு, ஆபீசுக்கும் போய் வருவதோடு, பரீட்சையிலும் ஒரு பெண் தேறி விட்டால், அது அவளுடைய புத்தி சாலித்தனத்தைத்தானேடா காண்பிக்கிறது!'' என்றாள் விசாலாட்சி. மகன் கட்சியில் நியாயம் இருப்பதாகவே அவள் கருதவில்லை.

''பரீட்சை தேறுவதற்குக் கொஞ்சம் 'அ'று விலாசமும் வேண்டும், அம்மா! மூளைமாத்திரம் போதாது! நானுந்தான் ஆனர்ஸ் முதல் வகுப்பிலே தேறினேன். ஜானகி வெறும் வறட்டு பி. ஏ. தானே! அவளுக்கு இருக்கிற மூளை எனக்கில்லை என்று சொல்லுகிறாய்!'' என்று பொருமினான் சங்கரன்.

''அதிர்ஷ்டம் வேண்டாம் என்று யார் சொன்னது! அந்த அதிர்ஷ்டம் உனக்கு இல்லை; அவளுக்கு இருந்தது. அதற்காக நீ ஏன் வெட்கப்பட வேண்டும்! ஜானகியிடம் இதற்காக நீ கோபித்துக் கொண்டு ஏதாவது பேசினாயா!'' என்று கேட்டாள் விசாலாட்சி.

தாயார் தன்னைத் தூண்டிக் கேட்கக் கேட்க அவன் அடக்கிக் கொள்ள முயன்ற ஆத்திரம் நீரில் அமிழ்த்திய கெட்டிபோல் பீறிக்கொண்டு வெளி வந்தது.

''அம்மா! உனக்கு எவ்வளவு சொன்னாலும் புரியவில்லை! காரியாலயத்தில் நாலு பேர்கள் நாலுவிதமாகப் பேச இடம் கொடுக்கிறது இந்தச் சந்தர்ப்பம். எனக்கு வெளியே தலை காட்டவே முடியவில்லை. அதற்காகவேதான் ஒரு மாதம் லீவு போட்டேன். ஜானகியிடம் எனக்குக் கோபமில்லை. அவளைப் போலவே எனக்கும் பரீட்சை தேறியிருந்தால் பரவாயில்லை. ஆனால், இந்த நிலைமையில் நாங்கள் இருவரும் ஒரே காரியாலயத்தில் வேலை செய்வது இனிமேல் நடக்காத காரியம். நான் ஒருவன் சம்பாதிப்பது போதாதா! அப்படியொன்றும் 'பசை'யில்லாத குடும்பமில்லையே நம்முடையது!'' என்றான் சங்கரன்.



''நீ அவளிடம் என்னதான் சொன்னாய்!''

''ஒன்றும் சொல்லவில்லை. ஒன்று, அவள் வேலையை விட்டுவிட வேண்டும், அல்லது நான் வீட்டில் உட்கார்ந்து கொள்ள வேண்டும். அவள் சம்பாதித்துப் போட வேண்டும் எனக்கு! உனக்கு எது உசிதமாகப் படுகிறதோ அதை நீயே அவளுக்கு எழுதி விடு! அந்த அகம்பாவக்காரியிடம் நான் இதைப் பற்றிப் பேசவே விரும்பவில்லை'' என்று கூறினான் சங்கரன் உறுதி தொனிக்கும் குரலில்.

''அவளுக்கு அகம்பாவமிராது. உனக்குத்தான் அவளிடம் பொறாமை!'' என்றாள் விசாலாட்சி.

''விசித்திரமான மாமியார்—மாட்டுப் பெண் நீங்கள்! பொறாமை என்றே வைத்துக் கொண்டாலும், அது எனக்கு மட்டுமல்ல. பரீட்சை தேறாத இருநூறு குமாஸ்தாக்களுக்குத் தான்!'' என்றான் சங்கரன்.

''அவர்கள் பொறாமைப் பட்டால் அதற்கு நீ என்ன செய்ய முடியும்! ஜானகிதான் என்ன செய்யலாம்! அடுத்த தடவையாவது பரீட்சை தேறுவதற்குரிய வழியைப் பார்க்கிறதுதான் விவேகம். சரி, இராத்திரியெல்லாம் நீ கண் விழித்து ரயில் பிரயாணம் செய்திருக்கிறாய். அலுப்புத்தீரக் கொஞ்ச நேரம் தூங்கு, போ! இதோ, நான் சமையலுக்கு ஏற்பாடு செய்கிறேன்'' என்று சொல்லிவிட்டு எழுந்தாள் விசாலாட்சி.

கூடத்திலிருந்த ஊஞ்சல் பலகையில் வந்து படுத்த சங்கரனுக்குத் தூக்கமே வரவில்லை. ஒவ்வொரு தடவையும் அவன் சாதாரணமாக ரஜாவில் கிராமத்துக்கு வரும்போதெல்லாம், ரயில் பிரயாணத்தின் ஆயாசம் தீர ஊஞ்சலில் படுத்துச் சற்று நேரம் நிம்மதியாக உறங்குவான். அதற்குப் பிறகுதான் ஸ்நானம், சாப்பாடு எல்லாம். ஆனால் இப்போதைய அவன் மன நிலை தூக்கத்துக்கு இடமே தரவில்லை. எண்ணற்ற நினைவுகள் அலையலையாக எழுந்தன. மனக் குரங்கு கிளைக்குக் கிளை தாவிக் கொண்டிருந்தது.

'நான் ஏன் அவளை—ஜானகியை—மணந்து கொண்டேன்! படித்த பெண்களின் லட்சணமே இதுதான்! படிப்பற்றவளாயிருந்தால் என் அபிப்பிராயத்துக்கு மாறாக நடந்து கொள்ளுவாளா! என் தயவை எதிர்பார்க்கும் நிலையில் இல்லாததால்தானே அவள் என்னை மதிக்கவில்லை!

ஆனால், படித்த பெண்கள் எல்லோருமே இப்படித்தான் இருப்பார்களா, என்ன! காஷியர் கனகசபையின் மனைவி கூடப் படித்தவள்தான். பி. எஸ்ஸி. பட்டத்தைக் காற்றில் பறக்க விட்டு விட்டு, குடும்பத்தைப் பராமரிப்பதில் கவனம் செலுத்தவில்லையா! படித்ததில் தவறு ஏதுமில்லை. அதே காரியாலயத்தில் உத்தியோகத்திலிருக்கும் பெண்ணை மணந்து கொண்டது தான் தவறு! அது மட்டுமா! 'கல்யாணத்துக்குப் பின் என்னை வேலையை விட்டு விலகும்படி நிர்ப்பந்திக்கக் கூடாது' என்று அவள் வாக்குறுதி கேட்ட போது கூட நான் சிறிதும் தயங்கவில்லையே! அவள் அழகு என் அறிவை மயக்கி விட்டது. இப்போது வருந்தி என்ன பயன்!'—நினைவுச் சுழலில் சிக்கிய சங்கரன் எப்போது கண்ணயர்ந்தான் என்பது அவனுக்கே தெரியாது!

★

சங்கரனுக்குக் கல்யாணம் நடந்ததே ஒரு விசித்திர சம்பவந்தான்!

அன்று ஞாயிற்றுக்கிழமை மாலையில் கடற் கரைக்கு

உலாவச் சென்ற சங்கரன் மெரினா சாலையின் நடைபாதையை யொட்டிப் பதிக்கப்பட்டிருந்த கருங்கல் திண்ணையின்மீது உட்கார்ந்திருந்தான். சூரியன் மறைந்து அரை மணிக்கு மேலிருக்கும். வானில் படர்ந்திருந்த செக்கர் வண்ணம் சிறிது சிறிதாக மங்கிக் கருமை சூழ்ந்தது. கடற்கரைப் பக்கமிருந்த நடைபாதையை யொட்டிக் கண்ணுக்கெட்டிய தூரம் வரிசையாக நிறுத்தப்பட்டிருந்த கார்கள் 'மர்க்குரி' விளக்கின் ஒளியில் தகதக வென்று பிரகாசித்தன. அவன் அமர்ந்திருந்த இடத்தில் ஜனசந்தடி குறைந்து விட்டது. உப்பங் காற்றின் சுகத்தை அநுபவித்த வண்ணம் நடைபாதையோடு செல்லுகிறவர்களின் மீது பார்வையை ஓட்டியவனாய் உட்கார்ந்திருந்த சங்கரன் திடீரென்று நிமிர்ந்து உட்கார்ந்தான். ஒரு பெரியவர் கைத்தடியை ஊன்றிக்கொண்டு சிறிது தூரம் போவதும், மறுபடி திரும்புவதுமாக இருந்தார். அவர் உலாவுகிறார் என்று முதலில் நினைத்தான் சங்கரன். பிறகு அவர் எதையோ தேடுவது போல் தோன்றவே, அவர் அருகில் நெருங்கிப் போய், "என்ன ஸார், தேடுகிறீர்கள்! ஏதாகிலும் காணாமல் போய் விட்டதா!" என்று கேட்டான்.

பெரியவர் இலேசாகச் சிரித்துவிட்டு, "ஒன்றும் காணாமல் போய் விடவில்லை. கண்டுபிடிக்கத்தான் கண் பார்வையில்லை. இங்கேதான் எங்கேயோ காரை நிறுத்தி விட்டு நடைபாதையோடு கொஞ்ச தூரம் உலாவிக்கொண்டிருந்தேன். அகஸ்மாத்தாக என் பழைய நண்பர் ஒருவரைச் சந்திக்கவே அவரோடு பேசிக் கொண்டு கொஞ்ச தூரம் போனேன். சற்று நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுத் திரும்புவதற்குள் இருட்டி விட்டது. அஸ்தமித்து விட்டதா! அதனால் எனக்குக் கண் பார்வை சற்று மந்தமாகி விட்டது. இத்தனை கார்களுக்கிடையில் என் காரை எங்கே என்று தேடுவேன்!" என்றார். அதனால் அவர் காரைத் தேடித் தரப் போய் அவர் வற்புறுத்தியதன் பேரில் அவரோடு அவன் அவருடைய வீட்டு வரைக்குமே போய் வரும்படியாயிற்று.

பெரியவர் வீட்டுக்குள் அடிஎடுத்துவைத்ததும் வைக்காததுமாக, "அப்பா! வந்து விட்டீர்களா! ஏன் இவ்வளவு நாழிகை! எனக்கு ரொம்ப விசாரமாகப் போய் விட்டது!" என்று தேனில் குழைத்த வார்த்தைகளுடன் எதிரில் வந்து நின்ற ஜானகியைக் கண்டதும் சங்கரன் பிரமித்து விட்டான்!

"அட நீங்களா! இங்கே எங்கே!" என்றாள் ஜானகி வியப்புடன் அவனைப் பார்த்து.

"இன்று இவர் உதவியால்தானம்மா இவ்வளவு சீக்கிரமாக வீடுவந்து சேர முடிந்தது. வலிய வந்து உதவினார். ஏன், அம்மா! இவரைத் தெரியுமா என்ன உனக்கு!" என்று ஜானகியைக் கேட்டார் கிழவர்.

"இவரைத் தெரியாதவர்கள் எங்கள் காரியாலயத்திலேயே யாரும் இருக்க முடியாது, அப்பா! குமாஸ்தாக்கள் சங்கத்தின் காரியதரிசி இவர். காரியாலயத்தில் ரொம்ப நல்ல பெயர் இவருக்கு!" என்றாள் ஜானகி, பெரியவரை நோக்கி.

ஜானகியின் கையினால் கொடுக்கப்பட்ட சர்பத்தை ருசித்துக் கொண்டே அந்த அமுத மொழிகளைக் கேட்ட சங்கரனுக்கு, 'இவர் ரொம்ப நல்லவர்' என்று பெரியவரிடமே தன்னைப் பற்றி அவள் சிபாரிசு செய்ததாகவே பட்டது! பெரியவரின் மனத்திலும் அதே அபிப்பிராயந்தான் ஏற்கெனவேயே உதித்து விட்டதே!

"இவள் என் தம்பி பெண். குழந்தையிலிருந்தே என்னுடன் தானிருக்கிறாள். பெண் குழந்தையில்லையே என்ற என் குறையைப் போக்கி விட்டாள். இவள் ரொம்பப் பிடிவாதக்காரி. இவள் படிப்புக்காக நான் செலவழித்த தொகையை எனக்குச் சம்பாதித்துத் தந்துவிட வேண்டுமாம்! அதற்காக வேலைக்குப் போகிறாள். இவ்வளவு சொத்து இருக்கும்போது நீ ஏன் வேலைக்குப் போகவேண்டுமென்று நான் எவ்வளவோ தடுத்துக் கூறியும் கேட்காமல் பிடிவாதமாக வேலைக்குப் போய் வருகிறாள். என்ன செய்வது சொல்லுங்கள்!" என்றார் பெரியவர்.

"அதில் என்ன, சார் தவறு! செலவழித்த பணத்தைத் திரும்பச் சம்பாதிக்க வேண்டியதும் ஒரு விதத்தில் நியாயந்தான்" என்று அவளுக்குப் பக்கபலமாகப் பேசிவிட்டுக் கிழவரின் காரிலேயே தன் வீட்டுக்குக் கிளம்பினான் சங்கரன்.

இதையொட்டி ஏற்பட்ட பல சந்திப்புக்களின் விளைவாக ஜானகியின் உள்ளத்தையும் பெரியவரின் நன்மதிப்பையும் பெற்ற சங்கரன் ஒரு சுபதினத்தில் அவள் கணவன் ஆனான். தான் வாக்குறுதியளித்தபடி அவனை இதுவரை



உத்தியோகத்திலிருந்து விலகும்படி அவன் கேட்டதேயில்லை. ஆனால் இப்போது அதற்கு அவசியமேற்பட்டதாகக் கருதினான், அவன். பரீட்சை முடிவு வெளியான தினம், இடைவேளையின்போது அவன் சகபாடிகள் 'கான்டீனில்' பேசிக் கொண்டிருந்ததைச் செவி மடுத்த பிறகும், அவன் வாளாவிருப்பது அவ்வளவு சாத்தியமாயில்லை.

அவன் நண்பன் பஞ்சாமி ஜயராமனிடம் சொல்லிக் கொண்டிருந்தான்: "ஏன்டா! நீயும் நானுந்தான் மூணு வருஷமாப் பரீட்சை எழுதிக் கிழிக்கிறோமே! நேற்று வந்த ஒரு பெண் பாஸ் பண்ணி விட்டாள், பார்த்தாயா! நாக்கைப் பிடுங்கி எறிந்து விட்டாலென்ன என்று தோன்றுகிறது!"

"சே, சே! கைதான் எச்சிலாகப் போகும்! நீயும் நானும் மாத்திரமென்ன! அவள் புருஷன் சங்கரனுந்தான் நம்ம 'கோஷ்டியில்' சேர்ந்திருக்கிறானே!' அவனுக்கு இல்லாத ரோஷம் உனக்கு மட்டுமென்னடா வந்தது!"

"நாளைக்கு அவளுந்தான் சூபரின்டென்ட் ஆகப் போகிறாள். அவள் உத்தரவுக்குக் கேற்ப படிந்துதானே நடக்க வேண்டும், நாமெல்லாரும்!" என்றான் ஆத்மநாதன்.

"சங்கரன் கூடத்தான்!" என்றான் பஞ்சாமி.

"இவ்வளவு நாட்களும் வீட்டில் மட்டும் மனைவிக்கு அடங்கிப் போனால் போதுமென்றிருந்தது, அவனுக்கு! இனிமேல் ஆபீஸிலும் அவளுக்குக் கை கட்டிச் சேவகம் செய்ய வேண்டும்!" என்று சோமு சொன்னதும் அனைவரும் 'கொல்' லென்று சிரித்தனர்.

"என்ன இருந்தாலும் ஒரு பெண்ணுக்கு அடங்கி ஆண் பிள்ளைகள் வேலை செய்யவேண்டுமென்றால், அதுவும் அவள் புருஷனே வேலை செய்ய வேண்டுமென்றால் அது கொஞ்சம் இளப்பம்தான்!" என்றான் பஞ்சாமி. இந்தப் பேச்சைக் கேட்டபின் ஒரு ஆண் மகனின் உள்ளம் என்ன பாடுபடும்!

அன்று மாலையே அவளிடம் இதைப் பிரஸ்தாபித்து விடவேண்டுமென்ற உறுதியுடன் சங்கரன் வீடு திரும்பினான். ஆனால் ஏனோ அவனுக்கு அதற்கான துணிச்சல் இல்லை; மனச்சாட்சியும் இடந்தரவில்லை. ஏற்கெனவே அவளுக்கு வாக்குறுதி யளித்திருந்தான் அல்லவா! அதனால்தான் இதை நேரில் அவளிடம் சொல்லுவதைவிடத் தன் தாயார் மூலம் தெரிவிப்பது சிலாக்கியம் என்று தோன்றவே ஒரு மாதம் ரஜாவுக்கு எழுதி விட்டு, யாருக்கும் சொல்லாமல் கிராமத்துக்குக் கிளம்பி வந்து விட்டான்.

* * *

அன்று வருடப் பிறப்பு. காலையில் காவிரிக்குப் போய் ஸ்நானம் செய்து விட்டுத் திரும்பிய சங்கரன் உள்ளே தன் தாயாருடன் பேசிக் கொண்டிருந்த ஜானகியைக் கண்டு பிரமித்து நின்றான், ஒரு கணம். 'இவள் எப்போது வந்தாள்! யார் துணையுடன் வந்தாள்! ஏன் வந்தாள்!' என்றெல்லாம் தன்னைத்தானே கேட்டுக் கொண்டானே யொழியப் பேச வாயெழவில்லை, அவனுக்கு.

"ஏன்டா, சங்கரா அப்படிப் பார்க்கிறாய்! நீ ஜானகியிடம் சொல்லிக் கொள்ளாமலேயே வந்துவிட்டாயாமே!" என்றாள் அவன் தாயார்.

"ஏன், ஆபீஸிலேதானே அவள் சூபரின்டென்ட் ஆகப்போகிறாள்! வீட்டில் இல்லையே! நான் என் இஷ்டப்படி எங்கேயாவது கிளம்பினால், அதற்குக் கூட இவள் உத்தரவு வேண்டுமா, என்ன!" என்றான் சங்கரன்.

அவன் தாயார் ஏதோ பதில் சொல்ல வாயெடுத்தாள். அதற்குள் அவன் ஜானகியை நோக்கி, "நீ ஏன் இங்கே வந்தாய்!" என்று சீறி விழுந்தான்.

"நீங்கள் வந்ததால்தான் நானும் வந்து விட்டேன். பெரியப்பாதான் கொண்டு வந்து விட்டார். கும்பகோணம் வரையில் போயிருக்கிறார். சாயங்காலம் வந்து விடுவார்" என்றாள் ஜானகி, சாந்தமாக.

"என் வீட்டுக்கு நான் வந்தேன். நீ வரக் காரணம்!" என்று கேட்டான் சங்கரன்.

"இது என் வீடு கூடத்தான்" என்றாள் ஜானகி சிரித்த வண்ணம். அந்தச் சிரிப்பு அவனை நெருப்பாய்த் தகித்தது அப்போது.

"அப்படி நீ நினைப்பதாகத் தெரியவில்லையே! சுயமாகச் சம்பாதிக்கிறாய்; சூபரின்டென்ட் ஆகப் போகிறாய் நாளைக்கே! என் தயவை நீ ஏன் எதிர்பார்க்க வேண்டும்!"

"அப்படியெல்லாம் எதுவும் நடக்காது. கவலைப்படாதீர்கள்" என்றாள் ஜானகி.

இந்தப் பதில் சங்கரனைத் திடுக்கிட வைத்தது. "ஏன்! நீ சொல்றது புரியவில்லையே..." என்று குழப்பத்துடன் வினவினான், அவன்.

"அவள் வேலையை ராஜிநாமா செய்து விட்டாள்!" என்று அவன் தாயாரே விளங்கக் கூறினாள். ஜயராமனுக்கு ஆச்சரியம் எல்லை மீறிப் போயிற்று.

"ஏன்! எனக்காகவா! நான் பரீட்சையில் தேறவில்லையே என்று எனக்காகப் பச்சாத்தாபப்பட்டு நீ வேலையை விட்டு விட்டாயா!" சங்கரனின் குரலில் ஏளனம் கலந்திருந்தது.

"அப்படித் தானிருக்கட்டுமே!" என்றாள் அவன் தாயார்.

"என் படிப்புக்கான செலவு மூவாயிரமும் நான் சம்பாதித்தாயிற்று. மேலும், எப்படியும் இன்னும் ஒன்றிரண்டு மாதங்கள் வரைதானே நான் ஆபீசுக்குப் போக முடியும்!" என்றாள் ஜானகி நாணத்துடன்.

"அதற்குப் பிறகு......!" அவன் குரலில் கடுமை சிறிது குறைந்திருந்தது.

"நாளும் கிழமையுமாக மஹாலக்ஷ்மி போல வீட்டுக்கு வந்திருக்கிற பெண்ணோடு என்னடா வம்பு வளர்க்கிறாய்! பரீட்சை பாஸ் பண்ணத் தெரியாத போனாலும் ஈர வேஷ்டியோடு நின்று கொண்டு மனைவியிடம் சண்டை பிடிக்கவாவது தெரிந்திருக்கிறதே, உனக்கு! கெட்டிக்காரன்தான், போ!" என்று விசாலாட்சி கடிந்து கொள்ளவே அவன் தன் அறைக்குத் திரும்பினான்.

"வயிறும் பிள்ளையுமாக ஆபீசுக்குப் போக ஒரு பெண்ணுக்கு வெட்கமாயிராதோ! இது தெரிய வேண்டாமா, ஒரு, உத்தியோகஸ்தனுக்கு! நீ உள்ளே வா, ஜானகி!" என்று தன் தாயார் கூறிய வார்த்தைகளைக் கேட்டுச் சங்கரனின் உள்ளம் பூரித்தது. அவன் வாக்குறுதிதான் நிறைவேறி விட்டதே!



உ

ஸ்ரீ கற்பக விநாயகர் துணை

# சிதம்பரம் ஸ்ரீ நடராஜப்பெருமான் திருக்கோயில் திருப்பணி

# மஹா கும்பாபிஷேகம்

**மன்மத வருஷம் ஆனிமீ 23உ**
**(7-7-55) வியாழக்கிழமை**

○●○

சிவத்தலங்களுள் 'கோயில்' என்ற சைவத் திருமறைகளில் சிறப்பித்துப் போற்றப் பெறுவது தில்லையம்பதியாகும். புலிக்கால் முனிவராகிய வியாக்கிரபாதரும், பதஞ்சலி முனிவரும் சைவத் திருமுறை யாசிரியர்களும், வேந்தர், குறுநில மன்னர், படைத் தலைவர், அமைச்சர், செல்வர், பொதுமக்கள் ஆகிய எல்லா மக்களும் இப்பதியில் உள்ள பொன்னம்பலத்தில் ஆடல் புரியும் நடராஜப் பெருமானை வழிபட்டு இம்மை மறுமை 'இன்பங்களை அடைந்துள்ளார்கள். "மூர்த்தியம்பலக் கூத்தனது உருவே, ஏத்திடுந் தலம் எழில் புலியூரே தீர்த்தமென்பது சிவகெங்கையே" என மூர்த்தி தலம், தீர்த்தம் ஆகிய இம்மூன்றினுலும் மூதன்மை பெற்று விளங்குவது பெரும் பெற்றப் புலியூராகிய இச் சிதம்பரமாகும். ஆதலால் தில்லைப் பெருங்கோயில் "பூலோக கைலாயமென ஆன்றோர்களால் போற்றப் பெறுவதாகும்.

இத்தலத்தின் இறைவன் உலகெலாம் உய்யத் திருநடனம் செய்யும் அருள் நிலையமாக விளங்குவது கனகசபையாகிய பொன்னம்பலமாகும். ஞான ஆகாசமாகத் திகழும் இப் பொன் மன்றத்தை முடிவேந்தர் பலரும் செம் பொன்னுல் வேய்ந்து வழிபட்டுள்ளார்கள்.

தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் ஆடல் புரியும் கூத்தப்பிரானது அருட் கலையே உலகிலுள்ள திருக்கோயில்கள் எல்லாவற்றிலும் நிலைபெற்று உயிர்களை உய்விக்கின்றது எனவும், ஒவ்வொரு நாளும் அர்த்தயாமத்தில் அவ்வருட் கலைகள் எல்லாம் மீண்டும் இத் தில்லையம்பலத்திலே வந்து ஒடுங்குகின்றன எனவும் பாரதநாட்டு அருள் நூல்கள் கூறுகின்றன. இத்தகைய சிறப்பு வாய்ந்த இத் திருக் கோயிலுக்கு 63 ஆண்டுகளுக்கு முன் கும்பாபிஷேகம் நடைபெற்றது. அறுபது ஆண்டுகளுக்கொருமுறை புனருத்தாரணமும் மகா கும்பாபிஷேகமும் செய்து வழிபாடு செய்ய வேண்டும் என்ற சாத்திர முறையை யொட்டி இப்பொழுது திருப்பணி செய்ய வேண்டியுள்ளது.

அதற்கு இணங்கத் திருவருள் கூட்டுவிக்கின்ற இவ்வரிய பேற்றைத் துணை கொண்டு, இவ்வாலயத்துட் சிற்சில இடங்களைத் திருப்பணி செய்து மகா கும்பாபிஷேகம் செய்ய ஆன்றோர்களால் "கும்பாபிஷேகக் கமிட்டி" யொன்று நிறுவப் பெற்றுள்ளது. மேற்படி கும்பாபிஷேகம் நாளது மன்மத ஆண்டு ஆனித் திங்கள் 23உ (7-7-55) வியாழக் கிழமை யன்று நடைபெற ஸ்ரீ நடராஜப் பெருமான் திருவருளைத் துணை கொண்டு ஏற்பாடு செய்யப் பெற்றுள்ளது.

எல்லாத் திருத்தலங்கட்கும் பொது நிலையமாக விளங்குவதால் 'பொது' எனப் போற்றப் பெறும் இத் திருக்கோயில் திருப்பணியில் இந்நாட்டிலுள்ள எல்லா மக்களும் பங்கு கொள்ளுதற்கு உரியவராவர். எனவே இவ்வரிய பணியில் சிவநேசச் செல்வர்களும் சீரிய அன்பர் பெருமக்களும் பங்கெடுத்துக் கொண்டு தத்தம் ஆற்றலுக்கேற்ப பொருளுதவி புரிந்துதவ வேண்டுகிறோம்.

மேற்படி சத் கைங்கரியத்திற்கு உரிய தொகைகள் "பொக்கிஷதார், ஸ்ரீ சபாநாயகர் கோயில் திருப்பணி கும்பாபிஷேகக் கமிட்டி, சிதம்பரம்" என்கிற விலாசத்திற்கு அனுப்பும்படி கோரப்படுகிறது.

இங்ஙனம்,

சிதம்பரம் 4-3-55 } ஸ்ரீ சபாநாயகர்கோயில் திருப்பணி கும்பாபிஷேகக் கமிட்டியார்

# காஸ்ட்ரால் எப்பொழுதும் முன்னணியில் நிற்கிறது






★ ஸிலிண்டர் தேய்மானத்தைக் குறைப்பதில், **1935-ல் முதல் ஸ்தானம்** பெற்றது.

★ இயந்திரங்களை சுத்தப் படுத்துவதற்கு ஒரு சிறந்த எண்ணெயாக **1935-ல் முதல் ஸ்தானம்** அடைந்தது.

★ பெட்ரோல் சிக்கனம், மிக எளிதான இயக்கம், துரிதமான ஓட்டம் ஆகிய அனுகூலங்களைப் பெற ஒரு லேசான எண்ணெயை அறிமுகப்படுத்தி **1938-ல் முதன்மை ஸ்தானம்** பெற்றது.

★ எண்ணெய் கெட்டுப் போகாது பாது காக்கக் கூடிய நூதன வழிகளைக் கையாளுவதினால் **1949-ல் முதன்மை ஸ்தானம்** அடைந்தது.

★ துரு பிடிக்காமலும், அமிலங்களால் இயந்திர பாகங்கள் தேய்வு ஏற்படாமலும், பாதுகாக்கக்கூடிய ஹைபாய்ட் ஆக்ஸில் எண்ணெயை அறிமுகப்படுத்தி யதால் **1954-ல் முதன்மை** யடைந்தது.

★ **ஈடு இணையற்றது !** இன்று உலகிலேயே சகலவித மான புதிய தொழில் நுட்ப அபிவிருத்திகளுடன் விளங்கும் மிகவும் நவீன மோட்டார் எண்ணெய் இதுதான். மோட்டார் முன்னைக்காட்டிலும் எளிதில் புறப்படுவதற்கும், தேய் வைக் குறைப்பதற்கும், இந்த எண்ணெய், முக்கியமாக குளிர்ந்த காலத்திலும் கூட, உதவியாக இருக்கிறது.

## ஸி. ஸி. வேக்பீல்ட் & கம்பெனி லிட்.

C-73

# ஆற்றங்கரையினிலே

பேராசிரியர் ரா.பி.சேதுப்பிள்ளை

## 18. முசிரிப் பட்டினம்

“கொச்சியிலே குறுணி மிளகு” என்று மெச்சிப் பேசுவர் தென் பாண்டி நாட்டார். மலைவளம் மல்கிய சேர நாட்டில் மணமும் சுவையும் உடைய நல்ல மிளகு முன்னாளில் ஏராளமாக விளைந்தது. மேலை நாட்டார் அதனை மிகவும் விரும்பினர். சிறப்பாகக் குட்ட நாடு என்னும் பகுதியில் விளைந்த காரசாரமான மிளகு அவர்களுக்கு மெத்தப் பிடித்திருந்தது. உயர்ந்த விலை கொடுத்து அவர்கள் அம்மிளகை வாங்கித் தம் மரக் கலங்களில் ஏற்றிச் சென்றனர்.

அந்நாளில் சேர நாட்டுக் கடற்கரையில் முசிரி என்னும் துறைமுகம் சிறந்து விளங்கிற்று. பெரியாறு கடலிற் பாயும் இடத்தில் வீற்றிருந்த முசிரிமா நகரம் “குடகடலின் கோமகன்” என்று கொண்டாடத்தக்க செல்வச் செழுமை வாய்ந்து திகழ்ந்தது. மேலை நாட்டுக் கப்பல்கள் அத்துறைமுக நகரத்திற் போந்து செம்பொன்னைச் சொரிந்து கரு மிளகை ஏற்றிச் சென்ற செய்தியை அகநானூறு என்னும் பழைய தமிழ் நூல் அழகாகக் கூறுகின்றது.

இவ்வாறு ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே சீரும் சிறப்பும் உற்று விளங்கிய முசிரியின் பெருமை காலடைவில் குறைந்தது. முசிரி என்னும் பெயரும் மழுங்கி மறைந்தது. ஏறக்குறைய ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு சேரமான் பெருமாள் அரசு புரிந்தபோது கொடுங்கோளூர் என்னும் துறைமுக நகரம் மலையாள நாட்டின் தலைநகராகத் திகழ்ந்தது என்பது திருத்தொண்டர் புராணத்தால் விளங்குகின்றது. பெரியாற்று முகத்தில் அமைந்திருந்த அந்நகரின் சிறப்பினை,

> “மாவீற் றிருந்த பெருஞ் சிறப்பின்
> மன்னும் தொன்மை மலைநாட்டுப்
> பாவீற் றிருந்த பல்புகழார்
> பயிலும் இயல்பில் பழம்பதிதான்
> சேவீற் றிருந்தார் திருவஞ்சைக்
> களமும் நிலவிச் சேரர்குலக்
> கோவீற் றிருந்து முறைபுரியும்
> குலக்கோ மூதூர் கொடுங்கோளூர்”
>
> சே-காலை, இடபவாகனம்.

என்ற திருப்பாட்டில் மலை நாட்டுப் பழம் பதியாகிய கொடுங்கோளூர் சேர மன்னரது தலை நகரம் என்பதும் அங்குள்ள சிவாலயத்தின் பெயர் திருவஞ்சைக்களம் என்பதும் தெளிவாக உணர்த்தப் படுகின்றன.

கொடுங்கோளூரில் அரசு வீற்றிருந்த சேரமானும் திருவாரூரில் சிவத் தொண்டு புரிந்த சுந்தர மூர்த்தியும் ஒருவரை ஒருவர் கண்டு பழகுவதற்கு முன்னமே உணர்ச்சியால் ஒன்றுபட்டு உயரிய தோழராயினர். சேர நாட்டிலே பிறந்தவர் சேரமான்: சோழ நாட்டிலே பிறந்தவர் சுந்தரர். அரசாளும் குலத்தைச் சேர்ந்தவர் சேரமான்; அந்தணர் குலத்தில் வந்தவர் சுந்தரர்; நாடாளும் பணியை மேற்கொண்டவர் சேரமான்; ஈசனைப் பாடும் பணியே பணியாகக் கொண்டவர் சுந்தரர். இங்ஙனம் பல்லாற்றானும் வேறுபட்ட சேரமானும் சுந்தரமூர்த்தியும் சிவனடி மறவாச் செம்மை வாய்ந்தவராதலின் சிறந்த நண்பராயினர்.

தம் உயிர்த் தோழராகிய சுந்தரரைக் காணும் ஆசையால் மலை நாட்டினின்றும் புறப்பட்டுத் திருவாரூருக்கு எழுந்தருளினார் சேரமான்; சுந்தரரோடு அளவளாவினார்; அவர் பாடிய தமிழ்ப் பாட்டைக் கேட்டு மனம் உருகினார். எல்லையற்ற பெருமை வாய்ந்த தில்லை அம்பலத்தை அவரோடு சென்று வணங்கினார்; இன்ப வெள்ளத்தில் மூழ்கினார். “பொன் வண்ணத்து அந்தாதி” என்னும் செந்தமிழ்ப் பாமாலை சாத்தினார். ஐந்தொழில் புரியும் ஆடலரசை அகமகிழ்ந்து ஏத்தினார்.

மனம் ஒத்த நண்பர் இருவரும் திரு ஆலவாய் முதலாய தென்னாட்டுத் திருப் பதிகளையும் கண்களிப்பக் கண்டு வணங்கிச் சேர நாட்டுத் தலைநகரை நண்ணினார். சிவநேயச் செல்வர் இருவரையும் ஒருங்கே கண்ட சேரநாட்டு மக்கள் இன்பக் கண்ணீர் சொரிந்தார்; மலர்மாரி பொழிந்தார்.

பொது மக்களின் ஆர்வத்தை அறிந்து அகமகிழ்ந்த சேரமானும் சுந்தரரும் ‘அஞ்சைக் களம்’ என்னும் ஆலயத்திற் போந்து நெஞ்சார வழிபட்டனர். “அஞ்சைக் களத்து அப்பனே” என்று அழைத்

துச் செஞ்சொற் பாமாலை அணிந்தார் சுந்தரர்.

"தலைக்குத் தலைமாலை அணிந்த தென்னே
சடைமேல் கங்கை வெள்ளம் தரித்த
தென்னே
அலைக்கும் புலித்தோல் கொண்டு அசைத்த
தென்னே
அதன்மேல் கதநாகம் கச்சார்த்த
தென்னே
மலைக்கும் நிகர் ஒப்பன வன்திரைகள்
வலித்தெற்றி முழங்கி வலம்புரி கொண்டு
அலைக்கும் கடலங்கரை மேல் மகோதை
அணியார் பொழில் அஞ்சைக் களத்
தப்பனே"

என்ற தேவாரத் திருப்பாசுரத்தில் மகோதை என்று சேரமானது தலைநகரம் குறிக்கப்படுகின்றது. அதனால் மகோதை என்ற பெயரும் கொடுங்கோளூர்க்கு உண்டு என்பது நன்கு விளங்கும்.

கோதை என்பது சேர மன்னர்க்குரிய சிறப்புப் பெயர்களில் ஒன்று. கோதையார்க்குரிய தலைநகரமாகிய கொடுங்கோளூர் மகோதை என்று பெயர் பெற்றது போலும்!

"கோதை அரசர் மகோதை யெனக்
குலவு பெயரும் உடைத்து உலகில்"

என்று திருத்தொண்டர் புராணம் தெரிவிக்கின்றது.

இத்தகைய மகோதைப் பட்டினத்தில் ஒரு நாள் கோதையரசர் பவனி வருகின்றார். அவர் திருமேனியைக் காண்பதற்கு ஆசைப்படுகின்றனர் இள மங்கையர். பட்டும் பணியும் புனைந்து கொண்டு கதவைத் திறந்து தெருவை எட்டிப் பார்க்கின்றனர். "எட்டாப் பழத்துக்குக் கொட்டாவி இடலாமோ?" என்று அவர்களைத் தட்டி அடக்கி வீட்டினுள்ளே அனுப்பிக் கதவைத் தாழிடுகின்றனர் தாய்மார்கள். அவர்கள் வீட்டினுள்ளே வேலை செய்யும் வேளை பார்த்துக் கதவைத் திறந்து பின்னும் தெருவுக்குச் செல்கின்றார் கன்னியர். அது கண்டு ஓடிவந்து பெண்களை அதட்டி மீண்டும் வீட்டின் உள்ளே அடைத்துத் தாழிடுகின்றனர் தாய்மார். இவ்வாறு அடைத்தும் திறந்தும் கதவின் குடுமி தேய்ந்து போயிற்று என்று பாடுகின்றார் ஒரு கவிஞர்.

"தாயர் அடைப்ப மகளிர் திறந்திடத்
தேயத் திரிந்த குடுமியவே—ஆய்மலர்
வண்டுலாம் கண்ணி வயமான்தேர்க்
கோதையைக்
கண்டுலாம் வீதிக் கதவு"

என்ற பாட்டில் கோதையால் தேய்ந்த குடுமியைக் காணலாம்.

தேவாரப் பாடல் பெற்ற திருவஞ்சைக் களம் இப்பொழுது திருவஞ்சிக்குளம் என்று மலையாள மொழியில் மருவி வழங்குகின்றது. சேர நாட்டில் பழைய தலைநகராகிய வஞ்சிமா நகரம் இத் திருவஞ்சிக் குளமே என்பர் சிலர். சேரமான் அரசுபுரிந்த கொடுங்கோளூர் மேலை நாட்டார் நாவில் கிராங்கனூர் எனச் சிதைந்தது. சங்க நூல்களில் முசிறி என்றும் தேவாரத்தில் மகோதை என்றும் பெயர் பெற்று விளங்கிய திருநகரம் இப்போது ஏற்றமும் தோற்றமும் இழந்து கேரள நாட்டுக் கடற்கரையில் உறங்குகின்றது.

## டி.கே.சி.யின் கடிதங்கள்

திருக்குற்றாலம், தென்காசி

நமஸ்காரம். 3—11—48

இதோ ஒரு பாடல்! தொண்டைமான் திரையன் என்ற தொண்டை நாட்டுச் சக்கரவர்த்தி சோழ மன்னனது புத்திரன் என்றும், ஒரு தீவில் பிறந்த பிள்ளை என்றும், வயதான பிறகு தீவிலிருந்த தாய் பையனை ஒரு தோணியில் வைத்துத் தந்தையாகிய சோழனிடம் அனுப்பினள் என்பதும் கதை. இதை வைத்துப் பாடல். கடல் பெற்ற பிள்ளை **திரையன்** என்பது புராண மரபு.

இராப் பகலாய்த் தூங்காமலே கடல் கும்மாளி போட்டுக் கொண்டே இருக்கிறது: காரணம் என்ன!

"கங்குலும் நண்பகலும்
துஞ்சா இயல்பிற்றாய்
மங்குல்சூழ் மாக்கடல்
ஆர்ப்பதூஉம்—வெம்சினவேல்க்
கான்பயந்த கண்ணிக்
கடுமான் திரையனை
யான்பயந்தேன் என்னும்
செருக்கு."

[கங்குல்: இரவு; மங்குல்: மேகம்; ஆர்ப்பது: சப்திப்பது; கான்பயந்த: தொண்டைச் செடியிலுண்டான பூவால் தொடுத்த.]

வெகு அழகான பாட்டு. தமிழ்ப் பண்பு நிறைந்திருக்கிறது.

டி. கே. சிதம்பரநாதன்

# பாங்க் ஆப் மதுரை லிட்.

## மதுரை

31-12-1954 அன்று உள்ளபடி நிலை விபரம்

| முதலீடும் பொறுப்புக்களும் | ரூ. | அ. | பை | சொத்துக்கள் | ரூ. | அ. | பை |
|---|---|---|---|---|---|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனமும் ரிசர்வ் நிதியும் ... | ...12,76,218 | 12 | 1 | கையிருப்பு ரொக்கமும் பாங்கிலுள்ள தொகையும் | ...25,02,741 | 13 | 1 |
| டெபாஸிட்டுகள் ... | 2,26,31,274 | 10 | 4 | செக்யூரிடிகளில் முதலீடு செய்யப்பட்ட தொகை | ...84,67,490 | 14 | 6 |
| வசூலாக வேண்டிய உண்டியல்கள் ... | ...1,70,797 | 3 | 9 | கடன்கள், ஓவர்டிராப்டுகள் முதலியன ... | ...1,29,33,257 | 12 | 2 |
| இதர பொறுப்புக்கள் | ...2,02,978 | 14 | 11 | வசூலாக வேண்டிய உண்டியல்கள் ... | ...1,70,797 | 3 | 9 |
| லாப நஷ்டக் கணக்குகள் | ...1,13,950 | 11 | 3 | இதர ஆஸ்திகள் | ...3,20,962 | 8 | 10 |
| | 2,43,95,250 | 4 | 4 | | 2,43,95,250 | 4 | 4 |

சேர்மன்: **கருமுத்து தியாகராசன்**

டைரக்டர்கள்: வ. ராம. வள்ளியப்ப செட்டியார், நா. அ. அண்ணாமலை செட்டியார்
உ. ராம. மெ. சுப. சேவு. அ. அண்ணாமலை செட்டியார்

பி. எஸ். விஸ்வநாதன், காரியதரிசி

---

**உங்கள் குழந்தை
சதா சிடுசிடுப்பாகவும்,
பிடிவாதத்துடனும் இருந்து**

அடி வயிறு பெருத்தும் இருந்தால், அதற்குக் காரணம் ஈரல் குலைக்கட்டி வியாதியாக இருக்கலாம்; இது 3 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கு ஏற்படுவது சகஜம்.

ஜம்மியின்

# லிவர்க்யூர்

ஈரல், குலைக்கட்டி வியாதிகளை
குணப்படுத்தும் வராமலும் தடுக்கும்

இப்பொழுது மாத்திரைகளாக
கிடைக்கும்

NEW IN TABLETS

**ஜம்மி வெங்கடரமணய்யா & ஸன்ஸ்**
"ஜம்மி பில்டிங்ஸ்", மைலாப்பூர், மதராஸ் 4.
பிராஞ்சுகள்: பெரியகடைத் தெரு, தெப்பகுளம், திருச்சிராப்பள்ளி; பெரிய தெரு, கும்பகோணம்; மற்றும் இதர இடங்கள்.

JVZ 4TM

# கருநாகம்

கோவிந்த சர்மா

ஹிந்திக் கதை மொழி பெயர்ப்பு ✣ ஜெயமணி

அப்போது கோடை காலம். வெய்யில் தாங்க முடிய வில்லை. அந்த உஷ்ணத்துக்கும் புழுக்கத்துக்கும் எல்லையே இல்லையோ எனத் தோன்றியது!

எனினும், இதை யெல்லாம் சிறுவர்கள் லட்சியம் செய்வார்களா? அவர்கள் எப்போதும் போலவே வெய்யில் சிறிதும் வீண் போகாமல் தெருக்களில் விளையாடிக் கொண்டுதான் இருந்தார்கள். போதாக் குறைக்கு, அந்தக் குடிசையில் இருந்த கிழவர் அவர்களுடைய புதிய விஷமத்துக்கு இலக்காக நேர்ந்தது.

அவ் வயோதிகர் இயற்கையிலேயே கறுப்பு நிறம். அம்மை வடுக்கள் நிறைந்திருந்த அவரது முகத்தில் வயோதிகத் தினால் சுருக்கங்களும் விழுந்திருந்தன. அவர் உடுத்தி யிருந்த அழுக்கு வேஷ்டி அவரது நிலையை இன்னும் மோசமாக்கியது. அவர் தமது குடிசைத் திண்ணையில் பாம்பு படுத்திருப்பது போல் சுருட்டி மடக்கிக் கொண்டு படுத்திருந்தார்.

ஒரு நாள் தெருவில் விளையாடிக்கொண்டிருந்த சிறுவர்களின் கண்ணோட்டம் அந்தக் கிழவர் மீது விழுந்தது. அவ்வளவு தான்! அதிலிருந்து கிழவரின் வாழ்க்கையில் சிறிதும் மன அமைதி என்பதே இல்லாமற் போயிற்று.

அச் சிறுவர்கள் முதலில் மௌனமாக அவருக்கு அருகில் வந்து நின்று கொண்டு அவரையே உற்றுப் பார்த்தனர். அவர் சுருட்டி மடக்கிக் கொண்டு படுத்திருப்பது அவர்களுக்கு வேடிக்கையாக இருந்தது.

அந்தச் சிறுவர்களுக்கு ராம் கோபால் தான் தலைவன். ஊரில் உள்ள ஒவ்வொருவருக்கும் பொருத்தமாகப் புதிய பெயர் வைப்பதில் அவனுக்கு ஈடு யாரும் இல்லை. எனவே, அவனைக் கண்டால் பெரியவர்களுக்குக்கூடக் கொஞ்சம் பயம்தான். தங்களுக்கு ஏதாவது பெயர் வைத்து, எல்லோருடைய பரிகாசத்துக்கும் ஆளாகும்படி செய்து விட்டால் என்ன செய்வது என்பதுதான் அவனிடத்தில் அவர்களுடைய பீதிக்குக் காரணம்.

"இந்தக் கிழவரைப் பார். சுருட்டி மடக்கிக் கொண்டு அவர் படுத்திருப்பதைப் பார்த்தால், ஒரு கருநாகம் சுருட்டிக் கொண்டு படுத்திருப்பது போல் இருக்கிறது அல்லவா?" என்று ஆரம்பித்தான் ராம் கோபால்.

அவ்வளவுதான். மற்றச் சிறுவர்கள் துள்ளிக் குதித்தனர். ஒரு பையன் கிழவரின் அருகில் சென்று, அவர் காதில் "கருநாகம்" என்று கத்தினான். அரைத் தூக்கத்திலிருந்த கிழவர் துள்ளி எழுந்தார். அவர் தன் கைத் தடியை எடுப்பதற்குள் பையன்கள் குரங்குகளைப் போல் தாவி மூலைக்கு ஒருவராக ஓடி விட்டனர். அதிலிருந்து அவரைத் தெருவில் சிறுவர்கள் அடிக்கடி 'கருநாகம்' என்றே கூப்பிட்டதால், சேவாராம் என்ற அவருடைய அழகான சொந்தப் பெயர் மறைந்து 'கருநாகம்' என்ற பெயரே நிலைத்து விட்டது!

* * *

சேவாராம் இந்த உலகில் எப்படியோ ஐம்பது வருஷ காலத்தைத் தள்ளி விட்டார். கஞ்சா சாப்பிடுவது, அந்தப் போதையில் சோம்பேறியாக உட்கார்ந்திருப்பது. இதைத் தவிர அவரது வாழ்க்கையில் விசேஷமாக எதுவும் குறிப்பிடுவதற்கில்லை. நீண்ட காலத்திய கஞ்சா பழக்கம் அவரது உடலை உருக்குலைத்து விட்டது. எல்லோரும் 'கருநாகம்' என்று ஏளனம் செய்யும்படியாக அவரது தேகம் அவ்வளவு மோசமாகி விட்டது.

சேவாராம் வசித்த குடிசைக்கு எதிரில் தான் பண்டித சிவப்பிரசாத் சாஸ்திரியின் வீடு. சாஸ்திரி இளைஞர். எனவே, சிறு வயதில் படிந்த குறும்புத்தனம் அவரை விடவில்லை. சேவாராமைப் பார்த்துச் சிறுவர்கள் 'கருநாகம்' என்று கத்தி ஆர்ப்பாட்டம் செய்வது சாஸ்திரிக்கு வேடிக்கையாக இருந்தது. கிழவரை ஏளனம் செய்து அவருக்கு மன வேதனையைக் கொடுக்கக் கூடாது என்று சிறுவர்களுக்குப் புத்திமதி சொல்லவேண்டிய சாஸ்திரி, அவ்விதம் செய்யாமல் சிறுவர்களை மேலும் மேலும் தூண்டி விட்டார்.

எனவே, சாஸ்திரியின் வீடு சிறுவர்களின் விஷமத்தனத்துக்கு ஒரு கோட்டையாக விளங்கியது. தினசரி அவர்கள் அங்கு கூடி சேவாராமைக் 'கருநாகம்' என்று இடைவிடாது ஏளனம் செய்யத் தொடங்கினர். ஒரு கோஷ்டியினர் கத்திச்

சலித்துப் போய் அங்கிருந்து சென்முல், மற்ருெரு கோஷ்டிச் சிறுவர்கள் அங்கு வந்து 'கருநாகம்' என்று கத்த ஆரம்பித்து விடுவார்கள்.

அவர்களின் குறும்புத்தனம் சேவா ராமுக்குச் சகிக்க முடியாத நரக வேதனை யாகி விட்டது. அங்கிருந்து வெளியேறி எங்கேயாவது சென்முலன்றி, தாம் அமைதியாக இருக்க முடியாது என்று அவருக்குத் தோன்றியது. ஆனல் அந்த வயதில் அவர் தமது குடிசையை விட்டு எங்கு செல்லுவது?

சிறுவர்களின் விஷமத்தனத்தை சேவா ராம் சிறிது காலம் மௌனமாகச் சகித்துக் கொண்டிருந்தால், அவர்கள் தொண்டைத் தண்ணீர் வற்றுவதுதான் கண்ட பலன் என்று அடங்கி யிருப்பார்கள். ஆனல், சேவாராம் அவர்கள் மீது வசைமாரி பொழியத் தொடங்கியது, சிறுவர்களுக்கு இன்னும் அதிகக் குதூகலத்தை உண்டாக் கியது. கிழவரின் வசைமாரி அதிகம் ஆக ஆகச் சிறுவர்கள் "கருநாகம்" என்று தொண்டை கிழியக் கத்துவதும் அதிக மாகியது. அவரது வசைமாரியைக் கண்ட சிறுவர்கள், "டேய், கருநாகம் சீறுகிறது" என்று மேலும் உரக்கக் கத்துவதும் சிரித்து ஆர்ப்பாட்டம் செய்வதும் வழக்க மாகியது. அச் சிறுவர்களுக்கு ராம் கோபால் தலைமை வகித்ததால், கிழவர் எப்போதும் அவனையே அதிகமாகத் திட்டி வந்தார். கடைசியாக, இந்த நிகழ்ச்சிகள் தெருவில் நடமாடும் ஜனங்களுக்குச் சகஜ மாகி விட்டன.

* * *

**வா**சுதேவ் என்பவரின் சகோதரி பல மாதங்களுக்குப் பிறகு புக்ககத்தி லிருந்து தன் வீட்டுக்கு வந்திருந்தாள். எனவே, சேவாராமுக்குச் சிறுவர்கள் வைத்துள்ள பெயரைப் பற்றி அவளுக்கு எதுவுமே தெரியாது. அவள் ஒரு நாள் வீட்டுக்கு வெளியே வந்த போது அங்கு ஒரு நாய் படுத்துக் கொண்டிருந்தது. அதைக் கண்டதும் அவள், "பாம்பைப் போல் சுருட்டி மடக்கிக் கொண்டு படுத் திருப்பதைப் பார்" என்று கூறிக் கொண்டே அதை வீட்டுத் திண்ணையி லிருந்து விரட்டினள்.

துரதிர்ஷ்டவசமாக அச்சமயம் அவ்வழி யாகச் சென்று கொண்டிருந்த சேவா ராமின் காதில் அந்தப் பெண் கூறியது விழுந்து விட்டது. உடனே அவர் ஆத்திர மடைந்து அந்தப் பெண்ணைத் திட்டத் தொடங்கினர்.

"மூனைத்து மூனையாக வில்லை. அதற்குள் உனக்கு இவ்வளவு கர்வமா? பணக்காரப் பையனுக்கு மனைவியாகி விட்டோம் என்ற மமதையினல் தானே நீ என்னை இப்படிச் சொன்னய். உனக்குக் கூடிய சீக்கிரம் ஆண்டவன் தகுந்த தண்டனை கொடுப்பார்."

இவ்விதம் சேவாராம் உரக்கக் கத்திய தைக் கேட்டு, அங்கு ஜனங்கள் கூடி விட்டார்கள். அந்தப் பெண்ணே ஒன்றும் புரியாமல் விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டாள்.

"நாயைப் பார்த்துப் பாம்பு போல் சுருட்டி மடக்கிக் கொண்டு படுத்திருக் கிறதே என்று சொல்லி விரட்டினேன். உடனே இந்தக் கிழவர் இப்படிச் சண் டைக்கு வந்து விட்டார்" என்முள் அந்தப் பெண்.

கிழவருக்குக் 'கருநாகம்' என்று சிறு வர்கள் பெயர் வைத்திருப்பது உண்மை யில் அவளுக்குத் தெரியாது.

"இந்தப் பெண் ஒன்றும் தெரியாதவள் போல் நடிப்பதைப் பார்த்தீர்களா?" என்ருர் சேவாராம்.

அவரது கண்கள் சிவந்தன; முகத்தில் கோபக் கனல் வீசியது.

இச் சமயத்தில் கூட்டத்தில் இருந்த ஒருவர் சேவாராமைப் பார்த்து, "அந்தப் பெண், நாயைப் பார்த்து 'பாம்பு போல் சுருட்டி மடக்கிக் கொண்டு படுத்திருக் கிறதே' என்று சொன்னல் நீங்கள் ஏன் கோபித்துக் கொள்ள வேண்டும்!" என்று நிதானமாகக் கேட்டார்.

அவரது முகத்தில் விஷமப் புன்னகை தவழ்ந்தது.

இதனல் சேவா ராமின் கோபம் இன் னும் அதிகமாகியது.



"பியாரிலால்! நீங்களும் இந்த நாடகத்தில் சேர்ந்து கொண்டு விட்டீர்களா? உங்களில் எவரையும் நான் சும்மா விடப் போவதில்லை. ஒரு நாள் இந்தத் தெருவுக்கே நெருப்பு வைத்து விடுகிறேன். பாருங்கள்" என்று கத்தினார் சேவாராம்.

இதைக் கேட்டதும் அங்கு கூடியிருந்தவர்கள் இடி இடியென்று சிரிக்கலாயினர். அப்போது அங்கு வந்த ராம் கோபால் "கருநாகம் சீறுகிறது; அதற்குக் கோபம் வந்து விட்டது" என்று கூறவே, ஜனங்களின் சிரிப்பு ஒலி அந்தத் தெரு முழுதும் பரவியது.

அச் சமயம் 'கருநாகம்' என்று கூப்பிட்ட சில சிறுவர்களை சேவா ராம் விரட்டிக்கொண்டு ஓடவே எல்லோரும் மீண்டும் விழுந்து விழுந்து சிரித்தனர்.

* * *

இவ்விதமாகக் கோடைகால விடுமுறையில் ஒரு நாள் கூடத் தவறாது சேவாராமுக்கும் சிறுவர்களுக்கும் வாய்ப் போர் நடந்தவண்ணமிருந்தது. விடுமுறை முடிந்த பின்னர்தான் அவருக்கு, பகல் நேரத்தில்சில மணி நேரமாவது சிறுவர்களுடைய தொல்லைகளுக்கு இலக்காகாமல் அமைதியாக இருப்பது சாத்தியமாயிற்று. எனினும், எந்தப் பையன் வந்து அவரைத் தொந்தரவு செய்தாலும் செய்யா விட்டாலும், ராம் கோபால் மாத்திரம் நாள் தவறாமல் அங்கு வந்து சேவாராமின் பொறுமையைச் சோதிக்காமல் திரும்புவதில்லை!




'கருநாகம்' என்று கூறி விட்டு ஓடும் சிறுவர்களில் சிலர் சேவாராமின் கையில் அகப்பட்டு விடுவதும் உண்டு. உடனே சேவாராம் அவர்களை ஒரு உலுக்கு உலுக்கித் தம் கைத்தடியைத் தூக்குவார். அதைக் கண்டு அவரிடம் பிடிபட்ட பையன் அழ ஆரம்பித்து விடுவான். உடனே சேவாராம் அவனை விட்டு விட்டு, "போனால் போகிறது. இந்தத் தடவை பிழைத்துப் போ. இனி இவ்விதம் கூறி என் கையில் அகப்பட்டுக் கொண்டால் உன் எலும்பை யெல்லாம் நொறுக்கி விடுவேன்" என்பார்.'

ஒரு நாள் ராம் கோபால் 'கரு நாகம்' என்று வெகு நேரம் கத்தியும்கூட சேவாராம் குடிசைக்கு வெளியே வரவில்லை. இது ராம் கோபாலுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவன் மெதுவாகக் குடிசைக்குள் தலையை நீட்டினான். சேவாராம் ஜுரமாகப் படுத்துக் கொண்டிருந்தார்.

"கரு நாகம் செத்து விட்டதா? இன்று அது ஏன் சீற வில்லை? பொந்திலிருந்து ஏன் வெளியே வரவில்லை?" என்று கேட்டான் ராம் கோபால்.

அந்த பலவீனமான நிலையிலும் சேவாராம் எழுந்து அவனைத் திட்டத் தொடங்கினார். உடனே ராம் கோபால் சிரித்துக் கொண்டே வெளியே ஓடி விட்டான்.

ஒரு வாரம் சென்றது. சேவாராமின் குடிசைக்கு அருகில் சத்தமே இல்லை. ஒரு பையன் கூட அந்தப் பக்கம் வரவில்லை.

இதைக் கண்ட சேவாராமுக்கு ஏற்பட்ட வியப்பு கொஞ்ச நஞ்சமல்ல. அவர் தடியை ஊன்றிக் கொண்டு மெதுவாகக் குடிசைக்கு வெளியே வந்தார். எதிர் வீட்டுத் திண்ணையில் உட்கார்ந்திருந்த சிவப் பிரசாதிடம் வந்தார்.

தம்மை வெறுக்கும் சேவாராம் தம்மை நோக்கி வருவதைக் கண்ட சிவப்பிரசாதுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை.

"என்ன தாத்தா? எங்கு இப்படி புறப்பட்டீர்கள்? உங்களுக்கு ஜுரம் நின்று விட்டதா?" என்று சிவப் பிரசாத் நல்ல பிள்ளைபோல் கேட்டார்.

"எனக்கு ஜுரம் நின்று விட்டது. ஆனால், சிறிது பலவீனமாக இருக்கிறது" என்றார் சேவாராம்.

சேவாராம் தயங்கித் தயங்கி நிற்பதைக் கண்ட சிவப் பிரசாத் அவர் ஏதோ கூற விரும்புகிறார் என்பதை உணர்ந்து கொண்

டார். "ஏன் தயங்கித் தயங்கி நிற்கிறீர்கள்?" என்று கேட்டார் அவர்.

"ஒரு வாரமாக இந்தப் பக்கத்தில் ஒரு பையனைக்கூடக் காண வில்லையே, ஏன்?"

"ஏன், பையன்கள் இராமல் உங்களுக்குப் பொழுது போகவில்லையோ?" என்று குத்தலாகக் கேட்டு விட்டு சிவப்பிரசாத் சிரித்தார்.

"ஊர் முழுவதும் அம்மை நோய். அதனால்தான் பையன்கள் வழக்கப்படி உங்கள் குடிசைக்கு விஜயம் செய்ய வில்லை" என்றார் தொடர்ந்து.

"அதனால் பையன்களிடையே உயிர்ச்சேதம் உண்டோ?"

"இல்லை, இரண்டொரு குழந்தைகள் மாத்திரம் இறந்தன."

"அந்தப் பையன் எங்கே?"

"யார், உங்கள் ராம் கோபாலா?"

"ஆமாம், ஆமாம். அந்த அயோக்கியப் பயல்தான். அவன் ஒரு நாள் கூட இங்கு வராமல் இருக்க மாட்டானே? என்னிடம் திட்டு வாங்கா விட்டால் அவனுக்குப் பொழுது போகாதே?"

"அவனுக்கு ஒன்றுமில்லை, ஐந்து நாட்களுக்கு முன் அவன் தந்தைதான் இறந்து விட்டார். அவருக்கு ஊர் முழுதும் கடன். ஆகையால், ராம் கோபால் இந்த ஊரை விட்டே போய்விடப் போகிறான். அவன் தாயார் அவன் சிறு வயதாக இருந்த போதே இறந்து விட்டாள் அல்லவா? பாவம், இப்போது அந்தப் பையன் அனாதையாகி விட்டான்."

"அவன் தந்தைக்கு எவ்வளவு கடன் இருக்கும்!"

சிவப்பிரசாத் சாஸ்திரிக்குச் சிரிப்பு தாங்க முடியவில்லை.

"ராம் கோபால் உங்களுடைய நண்பன் அல்லவா? அதனால் அந்தக் கடனை நீங்கள் கொடுத்து விடலாம் என்று கேட்கிறீர்களோ?" என்றான் விஷமத்தனமாக.

"அவன் செத்தால் கூட அவனுக்காக நான் ஒரு பைசா கூடச் செலவு செய்ய மாட்டேன்."

இவ்வாறு சொல்லி விட்டு சேவாராம் மெதுவாக நடையைக் கட்டினார்.

• • •

ராம் கோபால் தன் வீட்டில் குப்புறப் படுத்துக் கொண்டிருந்தான். அவன் மனத்தில் பழைய சம்பவங்கள் தோன்றித் தோன்றி மறைந்தன. அவன் தந்தை அவனிடம் உயிரையே வைத்திருந்தார். அவனுக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்த அவரை அவன் இழந்து விட்டான். அவனைக் கேட்பார் யாருமின்றி அவன் எவ்வளவு சுதந்திரத்துடன் திரிந்து கொண்டிருந்தான்! அவனுடைய விஷமத்துக்கு எல்லையே இராமலிருந்தது.

ஆனால், இப்போது எல்லாம் அடியோடு மாறி விட்டது. ராம்கோபாலுக்கு என்ன செய்வதென்றே புரிய வில்லை. மூன்று நாட்களில் அவன் புது மனிதனாகி விட்டான். அவனது விஷமமெல்லாம் மறைந்து விட்டன. அவன் இனி சிறுவன் அல்ல. தந்தை பட்ட கடனை அடைக்க வேண்டிய பொறுப்பு அவன் தலையில் சுமந்து விட்டது. அவன் இனி சம்பாதித்துத்தான் மேற்படி கடனையெல்லாம் அடைக்க வேண்டும்.

யாரோ மெதுவாகக் கதவைத் தள்ளுவதைக் கண்ட ராம் கோபாலின் சிந்தனை கலைந்தது. அவன் திடுக்கிட்டு எழுந்து உட்கார்ந்தான். அவனுக்கு எதிரில் சேவாராம் தடியை ஊன்றிக் கொண்டு நின்றார். ராம் கோபால் திகைத்து நடுங்கி விட்டான்.

"ஏன் அப்பா, பயப்படுகிறாய்? நான் தான் கருநாகம், தெரியவில்லையா?"

ராம்கோபாலுக்குத் தன்னை யாரோ சவுக்கால் அடிப்பது போலிருந்தது.

"தாத்தா, தயவுசெய்து உட்காருங்கள்" என்றான் ராம் கோபால். அவனுக்கு அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது.

"அயோக்கியப் பயலே, எப்படியடா இருக்கிறாய்?"

"நான் சொல்லுவதற்கு என்ன தாத்தா இருக்கிறது? உங்களுக்கு இடைவிடாது தொல்லையைக் கொடுத்து வந்தேன். உங்கள் சாபம் பலித்துவிட்டது" என்றான்.

"நன்றாகப் பலிக்கட்டும்...... எனக்கு நாலைந்து நாளாக ஜுரம். அப்படியிருந்தும் உன்னைப் பார்க்க வந்தேன். வரும் வழியில் மூன்று இடங்களில் உட்கார்ந்து களைப்பாறினேன். உன்னைப் பற்றி சிவப்பிரசாத் சொன்னான். நீ ஊரை விட்டு ஓடப் போகிறாய் என்று சொன்னான். எப்போது தொலையப் போகிறாய்?"

"ஆமாம், தாத்தா! எங்கள் குடும்பத்துக்குக் கடன் இருக்கிறது. என்னிடம் பணமில்லை. நான் எங்கேயாவது போய்ச் சம்பாதித்துக் கடனைத் தீர்க்க வேண்டும்."

சேவாராம் தம் மடியிலிருந்து ஒரு பணப் பையைப் பரபரப்பின்றி அமைதியாக எடுத்து ராம் கோபாலுக்கு எதிரில் வைத்தார்.

"இதை வைத்துக் கொள்ளடா, வாண்டுப் பயலே. இதில் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் இருக்கிறது. இது நான் சேமித்து வைத்த தொகை. இதனால் இனி எனக்கு என்ன பலன்? கடனைத் தீர்த்து விட்டு

மீதியுள்ள தொகையைக் கொண்டு இந்த ஊரிலேயே ஒரு கடையை ஏற்படுத்திக் கொள். இதற்காக ஊரை விட்டு ஓட வேண்டாம். நான் சொல்லுவது புரி கிறதா? ஏன் இப்படி விழிக்கிறாய்?''

உணர்ச்சி வசப்பட்ட ராம் கோபாலுக் குப் பேசவே முடியவில்லை.

''நான் இதை உங்களுக்கு எப்படித் திருப்பிக் கொடுக்க முடியும்?''

''சுத்த மடையனாக இருக்கிறாயே! திருப்பிக் கொடுக்க வேண்டும் என்று யாரடா சொன்னார்கள்? உன் கையில் கிடைத்த போது ஏதாவது கொடு, போதும். எனக்கு இனி என்ன? நான் பிச்சை எடுத்துக்கூட என் வயிற்றை நிரப் பிக் கொண்டு விடுவேன்.''

ராம் கோபாலின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழியத் தொடங்கியது.

வாசற்படிக்குச் சென்ற சேவாராம் திரும்பி ராம்கோபாலைப் பார்த்து, ''எங்கே ஒரு தடவை என் பெயரைச் சொல். அதானடா, கருநாகம்! உனக்குத் தெரி யாதா?'' என்று சொல்லி விட்டு வேக மாக வெளியே சென்றார்.

ராம் கோபால் விம்மி விம்மி அழுதவண் ணம் பூமியைப் பார்த்துக் கொண்டு நின்றான். தன் எதிரில் நிகழ்ந்ததெல்லாம் கனவு போல் அவனுக்குத் தோன்றின!

# ஒரு விமர்சனம்



**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்**

★ ★ ★

ஆண்டவனுக்கு எந்தப் பெயர் வைத்துக் கொண்டு, பக்தியுடன் எந்த பாஷை எந்தப் பூஜை முறையை அநுசரித்து வழிபட்டாலும், நாம் கண்ட கடவுளுக்கே அந்த பக்தி போய்ச் சேரும் என்பது பாரத நாட்டில் ஒவ்வொரு சமயத்திலும் உறுதி கூறப்பட்ட கொள்கை. இது நம் நாட்டின் தனிப்பெரும் சிறப்பு.

வணங்கும் துறைகள் பலபல ஆக்கி
மதி விகற்பால்
பிணங்கும் சமயம் பலபல ஆக்கி
அவை யவை தோறும்
அணங்கும் பலபல ஆக்கி நின் மூர்த்தி
பரப்பி வைத்தாய்

என்பது ஆழ்வார் திரு விருத்தம்.

சமயங்களெல்லாம் சமம், என் சமயம் உன் சமயம் என்று போட்டிகளும் வெறுப்புகளும் கொள்வது அறியாமை என்பது ஹிந்துமதக் கோட்பாடு. ஆயினும் உலகத்தில் பல பாகங்களில் தோன்றி வளர்ந்து வந்த பல சமயங்களில் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு தனிப் பான்மை உண்டு. கிறிஸ்து மதத்தில் அன்பும் இரக்கமும் அதிகம் காணப்படும். இஸ்லாமிய யூத மதங்கள் ஆண்டவனிடம் இருக்க வேண்டிய பயத்தை எடுத்துக் காட்டும். அதுவே இந்தச் சமயங்களின் தனிப்பான்மை. பௌத்த சமயப் பான்மையில் சாந்தம் அதிகமாக இலங்கும். சைவத்தில் அடக்கம் அதிகமாக இடம் பெறுகிறது. வைஷ்ணவத்தின் தனிப் பான்மை உவகை, பக்தியினால் உண்டாகும் பெரு மகிழ்ச்சி.

என்றும் திருமாற்கே
ஆளாவேன் எம்பெருமான்
என்றும் எனக்கே
பிரானவான்—

என்று இந்த பக்தி உவகையை மிகப் பழைய பாடலில் காண்கிறோம்.

சென்னை சர்வ கலாசாலையின் பிரசுரம் 'திருவாய் மொழி ஈட்டின் தமிழாக்கம்' ஐந்தாவது புஸ்தகம் புது வருஷப் பிறப்பன்று வித்துவான் புருஷோத்தம நாயுடு அவர்கள் கொண்டுவந்து அன்போடு தந்தார்.

புஸ்தகத்தைத் திறந்து ஆழ்வாரின் முதல் பாட்டைப் படித்ததும் உள்ளம் முழுதும் ஆனந்தம் புகுந்தது.

கையார் சக்கரத்தென் கருமாணிக்கமே
என்றென்று
பொய்யே கைம்மைசொல்லிப் புறமேபுற
மேஆடி
மெய்யே பெற்றொழிந்தேன் விதிவாய்க் கின்று
காப்பார்ஆர்?
ஐயோ கண்ண பிரானே! அறையோ! இனிப்
போனாலே.

"ஆண்டவனையே ஏமாற்றப் பார்த்தேன். அந்த வஞ்சகத்தை அறிந்தும் எனக்கு நீ உண்மைப் பேற்றினை அளித்து விட்டாய். உன் திருவருள் இருக்க அதனைத் தடை செய்வார் ஆர்! இனி என்னை விட்டுப் போய் விட்டாயானால் நான் எப்படிப் பிழைப்பேன்!" என்பது ஆழ்வார் பாசுரம்.

"ஐயோ!" என்பது உவப்பின் மிகுதியினாலே சொல்லும் சொல் என்கிறார் வியாக்கியான கர்த்தா. இந்த ஆனந்தக் கூப்பாடே நான் சங்கீதக் கச்சேரிகளில் பல சமயம் கேட்டிருக்கிறேன். தமிழ் நாட்டில் வளர்ந்த வழக்கம் ஆழ்வார் சொல்லிலும் அப்படியே 'ஐயோ' என்று உவகை மிகுதியால் வந்தது.

இந்தப் பிரயோகத்தை மற்றும் பல பாசுரங்களிலும் காணலாம்.

"நீல மேனி ஐயோ
நிறைகொண்ட தென்
நெஞ்சினையே"

என்ற பாசுரத்தில் வரும் "ஐயோ" என்ற சொல்லும், இந்த அற்புதக் களிப்பையே எடுத்துக் காட்டுகிறது.

"பொலிக பொலிக பொலிக
போயிற்று வல்லுயிர்ச் சாபம்
நலியும் நரகமும் நைந்த:
நமனுக்கிங்கு யாதொன்று மில்லை."

இது மற்றொரு உவகைப் பாசுரம், நம்மாழ்வாருடையது. வைஷ்ணவத் தனிப் பான்மையை எடுத்துக் காட்டுகிறது.

"ஐயமொன்றில்லை அரக்கர் அசுரர்
பிறந்தீர் உள்ளீரேல்
உய்யும் வகையில்லை தொண்டீர்
ஊழி பெயர்த்திடும் கொன்றே!"

"ஏ, மக்களே! பிறர்க்குத் தொண்டு செய்தல் நாய்த் தொழிலாகும். அப்படித் தொண்டு பட்டிருக்க வேண்டாம். யுகத்தின் பண்பே மாறிப் போகும் காலம் வந்து விட்டது. உங்களுக்குள் அசுரத் தன்மை முதலிய கீழ்க் குணங்கள் இருந்தால் நீங்கள் இனி உஜ்ஜீவிக்க

இடமில்லை. ஆண்டவன் அருள் வந்து விட்டது" என்று சொல்லுகிறார்.

**ப**க்தியோடு ஆண்டவனை ஆழ்வார்கள் காட்டிய வழியில் வழிபட்டால் இந்த உவகையை அடையலாம். துயரப்பட வேண்டியதில்லை. கவலைப்பட வேண்டியதில்லை. காலம் கெட்டுப் போச்சு என்று அழ வேண்டியதில்லை.

பிறந்த பச்சிளங் குழந்தைகளைக் கவனித்தால் பார்க்கலாம்,— அழும், தும்மும், கொட்டாவி விடும், விக்கும். இம்மாதிரி உடலுக்கு வேண்டிய நிகழ்ச்சிகளெல்லாம் இயற்கையாக நடைபெறும். இவற்றைப் போலவே மனித இயற்கைக்கு இன்றியமையாதது, கடவுளை அணுகுவது. அந்த இயற்கை வேகமே உலகத்தில் பல சமயங்களாக வடிவ மெடுத்திருக்கின்றது. வழிபாட்டின் பயன்களாவன: ஞானத்தால் உள்ளம் சுத்தமாகும். வழிபாட்டுக் கிரியைக் கிரமங்களால் ஒழுக்கம் ஏற்படும். பக்தியால் உவகை உண்டாகும். முழு நம்பிக்கையால் கவலை நீங்கி சாந்தம் நிலைபெறும். இவற்றை யெல்லாம் காணலாம், சைவ வைஷ்ணவப் பிரபந்தங்களைத் திறந்து பார்த்தால். முக்கியமாக உவகை மிகுதியைக் காண்போம், வைஷ்ணவப் பிரபந்தங்களில்.

"நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலேன்
ஆகிலும் இனி உன்னைவிட் டொன்று
மாற்ற கிற்கின்றிலேன் அரவினணை அம்மானே
......உனக்குமிகை அல்லேன் அங்கே."

"நான் உனக்குப் பாரம் மிஞ்சியவன் ஆக மாட்டேன். நான் விரதம் காத்தவனல்ல. ஞானம் பயின்றவனல்ல. எனக்கு வேறு கதியில்லை" என்கிறார் ஆழ்வார், தம்மை நம்பில் ஒருவராக வைத்து.

அங்குற் றேனலேன் இங்குற் றேனலேன்
உனைக்காணும் அவாவில் வீழ்ந்துநான்
எங்குற் றேனுமலேன் இலங்கை செற்ற
அம்மானே
.............................................
...............நம்பியேனுக்கு அருளாயே

என்கிறார்.

"பொருளல்லாத என்னைப்
பொருளாக்கி அடிமை கொண்டாய்"

என்கிறார்.

"ஆரா அமுதே" என்று பிராரம்பிக்கும் பாசுரத்துக்கு ஈடு வியாக்கியானம் :—

"வட தேசத்திலே லோக சாரங்க மகா முனிகள் வசித்துக் கொண்டிருக்க, இங்கேயுள்ள ஒருவன் அங்கு ஏறச் செல்ல, 'பிள்ளாய்! தென் தேசத்தில் விசேஷம் என்!' என்று கேட்க, 'திருவாய்மொழி என்ற ஒரு பிரபந்தம் அவதரிக்க, அதனை சிஷ்டர்கள் மேற்கொண்டு போரக் கொண்டாடிக் கொடுபோகா நின்றார்கள்' என்ன, 'அதிலே உனக்குப் போவது ஒரு பாசுரத்தைச் சொல்லிக் காணாய்' என்ன, 'ஆராவமுதே' என்கிற இத்துணையே எனக்கும் போம்" என்ன, 'நாராயணன் முதலான நாமங்கள் கிடக்க இங்ஙனேயும் ஒரு பெயர் உண்டாவதே' என்று அதனைக் காண மிக்க ஆவலுடையவராய், 'இச் சொல் நடையாடுகிற தேசத்து ஏறப் போவோம்' என்று அப்பொழுதே புறப்பட்டுப் போந்தார்."

இந்த ஒரு உதாரணமே போதும், "ஈடு" என்னும் இந்த நூலின் சிறப்பையும், திரு புருஷோத்தம நாயுடு அவர்களின் சேவையின் சிறப்பையும் எடுத்துக் காட்ட. "ஈடு" வியாக்கியானத்திலுள்ள மணிப் பிரவாளத்தைக் குறைத்து இக்காலத் தமிழருக்காக இளக்கம் கொடுத்து எழுதித் தந்திருக்கிறார் ஆசிரியர். ஆயினும் மணிப்பிரவாளத்தை முற்றிலும் எடுத்து விடவில்லை. அதையும் இக்காலத்துத் தமிழர் பார்த்துப் படித்து அனுபவிக்க வேண்டும்.

ஈடு வியாக்கியானத்தின் பான்மையை விளக்க மற்றும் சில உதாரணங்கள் பயன்படலாம்.

"உன்னைக் காண்பான் அலப்பாய்
ஆகாசத்தை நோக்கி அழுவன்"

என்று வரும்போது, ஆகாசத்தை ஏன் நோக்குதல் என்று எடுத்துக் கொண்டு வடக்குத் திருவீதிப் பிள்ளை (ஈடு எழுதி யருளியவர்) சொல்லுகிறார்: "வயோதிகரான தசரத சக்கரவர்த்தி அப்படியே வெம்மை தோன்றப் பெருமூச்சு விட்டு ஆகாசத்தை நோக்கிய கண்களை உடையவராய்த் துக்கத்தால் பீடிக்கப் பட்டவன் போலக் கதறினர். வால்மீகி ராமாயணம் அயோத்தியா காண்டம் 13: 16-ல் கைகேயியின் வார்த்தையைக் கேட்ட தசரதன் துக்கப்பட்டதை வர்ணிக்கப்படுகிறது.

ததைவ உஷ்ணம் விநிச்வஸ்ய
விருத்ததோ தசரதோ ந்ருப:
விலலாப ஆர்த்தவத் துக்காத்
ககநாஸக்த லோசன:

"ககனாஸக்த லோசன:" என்றால் ஆகாயத்தில் ஒட்டிக் கொண்டு நின்ற கண்களை உடையவன் என்று பொருள். "அறிவின் பயனே!" என்று பகவானை நம்மாழ்வார் சொல்லிப் பாடும் இடத்தில் வியாக்கியானம், அறிவின் பயன்: ஞானத்துக்குப் பிரயோஜன ரூபமான சுகம் என்று கூறப்படுகிறது.

வடமொழியில் எடுத்துச் சொன்னால் சில சமயம் தமிழ் மொழியின் முழுப் பொருள் விளக்கமாகிறது. தமிழ் மொழியின் வளர்ச்சியில் வடமொழி எப்படிக் கலந்து பிணைபட்டு வந்திருக்கிறது என்பது இதனால் உணரலாம். சில இடங்களில் வடமொழிச் சொற்களே விளக்கம் தரும். வேறு சில இடங்களில் தமிழ் மொழியே அழகும் பொலிவும் தரும்.

இந்த ஐந்தாவது புஸ்தகத்தோடு திரு புருஷோத்தம நாயுடுவின் ஈட்டின் தமிழாக்கப் பணி பாதி முடிந்தது. இன்னும் ஐந்து புஸ்தகங்கள் வெளிவரும். முடித்துத் தரும் ஆற்றலும் ஆரோக்கியமும் ஊக்கமும் பகவான் அவருக்கு அருள்வானாக!

# நீங்கள் இன்று புரோடெக்ஸ் உபயோகித்தீர்களா?



நீங்கள் நாள் முழுதும் புதுமையுடனும்
வாசனையுடனும் இருக்க, உயர்ந்த,
புதிய புரோடெக்ஸ் ஆல்-பர்பஸ் டாய்லட்
பவுடர். மென்மையும், நறுமணமும்
சேர்ந்த புரோடெக்ஸ் குடும்ப முழுதுக்கும்
வெப்பத்தில் குளுமையும்
இனிமையும் தருகிறது.






ஸ்நானத்துக்குப் பின்
வாசனைப் பூஷணம். ஈரத்தை
உறிஞ்சி புதுமை தருகிறது.



குளுமை! குதூகலம்!
கோடையின் கொடுமையில்



நேர்த்தியும் மென்மை!
யும்-குழந்தைக்கு ஏற்றது.



மிக எடுப்பானது
உங்கள் வதனத்தை அழகு
படுத்தும் பவுடர்.

கால்கேட்டின் புதிய
சிறந்த தயாரிப்பு

## புரோடெக்ஸ் ஆல் பர்பஸ் டாய்லட் பவுடர்




அத்தியாயம் 13

## நற் செய்தி

**ம**காபலிபுரத்தில் அந்த அழகிய கற் கோயில்களைப் பார்த்த போது எனக்கு அங்கேயே இருந்து விட்டால் தேவலை என்றுதான் தோன்றியது. ஈசுவரமூர்த்தியும், பத்மநாபனும், நான் அந்த இடங்களைப் பூரணமாக அனுபவிப்பதற்கு இடையூறாக இருந்தார்கள். ஆயினும் அந்த அற்புத சிற்ப வடிவங்களைக் கண்டு மனத்துக்குள் வியக்காமலும் அனுபவிக்காமலும் இருக்க முடியவில்லை.

கலங்கரை விளக்கக் குன்றின்மீது நானும் சுலோவும் மறுபடியும் தனியாக ஏறிச் சென்றோம். அந்த மண்டபத்தின் வெளிப் பக்கத்தில் ஒரு அடி அகலத்துக்கு வராண்டா மாதிரி ஒரு இடமிருக்கிறது. அங்கு இருவரும் கடலைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்தோம். அந்த இடத்திலிருந்து கீழே பார்ப்பதற்கு மிக அழகாக இருந்தது. நீலக் கடலைப் பார்ப்பதற்குக் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

"ரங்கதுரை கப்பலில் போகும் போது நான்கு புறங்களிலும் கண்ணுக் கெட்டிய தூரம் நீலக்கடல் சூழ்ந்திருக்கு மல்லவா? அதை அவர் பார்த்து அனுபவித்திருப்பாரல்லவா?" என்று எண்ணமிட்டேன்.

சுலோசனா என்னையே சற்று நேரம் பார்த்துக் கொண்டிருந்தாள். என் மனத்தில் ஓடிய எண்ணங்களைப் புரிந்து கொண்டவள் போலப் பேசினாள். "இந்துமதி! நீ ரங்கதுரையைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் உன் முகத்தில் ஒரு தனியான பொலிவு ஏற்படுகிறது. சோகத்துடன் கூடிய ஒரு சோபையை உன் முகத்தில் காண்கிறேன். அதைப் பார்க்கும் போது தான் எனக்கு ஒரே வியப்பாக இருக்கிறது. 'அந்த 'அன்பு' என்பது என்ன? எங்கிருந்து வருகிறது? ஏன் உண்டாகிறது?' என்று பல கேள்விகள் என் உள்ளத்தில் எழுகின்றன" என்று கூறினாள்.

“இந்தக் கேள்விகளுக்கு எனக்குப் பதில் சொல்லத் தெரியாது, சுலோ! ஆனால் இந்த அன்பு என்று ஒன்று இருப்பதனால்தான் உலகம் நாசமாகாமல் இருக்கிறது. உலகம் அடியோடு அழிந்து போகாமல் காப்பதற்காக இறைவன் அன்பு உருவமாக இருக்கிறார் என நான் நினைக்கிறேன். சுயநல உணர்ச்சியை அழித்து இன்னொருவருக்கு உடல், பொருள், ஆவி அனைத்தையும் அர்ப்பணித்து விடக் கூடிய ஒரு உன்னத உணர்ச்சியை அன்புதான் அளிக்கிறது” என்று நான் கூறினேன்.

“இந்து! நீ சொல்வதை என்னால் மனப் பூர்வமாக ஒப்புக் கொள்ள முடியவில்லை. அன்பு என்பது இறைவன் சொரூபம் என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். ஆனால் அதை யாருமே அவ்வளவு தூய்மையாகக் கருதுவதில்லை. அன்பு செலுத்துவதுகூட ஒரு சுயநல நோக்கந்தான். உன்னுடைய விஷயத்தைப் பற்றி இப்போது நான் பேசவில்லை. பொதுவாகச் சொல்



கிறேன். மனப்பூர்வமாக நேசித்து மணம் செய்து கொள்கிறார்களே! அவர்கள் எப்போதும் சந்தோஷமாக இருக்கிறார்களா? மணந்து கொண்ட மூன்று மாதத்தில் முப்பது சண்டை போடுகிறார்கள். அது அன்பாகுமா?"

"ஒருவர் தவறு செய்தால் எல்லோரும் அப்படித்தான் இருப்பார்களென்று அர்த்தமா? ஒரு தாய் தன் குழந்தைகளிடம் தன்னலமற்ற அன்பு வைக்கவில்லையா? அது தூய்மையான அன்பல்லவா?" என்றேன்.

"தாயார் குழந்தையிடம் ஏன் அன்பு வைக்கிறாள்? தன் குழந்தை என்பதால்தானே? வேறு யாருடைய குழந்தை மேலாவது அன்பு வைக்க முடியுமா? ஆகவே அதுவும் 'தன்னுடையது' என்ற எண்ணத்தால் ஏற்பட்டதுதான். நான் தாய்மையைக் குறைத்துக் கூறுகிறேனென்று நினைக்காதே. ஆனால் அதிலும் சுயநலத்தின் ஒரு ரேகை இருக்கத்தான் செய்கிறது என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்" என்றாள் சுலோசனா.



இமே ஈசுவரமூர்த்தியும், பத்மநாபனும் ஒரு பாறையின் மீது உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். மலை மேலிருந்து அவர்கள் உட்கார்ந்திருந்த இடம் நன்றாகத் தெரிந்தது. அவர்கள் பின்னலிருந்த ஒரு புதருக்குப் பின்னுல் யாரோ உட்கார்ந்திருப்பது போலத் தோன்றியது. நான் திடுக்கிட்டேன். சுலோசனுவிடம் அதைக் காட்டினேன்.

"சுலோ! அப்பாவும், ஈசுவரமூர்த்தியும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்கிருர்களே, அவர்களுக்குப் பின்னுல் யாரோ ஒளிந்திருப்பது போலத் தோன்றுகிறது. நீ பாரேன். யாராக இருக்கும்?" என்று மிகுந்த கலவரத்துடன் கூறினேன்.

சுலோவுக்கும் தூக்கிவாரிப் போட்டது. "இந்த ரமேஷ் எங்கேயோ தொலைந்து போய் விட்டானே. சரி! நாம் இறங்கிப் போய்ப் பார்ப்போம், வா" என்று சொல்லிக் கொண்டே எழுந்திருந்தாள். உடனே புன்னகையுடன், "அங்கே ஒளிந்து கொண்டிருப்பது ரமேஷ் தான், இந்து. ஏதோ முக்கியமான சமாசாரம் அவர்கள் பேசுகிருர்கள் போலிருக்கிறது!" என்ருள்.

"உனக்கு எப்படித் தெரிந்தது?" என்று கேட்டேன்.

"ரமேஷ்தான் இன்று நீல நிற ஷர்ட் போட்டுக் கொண்டு வந்தானே, அதனுல் தெரிந்தது. இந்த ஈசுவரமூர்த்தி இன்னும் என்னதான் அப்பாவுடன் பேசுகிருரோ, தெரியவில்லை. பேசிப் பேசிக் குடியைக் கெடுத்ததெல்லாம் போதாதா? இன்னும் என்னவெல்லாம் ஆகப் போகிறதோ?" என்று கவலைப் பட்டாள்.

"ராமேச்வரம் போயும், சனீச்வரன் விடவில்லை என்பார்கள். அந்த மாதிரி இந்த அற்புதமான இடத்துக்கு வந்தும் நம்மால் ஒன்றையும் பூரணமாக அனுபவிக்க முடியவில்லை. வீட்டையும், கவலைகளையும் சேர்த்து இங்கே கொண்டு வந்து விட்டோம்" என்றேன் நான்.

ரமேஷிடம் சுலோ வைர விஷயத்தைப் பற்றிக் கூறியபோது அவர் தனக்கு ஏற்கெனவேயே அந்த விஷயம் தெரியுமென்றும், அதைத் தடுப்பதற்குத்தான் முயற்சி செய்து வருவதாயும் கூறினுராம். மேலும் வைரம் அனுப்புபவனிடம், இனிமேல் வைரம் அனுப்பினுல் போலீஸில் பிடித்துக் கொடுத்து விடுவதாகப் பயமுறுத்தினுராம். அதனுல்தான் அவன் அனுப்புவதை நிறுத்தி விட்டானும். இதைக் கேட்டதும் எனக்கு மிக்க ஆச்சரியமாக இருந்தது. ரமேஷின் திறமையையும், ஆழ்ந்த உள்ளத்தையும் உணர்ந்து பாராட்டினேன்.

"ரமேஷ் மாதிரி ஒரு சகோதரன் உனக்கு இருப்பதைப் பற்றி நீ ரொம்பப் பெருமைப்பட வேண்டும்" என்றேன்.

"உண்மைதான். அவனைப் பார்த்தால் விளையாட்டுத்தனமாக இருப்பதாகத் தோன்றும். ஆனுல் எதுவாக இருந்தாலும் நிதானமாக யோசித்துச் சரியான முடிவுக்கு வருவான். சரி! போகலாம், வா! போய்ச் சாப்பிடலாம். வேறு எது எப்படியிருந்தாலும், ஈசுவரமூர்த்தி சாப்பாட்டுக்கு நல்ல ஏற்பாடு செய்திருப்பார்" என்று கூறி எழுந்தாள் சுலோ.

இருவரும் இறங்கிச் சென்ருேம். ஈசுவர மூர்த்தியும், பத்மநாபனும் நாங்கள் குன்றின் அடிவாரத்துக்குப் போனதும் எழுந்து வந்தார்கள். ரமேஷும் எங்கிருந்தோ வந்து சேர்ந்தார். எல்லோரும் காரில் ஏறிக் கொண்டு விருந்தினர் விடுதிக்குச் சென்ருேம்.

நாங்கள் எதிர்பார்த்ததை விடச் சமையல் எல்லாம் ருசியாக இருந்தது. பலவிதமான பட்சணங்கள் வேறு. பழங்கள் வேறு. கல்யாணச் சாப்பாடு மாதிரி இருந்தது. அத்தனை எதற்காக என்று எனக்கு விளங்கவே இல்லை.

சுலோசனுவிடம் நான் அதைக் கூறியபோது, "எல்லாம் உனக்காகத்தான் செய்திருக்கிருர் போலிருக்கிறது. அவருடைய செல்வத்தை நீ இதன் மூலம் எடை போட்டுக் கொள்ளலாமல்லவா? சீச்சீ! மனிதனு இவன்? குள்ள நரியைப் போல் தந்திரக்காரன்" என்று அவள் அளவற்ற வெறுப்புடன் கூறினுள்.

அவளுக்கு ஈசுவர மூர்த்தியின்மேல் சொல்ல முடியாத வெறுப்பு ஏற்பட்டிருந்தது. ஆனுல் அதை அவள் வெளிப்படையாகக் காட்டிக் கொள்ளவும் முடியவில்லை.


Apothecary
E.Taeschner's
TRADE MARK
Pertussin
Name reg'd.
Formula:
Infa Limited
and bronchial catarrh
whooping-cough

சாப்பிட்ட பிறகு எல்லோரும் இளைப்பாறினோம். மறுபடியும் பஞ்ச ரதங்கள் இருந்த இடத்துக்குப் போனோம். நாங்கள் போனபோது அங்கே ஒரு அயல் நாட்டுத் தம்பதிகள் எல்லாவற்றையும் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களிடம் காமிரா ஒன்று இருந்தது. பலவித கோணங்களில் நின்று ஒவ்வொரு ரதத்தையும் படம் எடுத்தார்கள். சுலோசனா மெதுவாக அவர்களிடம் சிநேகம் பிடித்துக் கொண்டாள். அவர்களிருவரும் இங்கிலாந்திலிருந்து விடுமுறை நாட்களைக் கழிப்பதற்காக வந்தார்களாம். அவர் ஏதோ ஒரு யுனிவர்ஸிடியில் பேராசிரியராம். மிஸ்டர் தாம்ஸன் என்பது அவர் பெயர். அவரது மனைவியின் பெயர் மிஸஸ் வயலெட் தாம்ஸன். இந்த விவரங்களையெல்லாம் சுலோசனா அவர்கள் இருவரிடம் பேசிக் கொண்டிருக்கும்போது நான் தெரிந்து கொண்டேன்.

என்னைச் சுலோசனா தன் சகோதரி இந்துமதி என்று அவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைத்தாள்.

மிஸஸ் தாம்ஸன் என்னுடன் கையைக் குலுக்கி விட்டு, "என்ன அழகான பெண்! இவளுடைய கண்கள் மிகவும் கவர்ச்சிகரமாக இருக்கின்றன" என்று சுலோவைப் பார்த்துக் கூறினாள். பிறகு என்னையும் சுலோவையும் போட்டோ எடுக்கச் சொல்லித் தன் கணவனிடம் கூறினாள். அவரும் எடுத்தார். இவர்கள் இங்கிலாந்திலிருந்து வந்தவர்கள் என்று தெரிந்ததிலிருந்து எனக்கு மனம் துடித்துக் கொண்டிருந்தது. அதிலும் சர்வகலாசாலையில் பேராசிரியர் என்றதும் ரங்கதுரையைப் பற்றி அவருக்குத் தெரிந்திருக்கலாமென்று தோன்றியது. சுலோசனாவிடம் இதைச் சொல்லிக் கேட்கச் சொல்ல வேண்டும் என்று தவித்தேன். ரமேஷ் பக்கத்திலிருந்ததால் அதைச் சொல்லுவதற்குக் கூச்சமாக இருந்தது.

பத்மநாபனும் ஈசுவர மூர்த்தியும் காரில் ஏறிக் கொண்டு புறப்பட்டார்கள். அவர்களுக்கு நாங்கள் அவர்களை அலட்சியம் செய்வதாகத் தோன்றியிருக்க வேண்டும். அதைக் கவனித்த ரமேஷ், "நானும் போகிறேன். போய் இறங்கிக் கொண்டு வண்டியை அனுப்புகிறேன்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டார். அதன் பிறகு சுலோசனாவிடம் "ரங்கதுரையைப் பற்றி அவர்களிடம் விசாரித்துப் பாரேன்" என்று தணிந்த குரலில் கூறினேன்.

சுலோ சிரித்தாள். "என்ன ஆசை இந்து உனக்கு? அவர் எங்கே இருக்கிறாரோ என்னமோ? இவர்களுக்கு அவரைத் தெரிந்திருக்குமென்பது என்ன நிச்சயம்?"

எனக்கு வெட்கமாகப் போய் விட்டது. ஆனால் சுலோசனா விடவில்லை. அவர்களிடம் மெதுவாகப் பேச்சுக் கொடுத்துத் தெரிந்து கொள்வதற்கு முயன்றாள்.

"தென்னிந்தியாவிலிருந்து இப்போதெல்லாம் பல மாணவர்கள் இங்கிலாந்துக்குப் படிக்க வருகிறார்கள் அல்லவா?" என்று கேட்டாள்.

"ஆம். இப்போது இந்தியாவிலிருந்து பல மாணவர்கள் வருகிறார்கள். ஆனால் எந்த இடத்திலிருந்து வருகிறார்கள் என்பது எனக்குத் தெரிவதில்லை" என்றார் அந்தப் பேராசிரியர்.

"எங்களுக்குத் தெரிந்த ஒருவர் அங்கு இரண்டு வருஷங்களுக்கு முன்னால் போனார். அதனால் கேட்டேன்" என்றாள் சுலோ.

"அவர் பெயர் என்ன?" என்று கேட்டார் அவர்.

"அவருடைய பெயர் ரங்கதுரை" என்றாள் சுலோசனா.

பேராசிரியரின் முகம் மலர்ந்தது.

"ராங் டுரை. ஆமாம்! என்னுடைய யூனிவர்ஸிடியில் ஒரு மெட்ராஸ் மாணவன் அந்தப் பெயரில் படித்துக்கொண்டிருந்தார். பார்க்கச் சற்று சிவப்பாக லக்ஷணமாய் இருப்பார். ரொம்பக் கெட்டிக்கார மாணவன்" என்று கூறினார் அவர்.

என் உள்ளம் ஆனந்தத்தால் விம்மிப் பூரித்தது. கண்ணீர்கூட வந்துவிடுமோ என்று பயந்தேன். மிகச் சிரமப்பட்டு உணர்ச்சிகளையெல்லாம் அடக்கிக் கொண்டேன்.

"இப்போது அவர் அங்குதானே இருக்கிறார்?" என்று பேராசிரியரிடம் கேட்டாள் சுலோசனா.

"எனக்குத் தெரியவில்லை. நான் லீவு எடுத்துக் கொண்டு எட்டு மாதங்களுக்கு மேல் ஆகிறது. ஆகவே அதன் பிறகு நடந்தது ஒன்றும் எனக்குத் தெரியாது" என்று கூறினார் பேராசிரியர் தாம்ஸன்.

"அவரைப் பற்றி வேறு ஒன்றும் உங்களுக்குத் தெரியாதா?" என்று சுலோ கேட்டாள்.

"தெரியாதே!" என்று அவர் பதில் கூறினார்.

எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தை விவரிக்க முடியாது. கைக் கெட்டிய விஷயம் வாய்க் கெட்டாமல் போய் விட்டதே என்று வருந்தினேன். சுலோசனா என் ஏமாற்றத்தை உணர்ந்தாள். என்னிடம், "நாம் என்ன செய்வது? இதற்குமேல் அவர்களிடம் எப்படி விசாரிப்பது?" என்றாள்.

நானும் என் ஏமாற்றத்தை அதிக மாக வெளிக் காட்டிக் கொள்ளவில்லை. மொத்தத்தில் ரங்கதுரை சௌக்கிய மாக இருக்கிறாரென்பதாவது தெரிந்ததே என்று சந்தோஷப்பட்டேன். அதையே ஒரு நற்செய்தியாகக் கருதினேன். நல்ல வேளையாக மகாபலிபுரத்துக்கு வந்தோமே என்று எண்ணிச் சந்தோஷப் பட்டேன்.

## அத்தியாயம் 14

# "தேநீர் விருந்து"

மிஸ்டர் தாம்ஸன், மிஸஸ் வயலட் தாம்ஸன் இருவரும் ஏதோ ஒரு புத்தகத்தை வைத்துக் கொண்டு அங்கிருந்த சிற்பங்களைப் பற்றியெல்லாம் படித்து விவரங்களைத் தெரிந்து கொள்ள முயன்று கொண்டிருந்தார்கள். ஆனால் அவர்களுக்கு அந்தப் புத்தகத்தில் எழுதியிருந்த விஷயங்கள் போதவில்லை. சுலோசனா அவர்களுக்குப் பல கதைகளும், சரித்திர பூர்வமான சம்பவங்களும் சொல்லி விளக்கிக் கொண்டிருந்தாள்.

பகீரதன் தவம் சிற்பத்தைப் பற்றி அந்தப் புத்தகத்தில் அர்ஜுனன் தவம் என்று எழுதி ஏதோ ஒரு கதையும் எழுதியிருந்ததாம். அதைத் தவறு என்று சுலோசனா அவர்களுக்கு எடுத்துச் சொன்னாள். அந்தச் சிற்பத்துக்கு மறுபடியும் அழைத்துக் கொண்டு போய், பகீரதன் தவம் செய்த கதையைச் சொல்லி, அங்கேயிருந்த சிற்பங்களைப் பற்றியும் விவரமாகச் சொன்னாள். சுலோசனாவுக்கு இத்தனை விஷயங்கள் தெரிந்திருப்பது எனக்கே அதிசயமாக இருந்தது.

பிறகு கிருஷ்ணன் கோவர்த்தன கிரியைப் பிடித்த கதையைச் சொன்னாள். அவர்கள் மிகவும் சந்தோஷப் பட்டனர். இப்படி மணி ஆறாகிவிட்டது. "நாங்கள் கிளம்ப வேண்டும்" என்று கூறினாள் சுலோ.

ஸ்ரீமதி வயலெட், "அதற்குள் போக வேண்டுமா? இன்று பௌர்ணமி யாயிற்றே? நாங்கள் இந்த இடத்தைப் பௌர்ணமி நிலவில் பார்த்து விட்டுத்தான் போகப் போகிறோம்" என்றாள்.

உடனே சுலோசனாவுக்கும் அங்கே இருக்க வேண்டுமென்று தோன்றி விட்டது. விருந்தினர் விடுதிக்குப் போய் அப்பாவிடம் பௌர்ணமி நிலவில் அந்த இடத்தைப் பார்த்து விட்டுத்தான் போக வேண்டுமென்று கூறினாள். அவரும் அரைமனத்துடன் அதற்குச் சம்மதித்தார். இரவு நிலாச் சாப்பாட்டுக்கு ஏற்பாடு செய்யச் சொன்னாள் சுலோசனா.

ரமேஷ், சுலோ, நான் மூவரும் கடற்கரைக் கோயிலுக்குச் சென்றோம். ஸ்ரீமதி வயலட்டும், ஸ்ரீ தாம்ஸனும் அங்கு இருந்தார்கள். அந்த இடத்தின் அழகைப் பற்றியும், அதை உருவாக்கிய சிற்பிகளின் திறமையைப் பற்றியும் அந்தக் காலத்து அரசர்களின் கலையுள்ளத்தைப் பற்றியும் பேசிப் பேசி மகிழ்ந்தோம்.

நிலாச் சாப்பாடு உண்மையிலேயே அன்று ருசியாக இருந்தது. தாம்ஸன் தம்பதிகளும் கலந்து கொண்டனர். ரங்கதுரை சௌக்கியமாக இருக்கிறார் என்று தெரிந்தபடியால் எனக்கும் அன்று உற்சாகமாகவே இருந்தது.

சுலோசனா அவர்கள் தங்கியிருக்குமிடத்தைத் தெரிந்து கொண்டாள். அவர்கள் இருவரையும் வீட்டுக்கு வரும்படி அழைத்தாள்.



# உங்கள் பற்களுக்கு இந்த சிறப்பு மிகுந்த பராமரிப்பு அவசியம்!

**ஆக்டிவ் க்ளோரோபில் மற்றும் 'கோலினஸ்' நுரை — இவ்விரண்டும் பற்களின் ஆரோக்கியத்திற்கு சிறந்த மார்க்கம்!**

ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினஸ்' உங்கள் பற்களை வெண்மையாக்குவதுமட்டுமின்றி, பல்சிதைவிற்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளுக்கு ஆரோக்யமூட்டுகிறது. உங்கள் வாய் மணிக்கணக்கில் புதுமணங்கமழ விளங்குகிறது!

அற்புதமான 'கோலினஸ்' நுரையில்தான் இதன் ரகசியம் அடங்கியுள்ளது. அது ஆக்டிவ் க்ளோரோபிலை வாயில் பிரஷ் நுழைய முடியாத ஒவ்வொரு மூலை முடுக்கிற்கும் எடுத்துச் செல்கிறது.

**உங்கள் பணத்திற்கு மிகுந்த பயன் தருவது**

'கோலினஸ்' நுரையினால் அதிசயிக்கத் தக்க சிக்கனமும் கிடைக்கிறது. ஈரமில்லாத பிரஷில் அரையங்குல அளவே போதுமானது. ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினஸ்' பச்சை நிற பேஸ்டை வாங்கத் தவறாதீர்கள்!




OK. 1171(A)

# பருக்களும் விகாரமான சருமமும் 24 மணி நேரத்தில் குணமடைகிறது

நிக்ஸோடெர்ம் (Nixoderm) கண்டு பிடித்தது முதல் யாருமே எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டி ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும், உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடெர்ம் (Nixoderm) உதவியால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அனாயாசமாக வைத்துக் கொண்டு பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் தராதீர்.

## ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் உபயோகித்த இதர களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவும் போதே ஒரு பவுடரைப்போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தை தாக்குகிறது. நிக்ஸோடெர்ம் (Nixoderm) மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷத்தில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக மிருதுவாகப் பட்டுப் போல வழவழப்பாகவும் ஆக்குகிறது.

## விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடெர்ம் (Nixoderm) மற்றதைவிட சீக்கிரம் வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சலை சில நிமிஷத்தில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்றி, மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி—நாடிய வைத்தியம் கிடைத்ததை உணர்வீர்கள். நிக்ஸோடெர்ம் (Nixoderm) ஆயிரக் கணக்கானவர்களது சருமத்தைச் சுத்தமாக்கி







புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார். "12 வருஷமாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப்பிறகு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தேன். 10 நிமிஷத்தில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தின் மாறுதலைக் கண்ட நண்பர்கள் ஆச்சரியமடைந்தனர்."

## திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்தியாகாத வரை நிக்ஸோடெர்ம் (Nixoderm) மதிப்பை இழக்கிறது. இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். தோற்றத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் காண ஆச்சரியப்படுவீர்கள். ஒரு வாரத்துக்கு உபயோகித்தால் சருமம் வழவழப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து, கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். அதற்களித்த உத்தரவாதமே உங்களுக்கான உறுதி.

BD 22

---

**மீண்டும் ஒரு கடிகாரம் இனாம்:** ஒரே தடவையில் ஏதாவது மூன்று கடிகாரங்கள் வாங்குபவர்களுக்கு ஒரு கைக் கடிகாரமும், இரண்டு கடிகாரங்கள் வாங்குபவர்களுக்கு ஒரு பாக்கெட் கடிகாரமும் ஒரு கடிகாரம் வாங்குபவர்களுக்கு ஒரு கோல்ட் கேப் பவுண்டன் பேனாவும் இனாமாக அளிக்கப்படும்

புகழ்பெற்ற ஸ்விஸ் தயாரிப்பு ஒவ்வொன்றும் 5 வருஷ உத்திரவாதம்

No. 288A
Size 8¼"



17 ஜுவல்ஸ் பின் லீவர் குரோம் 42/-
17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 48/-

No. 71
Size 7¼"



15 ஜுவல்ஸ் வளைவு ரோல்டு கோல்டு 37/-
15 ஜுவல்ஸ் டோனோ ரோல்டு கோல்டு 39/-

No. 9968 Size 10¼"



15 ஜுவல்ஸ் சிறிய செகண்டு ரோ.கோ. 30/-
15 ,, சென்டர் செகண்டு ரோ.கோ. 33/-



பாக்கெட் கடிகாரம்
(ஆன்ஸிரியா)

சாதா டயல் 12/-
ரேடியம் டயல் 15/-
15 ஜுவல்ஸ் 35/-

NO. 500A
Size 10½"



15 ஜுவல்ஸ் வாட்டர்ப்ரூப் ரேடியம் 42/-
17 ஜுவல்ஸ் வாட்டர்ப்ரூப் ரேடியம் 48/-

No. 6042 Size 10½



சிறிய ரோல்டு கோல்டு மிராஜ் 22/-
ரோல்டு கோல்டு டைம்ஸ் 24/-

**PIONEER WATCH CO., Post Box No. 11428, CALCUTTA - 6**

பிறகு பேச்சு வாக்கில் அவர்கள் இந்திய நாட்டியங்களைப் பற்றி விசாரித்தார்கள். சுலோசனாவும் தெரிந்த வரை பதில் சொன்னாள். பிறகு, "எனக்கு நாட்டியத்தைப் பற்றி அதிகமாகத் தெரியாது. ஆனால் சென்னையில் உங்களை என்னுடைய சிநேகிதி சுகந்திக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன். அவள் நடனம் கற்றுக் கொள்கிறாள். அவளிடமிருந்து நீங்கள் பல விஷயங்களைத் தெரிந்து கொள்ளலாம்" என்றாள்.

பௌர்ணமி நிலவிலே அந்த மாமல்லபுரம், ஒரு கனவுலகமாகத் திகழ்ந்தது. உள்ளம் பரவசமாகி நான் என்னை மறந்து உட்கார்ந்திருந்தேன். ஒருவருமில்லாமல் தனியாக அங்கே இருந்தால் தேவலை என்று தோன்றிக் கொண்டிருந்தது. வெகு நேரம் கழித்துத்தான் புறப்பட்டோம்.

மறுநாள் சுலோசனா என்னிடம் வந்து, "இந்து! ரமேஷ் ஒரு முக்கியமான விஷயம் சொன்னான். உன்னிடம் சொல்லக் கூடாது என்று சொன்னான். ஆனால் என் மனம் கேட்கவில்லை. ஆகவே சொல்லுகிறேன்" என்று கூறினாள்.

நான் ஆவலுடன், "என்ன விஷயம் சுலோ?" என்றேன்.

"நேற்று அப்பாவும், ஈசுவரமூர்த்தியும் பேசிக் கொண்டிருந்த போது ரமேஷ் ஒரு புதருக்குப் பின்னால் ஒளிந்து கொண்டிருந்தானல்லவா? அதைப் பற்றி இப்போதுதான் கேட்க முடிந்தது" என்றாள்.

"என்ன சொல்லிக் கொண்டிருந்தார்களாம்?" என்று கேட்டேன்.

"அப்பாவுக்கு இப்போது ரொம்பப் பணமுடையாம். வைரம் கொடுத்தவனுக்குப் பணம் கொடுத்தாக வேண்டுமாம். முப்பதாயிரமோ என்னவோ கொடுக்க வேண்டுமாம். அதற்காக உன்னுடைய பணத்தைக் கொடுத்து விடப் போகிறாராம்" என்றாள்.

"ஒழிந்து போகட்டும். இந்த வீட்டில் நான் பட்ட கடனுக்கு அதுவாவது உதவ முடிந்தால் சந்தோஷம் தான்" என்றேன்.

சுலோசனா முகத்தைக் கோபமாக வைத்துக் கொண்டாள். "சே! உன்னிடம் போய்ச் சொல்லுகிறேனே" என்று அலுத்துக் கொண்டாள்.

அவளுடைய அன்பு உள்ளத்தைக் கண்டு எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆயினும் என்னுடைய பணம் அந்த வீட்டுக்கு அவசரத்துக்கு உதவியாக இருப்பது பற்றி உண்மையிலேயே சந்தோஷமாகத்தான் இருந்தது.

சுலோசனா வருத்தத்துடன், "இந்துமதி! அப்பா இப்படியெல்லாம் செய்வாரென்று நான் நினைக்கவே இல்லை. அந்தச் சனி ஈசுவர மூர்த்திதான் அப்பாவுக்குச் சொன்னாராம்" என்றாள்.

"என்ன சொன்னாராம்?" என்று வியப்புடன் கேட்டேன்.

"அப்பா தன்னிடம் வைர வியாபாரிக்குக் கொடுப்பதற்குப் பணமில்லை என்றும், எப்படிப் பணம் புரட்டுவது என்று தமக்குத் தெரியவில்லை என்றும் கூறினாராம். அதற்கு ஈசுவரமூர்த்தி, 'இந்துமதியின் பணம் இருக்கிறதே. அதைக் கொடுத்து விடலாமே?' என்றாராம். அப்பா, 'அதை எப்படிக் கொடுக்க முடியும்? அது நியாயமாகாது' என்றாராம். 'நீங்கள்தானே அவளைக் காப்பாற்றுகிறீர்கள்? அவளுடைய பணத்தை அவசரத்துக்கு உபயோகித்துக்கொண்டால் ஒரு தவறும் இல்லை. திருப்பிக் கொடுத்து விட்டால் போகிறது. அப்படியே கொடுக்கா விட்டாலும் பரவாயில்லை. அவளுடைய பணத்தைக் கொடுக்கச் சொல்லிக் கேட்க நான் விடமாட்டேன். என்னிடம் அவளை ஒப்படைத்த பிறகு பணம் நீங்கள் கொடுத்தால் என்ன? கொடுக்காவிட்டால் என்ன?' என்றாராம். ரமேஷுக்கு அப்படியே ஒரு பெரிய கருங்கல்லைத் தூக்கி அவருடைய மண்டையில் போட்டு விட்டால் என்ன என்று தோன்றியதாம்."

"எனக்குப் பணத்தைப் பற்றிச் சிறிதும் அக்கறையில்லை, சுலோ. ஒரு அனாதையான என்னைத் தம் வீட்டில் கொண்டு வந்து வைத்துக் காப்பாற்றுபவருக்கு, அவசியம் நேரும்போது அது பயன்படுவதைப் பற்றி நான் சந்தோஷமே அடைகிறேன். ஆனால் நல்ல வழியில் செலவழிந்தால் ரொம்ப சந்தோஷமாக இருக்கும். ஆனால் ஈசுவரமூர்த்தி சொன்னதைக் கேட்

கும்போதுதான் என் ரத்தம் கொதிக்கிறது. என்னுடைய பணத்தாலேயே என்னை விலைக்கு வாங்கப் பார்க்கிறானே அந்தப் பாவி. அவன் நன்றாக இருப்பானா?" என்று மிகுந்த ஆத்திரத்துடன் கூறினேன்.

கோமளவல்லி அம்மாள் என்னைக் கூப்பிடும் குரல் கேட்டது. "சுலோ! அம்மா கூப்பிடுகிறார். நான் போகிறேன். நீ பணத்தைப் பற்றிக் கவலைப் படாதே! என்னைப் பற்றிக் கவலைப் பட்டால் போதும்" என்றேன்.

பேராசிரியர் தாம்ஸன் அவர்களுக்கும், மிஸஸ் தாம்ஸன் அவர்களுக்கும் சுலோசனா ஒரு 'டீபார்ட்டி' நடத்தினாள். அவளுடைய சிநேகிதிகள் பலர் வந்திருந்தனர். குமாரி சுகந்தியை அவர்களுக்குச் சுலோசனா அறிமுகம் செய்து வைத்தாள். ஜோதிலாவும், சோபனாவும் வந்திருந்தனர். அவர்களையும் அறிமுகப்படுத்தி வைத்தாள்.

அன்று சுலோசனா என்னை நாகரிகமாக அலங்கரித்துக் கொள்ளச் சொல்லி வற்புறுத்தினாள். ஆகவே நானும் அவளைப் போலவே அழகாக அலங்கரித்துக் கொண்டிருந்தேன்.

அன்று மாலை பூந்தோட்டம் மிக அழகாக விளங்கியது. பூத்துக் குலுங்கும் புஷ்பச் செடிகளுக்கிடையே விதவிதமான வர்ணச் சேலைகள் உடுத்திய பெண்கள் உலவியது மிகவும் அழகாக இருந்தது.

ஜோதிலாவுடன் ஒரு புதிய மனிதர் ஒருவர் வந்திருந்தார். அவருடைய பெயர் கிஷோர் பாபு என்று சுலோசனா சொன்னாள். அவர் என்னைப் பற்றி ரொம்ப விசாரித்ததாக எனக்குத் தோன்றியது. என்னைக் காட்டி அவர் ஏதோ ஜோதிலாவிடம் சொல்லிக்கொண்டிருப்பதாக நினைத்தேன். ஆனால் மறுநாள் நடந்த விஷயத்தை நான் எதிர்பார்க்கவேயில்லை.

கிஷோர் பாபுவும், ஜோதிலாவும் பத்மநாபனைப் பார்க்க வந்தார்கள். அவர்கள் சென்ற பிறகு பத்மநாபன் என்னைக் கூப்பிட்டு, "இப்போது வந்தாரே கிஷோர் பாபு அவர் தென்னிந்தியாவைப் பற்றி ஒரு புதிய படம் எடுக்கப் போகிறாராம். அதில் அரச குமாரியாக நடிப்பதற்கு உன்னை அனுப்ப முடியுமா என்று அவர் கேட்கிறார்" என்றார்.

நான் இதைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லையாதலால் திகைத்து நின்றேன். சுலோசனாதான் பேசினாள். "நிஜமாகவா, அப்பா! நீங்கள் என்ன சொன்னீர்கள்?" என்று கேட்டாள்.

"முதலில், அவளுக்கு ஒன்றுமே தெரியாது, கிராமாந்திரத்துப் பெண், வரமாட்டாள் என்று சொல்லிப் பார்த்தேன். 'நாங்கள் எல்லாம் சொல்லித் தருகிறோம். நீங்கள் அனுமதித்தால் போதும்' என்றார்கள். எவ்வளவு ரூபாய் தருவீர்கள் என்று கேட்டு வைத்தேன். 'இருபதினாயிரம்' தருவதாகச் சொன்னார்கள். கடைசியில் உன்னிடம் கேட்டு விட்டுச் சொல்வதாகச் சொல்லி அனுப்பி விட்டேன். அப்படிச் சொல்லும்வரை அவர்கள் விடவில்லை. இதோ உன்னையும் கேட்டு விட்டேன்" என்றார்.

"எனக்குச் சினிமாவும் வேண்டாம். நடிப்பும் வேண்டாம். ஒரு நாளும் நான் இதற்கு உடன்பட மாட்டேன். நிச்சயமாக முடியாதென்று சொல்லி விடுங்கள். லக்ஷ ரூபாய் கொடுத்தாலும் வேண்டாம்" என்று சொல்லி விட்டுப் போய் விட்டேன்.

சுலோ என்னைத் தொடர்ந்து வந்தாள். "என்ன இந்து யோசிக்காமலேயே பதில் சொல்லி விட்டாயே?" என்று குறைப்பட்டாள்.

"இதில் யோசிக்க ஒன்றுமே இல்லை, சுலோ. நான் இப்போது சினிமாவில் சேர்ந்து நடித்து என்ன ஆகவேண்டும்? ரங்கதுரை சீக்கிரம் வந்து விடுவார். அதன் பிறகு எனக்கு என்ன வேண்டும்? பணமும் வேண்டாம். பதவியும் வேண்டாம். அவர் வருவதைத்தான் நான் வேண்டுகிறேன்" என்றேன்.

அவ்வளவு நிச்சயமாக அன்று சினிமாவில் சேர மாட்டேனென்று அவர்களிடம் கூறினேன். ஆனால், பின்னால் என்ன ஆயிற்று? சினிமாவில் நடித்துப் புகழின் உச்சியை எட்டிப் பிடித்தேன். என்ன விசித்திரமான உலகம்! நாம் நினைப்பது போல் எதுதான் நடக்கிறது? வேண்டாம், வேண்டாம் என்று நான் சொன்ன விஷயங்கள் என்னைத் தேடி வந்துசேர்ந்தன. வேண்டும் என்று ஏங்கியது கிடைக்காமலேயே போயிற்று. (தொடரும்)

# தமிழ் கூறும் நல்லுலகம்

இன்றையத் தமிழ் உலகம் மிகவும் விரிவடைந்து விட்டது. சமீபத்தில் ஒரு அன்பர் இங்கிலாந்திலிருந்து தாம் 'கல்கி'யை எவ்வளவு ஆர்வத்தோடு படித்து வருகிறார் என்பதைப் பற்றி நமக்கு ஒரு கடிதம் எழுதியிருந்ததை வட்டமேஜைப் பகுதியில் பார்த்து நமது நேயர்கள் மகிழ்ந்திருப்பார்கள். இப்படி 'கல்கி' அன்பர்கள் பரவியுள்ள இடம் ஒரு கட்டுக் கடங்காமல் விரிவடைந்து வருகிறது. அத்துடன் அவர்கள் தமிழ் ஆர்வமும் எவ்வளவு மகத்தானதாக இருக்கிறது! அவர்கள் வசிக்கும் பகுதிகளில் நடத்தும் தமிழ் விழாக்களைப் பற்றியும் சங்கீத விழாக்களைப் பற்றியும் கடிதங்கள் வந்த வண்ணம் இருக்கின்றன. இந்த மகிழ்ச்சியூட்டும் செய்திகளை யாவருடனும் பகிர்ந்து அனுபவிக்க வேண்டுமென்று இப் புதுப் பகுதியைத் தொடங்கியுள்ளோம்.



புஷாவலில் திரு வாசனுக்கு வரவேற்பு

★

பம்பாய் ராஜ்யத்தைச் சேர்ந்த புஷாவலில் சினிமாப் படத் தயாரிப்பாளர் சங்கத்தின் தலைவர் திரு எஸ். எஸ். வாசனுக்கு புஷாவல் தென்னிந்தியர் சங்கத்தின் ஆதரவில் ஏப்ரல் 15ந்தேதியன்று ஒரு பாராட்டுக் கூட்டம் நடைபெற்றது. திரு எம். டி. பலராமன் சினிமா உலகுக்கும், இலக்கிய உலகத்துக்கும் திரு வாசன் புரிந்துள்ள சேவைகளைப் பாராட்டிப் பேசினார். அத்துடன், புஷாவல் தென்னிந்திய சங்கம் தோன்றிய இந்த இரண்டு ஆண்டுகளில் புரிந்துள்ள அருந் தொண்டுகளைப் பற்றியும், கூடிய விரைவில் சொந்தக் கட்டடம் ஏற்படுத்திக் கொள்ளச் செய்து வரும் முயற்சிகளைப் பற்றியும் பெருமிதத்துடன் கூறினார். பிறகு திரு வாசன் தென்னிந்தியர் சங்கம் செய்து வரும் தொண்டுகளைப் பாராட்டிப் பேசினார்.

★

இதோ, பாருங்கள்! குந்தக்கல்லிலிருந்து வரும் செய்தியை. குந்தக்கல் ஆந்திர சகோதரர்கள் வாழும் பகுதியாகும் என்பதை முதலில் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அங்கு குடியேறியுள்ள தமிழர்கள் தமிழ்ச் சங்கம் அமைத்து இலக்கியத் துறையில் நல்ல பணியாற்றி வருகிறார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் இணைவேந்தர் ராஜா சர் முத்தையா செட்டியார் பம்பாயிலிருந்து திரும்பி வரும்போது 26-4-55 அன்று இந்த ஊரில் இறங்கினார். உடனே குந்தக்கல் தமிழ்ச் சங்கத்தின் காரியதரிசி திரு கே. சுந்தரராமன், அவருக்கு மாலை சூட்டி உற்சாகமான வரவேற்புரை நல்கினார். செட்டியார் அவர்கள் குந்தக்கல் தமிழ்ச் சங்கத்தினரின் தமிழ் ஆர்வத்தையும், சேவைகளையும் பாராட்டி ரூ. 101/- சங்கத்துக்கு நன்கொடை வழங்கியிருக்கிறார்.

★

புனாவிலுள்ள சரஸ்வதி வித்யாலய யூனியன் உயர்தரப் பள்ளியின் வருஷாந்திரப் பரிசு விழா சென்ற ஏப்ரல் 3-ம் தேதி இந்திய சர்க்காரின் சுகாதார மந்திரி ஸ்ரீமதி மரகதம் சந்திரசேகரன் தலைமையில் நடைபெற்றது. அப்போது பள்ளிக்கூட மாணவ மாணவிகள் "பாதுகா பட்டாபிஷேகம்" என்னும் நாடகத்தை வெகு சிறப்பாக நடத்தினார்கள்.

இவை தவிர வடநாட்டின் பல பகுதிகளிலிருந்து ஸ்ரீ ராம நவமி உற்சவம் வெகு சிறப்பாகக் கொண்டாடியிருப்பதாக நமக்குச் செய்திகள் வந்திருக்கின்றன. கதா காலட்சேபம், பஜனைகள் முதலியவற்றுடன் வெகு கோலாகலமாக நடைபெற்றிருப்பதாக அறிந்து மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம்.



புனாவில் நடந்த "பாதுகா பட்டாபிஷேகம்"



# விஷ மந்திரம்

"கல்கி"

"பக்திமான்" என்றால் எங்கள் ஊர் போஸ்ட் மாஸ்டருக்கே தகும். பாகவத புராணமே அவருடைய வேதம்; கண்ணனே அவருடைய தெய்வம். வீட்டுக் கூடத்தில் அழகியதொரு சிறு மண்டபம் கட்டி, அதில் கண்ணபிரான் படத்தை ஸ்தாபித்திருந்தார். தினந்தோறும் மாலையானதும், அவர் மனைவி படங்களை மலர் மாலைகளால் அலங்கரித்துத் திருவிளக்கேற்றி வைப்பாள். போஸ்டுமாஸ்டர் தம்புராவில் சுருதி கூட்டிக் கொண்டு ராம ஜெபம் செய்வார். சனிக்கிழமை, ஏகாதசி தினங்களில் பஜனை நடைபெறும். சுண்டல், வடை, பாயசம்—குழந்தைகளுக்குக் கொண்டாட்டம்!

நாராயண ஐயருக்குச் சொந்தத்தில் குழந்தைகள் இல்லை. ஆனால், ஊரிலுள்ள குழந்தைகளெல்லாம் அவருடைய குழந்தைகள் போல்தான். இத்தனைக்கும் உபாத்தியாயர்! 'ஸார்' என்றால் பிள்ளைகளெல்லாம் உயிரை விடுவார்கள். பயத்தினாலன்று; பிரியத்தினால். அவருடைய மாணாக்கர்களுக்கு, இராமாயணம், மகா பாரதம், பாகவதம் இவற்றிலுள்ள கதைகள் ஒன்று விடாமல் தெரியும். தாயுமானவர் பாடலில் மூன்று பாடல் நெட்டுருவாய் ஒப்புவிக்கும் மாணாக்கனுக்குக் கற்கண்டு வாங்கித் தருவதாகச் சொல்வார். ஒருவரும் ஒப்பியாவிட்டால் கற்கண்டை எல்லாருக்கும் பங்கிட்டுக் கொடுத்து விடுவார்!

மார்கழி மாதம் வரப் போகிறதென்று நாராயண ஐயர் மனைவி புரட்டாசி மாதத்திலிருந்தே சாமான்கள் சேகரித்து வைப்பாள். அம்மாதத்தில் தினந்தோறும் வைகறையில் சிறுவர்கள் பஜனை செய்து கொண்டு ஊர்வலம் வருவார்கள். ஊர்வலம் போஸ்டு மாஸ்டர் வீட்டில் வந்து முடியும். பின்னர், பொங்கல், புளியோதரை, சர்க்கரைப் பொங்கல் வகையறுக்கள். குழந்தைகள் உண்டு ஆனந்திப்பதைக் கண்டு, கணவனும் மனைவியும் பெரு மகிழ்ச்சி எய்துவார்கள்.

நான் அவருடைய பழைய மாணாக்கனாதலால், அவரைப் பற்றி மிகைபடப் புகழ்ந்து கூறுகிறேன் என்று நீங்கள் சொல்லலாம். எங்கள் ஊருக்குச் சுற்றுப்புறம் ஐந்தாறு மைல் தூரத்துக்குச் சென்று யாரை வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள். ஒருமுகமாய் என்னை ஆதரித்துச் சாட்சி சொல்லுவார்கள். அப்பக்கத்தில் அவருக்கு அவ்வளவு செல்வாக்கு, மரியாதை.

அவருடைய செல்வாக்குக்குக் காரணம் செல்வமன்று. அவருக்குப் பொருட் செல்வம் அவ்வளவு இல்லை. மற்று, அவருடைய தூய ஒழுக்கமும், தெய்வ பக்தியுமே முக்கிய காரணங்களாகும். இத்துடன், அவருக்கு விஷக்கடி மந்திரத்தில் விசேஷத் தேர்ச்சியுண்டு. அவரிடம் ஜனங்கள் விசுவாசம் கொண்டிருந்ததற்கு இதுவும் ஒரு காரணமாகும். பகலிலும், இரவிலும், எந்த நிமிஷத்திலும், பாம்புக் கடி என்று வந்தால் அவர் சிறிதும் தயங்குவதில்லை. தலைவலியையும் மழைச் சுரத்தையும் பொருட்படுத்தாமல் அவர் உடனே தலைமுழுகி ஈரத் துணியுடன் மந்திரஞ் செய்யத் தொடங்குவார். மூர்ச்சையாகி வந்தவர்கள் விஷம் இறங்கப் பெற்றுத் தெளிவடைந்து 'தபால் ஐயரை' வாழ்த்திக் கொண்டு செல்வார்கள். ஆனால், ஐயரோ இரண்டு மூன்று தினங்கள் பொறுக்க முடியாத தலைவலி உபத்திரவத்தினால் மிகவும் வருந்திக் கொண்டிருப்பார்.

நாராயண ஐயருக்குக் காந்தியடிகளிடம் பக்தி அதிகம் உண்டு. அவர் தேச பக்தருங்கூட. வங்காளப் பிரிவினைக் காலத்திலிருந்து சுதேசி விரதம் அனுஷ்டித்து வருபவர். ஆனால், மகாத்மா காந்தியின் திட்டங்களுள் 'தீண்டாமை விலக்கு' மட்டுமே அவருக்கு விலக்கு. எனக்கும் போஸ்ட் மாஸ்டருக்கும் இது சம்பந்தமாய் நடந்த விவாதங்களுக்கு எல்லையில்லை. அவற்றை இங்கு எழுதுவதானால், கந்தபுராணமாக—முருகனடியார் மன்னிக்க—விரிந்து விடும்.

---

"சாரதையின் தந்திரம் முதலிய கதைகள்" என்ற புத்தகத்திலிருந்து.

அவருடைய அம்பறாத் தூணியில் எல்லா பாணங்களும் விட்டான பிறகு கடைசியாக அவர் பிரயோகிக்கும் பாணம் இதுவே :

"எல்லாம் சரி! நான் உனக்குப் பிரத்தியக்ஷமாகக் காட்டுகிறேன். கொடிய விஷ சர்ப்பம் தீண்டியவன் ஒருவன் இங்கு வரட்டும். மூன்றாவது மூர்ச்சை போட்டவனாகவே இருக்கட்டும். இதோ மந்திரம் செய்து விஷம் இறங்கச் செய்கிறேன் பார்! நீயே பலமுறை இந்த மந்திர சக்தியைப் பார்த்திருக்கிறாய். ஆனால், ஸ்நானம் செய்த பின்னர் ஒரு பறையனுடைய காற்று மட்டும் என் பேரில் பட்டு விடட்டும். அப்போது மந்திரம் பலிப்ப தில்லையே! இதற்கென்ன சொல்கிறாய்?"

அவருடைய இந்தப் பாசுபதாஸ்திரத்தை வெல்வதற்குத் தகுந்த அஸ்திரம் என்னிடம் வேறு எதுவும் இல்லை. ஆகவே, எங்களுடைய வாதங்களை எவரேனும் கேட்டுக் கொண்டிருந்தால், அவர் பக்கமே முடிவாகத் தீர்ப்புச் சொல்லி விடுவது வழக்கமா யிருந்தது.

## 2

தபால் ஆபீஸ் சோதனைக்கு இன்ஸ்பெக்டர் வந்திருக்கிறார் என்று ஒரு நாள் கேள்விப்பட்டேன். சற்று நேரம் வம்பு வளர்த்து விட்டு வரலாமென்று சென்றேன். தபால் இன்ஸ்பெக்டர் பெத்த பெருமாள் பிள்ளை சரசமாகப் பேசும் சுபாவமுடையவர். சிடுமூஞ்சித்தனம் அவரிடம் இல்லை. போதாததற்குக் கதர்த் துணியாலான உட்சட்டை அணிந்து கொண்டிருந்ததையும் கண்டேன். உடனே அவரிடம் காதல் கொண்டு விட்டேன். "இவர் ஒரு நான்—கோ—ஆபரேட்டர்" என்று போஸ்ட் மாஸ்டர் என்னை அறிமுகப்படுத்தி வைத்தார். பொது அரசாங்கக் காரியாலயங்களில் உத்தியோகஸ்தர்கள் நடந்து கொள்ளும் பான்மையைப் பற்றி எப்படியோ பேச்சு வந்தது. "நமது அடிமை வாழ்க்கையின் பயன் என்றே சொல்ல வேண்டும். மூப்பது ரூபாய் சம்பளம் பெறும் ஒரு குமாஸ்தா, தன்னிடம் யாரேனும் சிறு காரியத்துக்காக வந்து விட்டால், என்ன பாடுபடுத்துகிறான்! எத்துணைக் கர்வம்! இந்தத் தமிழ் நாட்டிலே எந்தத் தபால் சாவடிக்காவது, ரயில்வே ஸ்டேஷனுக்காவது போய், அங்குள்ள சிப்பந்திகளிடம் ஒரு சமாசாரம் தெரிந்து கொண்டு வந்து விடுங்கள் பார்க்கலாம். ஒரு நிமிஷத்துக்குள் 'போ, வா' என்று நூறு முறை கூறிச் 'சள்' என்று விழுகிறார்கள். தாங்கள் பொதுஜன ஊழியர்கள், பொதுஜனங்களின் பணத்திலிருந்து மாதச் சம்பளம் பெறுகிறவர்கள் என்பதைக் கனவிலும் நினைப்பதில்லை. மனிதருக்கு மனிதர் காட்ட வேண்டிய மரியாதையும் கிடையாது. மறந்தும் இவர்களிடமிருந்து ஓர் இன்சொல் வராது. மற்றவர் நம்மிடம் சிறு உதவி நாடி வந்தால் அதை ஒரு பாக்கியமாகக் கருதும் சுபாவம் நம்மவரிடம் எப்போது ஏற்படுமோ, தெரியவில்லை!" என்று இவ்வாறு சீர்திருத்தக்காரரின் உற்சாகத்துடன் சரமாரியாய்ப் பொழிந்தேன்.

"நீங்கள் சொல்வதில் பெரிதும் உண்மையிருக்கிறது. ஆனால், அவர்கள் இவ்வாறு நடந்து கொள்வதற்கு மற்றொரு காரணமும் உண்டு. அவர்கள் சிடுமூஞ்சிகளாவதற்கு வேலை மிகுதியே காரணம். இவ்வளவு தொந்தரவிலும் இனிய சுபாவமுடையவர் சிலர் இல்லாமற் போகவில்லை" என்றார் இன்ஸ்பெக்டர்.

"சந்தேகமில்லாமல்! இவ்வாறு பொது விதிக்கு விலக்கா யுள்ளவர்களில் நமது போஸ்ட்மாஸ்டரும் ஒருவர்" என்றேன்.

"இன்னும் எத்தனையோ தீமைகள் இந்நாட்டில் இருக்கின்றன. எல்லாவற்றிற்கும் பரிகாரம் சுயராஜ்யந்தான்" என்று போஸ்ட் மாஸ்டர் இடையில் புகுந்து கூறினார்.

சுயராஜ்யம், மகாத்மா காந்தி, ஒத்துழையாமைத் திட்டம்—என்று இவ்வாறு பேச்சு வளர்ந்து கொண்டே போய்க் கடைசியில், தீண்டாமையில் வந்து நின்றது.

"தீண்டாமைச் சாபம் தொலையாத வரையில் இந்நாட்டுக்கு விடுதலை கிடையாது" என்று ஒரேயடியாகக் கூறினேன்.

"அப்போது நமது வேத சாஸ்திரங்கள் மந்திரங்கள் எல்லாவற்றையும் ஆற்றில் கட்டி விட வேண்டியதுதான். அத்தகைய விடுதலை எனக்கு வேண்டாம்!" என்றார் நாராயணய்யர்.

இன்ஸ்பெக்டர் பெத்த பெருமாள் பிள்ளை எந்தக் கட்சியைச் சேர்ந்தவர் என்று தெரிந்து கொள்ளுவதற்காக நான் அவர் முகத்தைப் பார்த்தேன். அவருடைய முகம் இருண்ட மேகத்தால் மறைக்கப்பட்டது போல ஒரு கணம் கறுத்தது. மறு கணத்தில் அவர் எப்போதும்போல் புன்னகை புரிந்துகொண்டு, ஒரு பக்கத்து மீசையைத் தடவிக் கொண்டே, "போஸ்ட் மாஸ்டர் வைதிகத்தில் மிகுந்த பற்றுள்ளவர் போலிருக்கிறது" என்றார்.

"பறையனிடம் தீட்டு இருக்கிறது என்று தங்கள் கண்முன் நிரூபித்துக் காட்டுகிறேன்" என்றார் போஸ்டு மாஸ்டர். எனக்கு உள்ளுக்குள் பயம் தோன்றிற்று. இன்ஸ்பெக்டரை யாவது நமது கட்சிக்கு இழுத்துக்கொள்வோமென்று, "தங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டேன்.

"எனக்கு இவ்விஷயத்தில் அபிப்பிராயம் ஒன்றுமே யில்லை" என்று அவர் கையை விரித்து விட்டார். தோல்வி நிச்சயம் என்று எண்ணினேன். அப்போது என் முகம் மிகவும் சிறுத்துப் போயிருக்க வேண்டும். ஆனால், கையில் கண்ணாடி இல்லாமையால் நிச்சயமாகச் சொல்வதற்கில்லை.

"இருக்கட்டும், பறையனிடம் உள்ள தீட்டைப் பிரத்தியட்சமாய்க் காட்டுவதாகச் சொன்னீர்களே, அதென்ன!" என்று பெத்த பெருமாள் பிள்ளை கேட்டார். நான் போஸ்டு மாஸ்டரை முந்திக் கொண்டு, அவருடைய விஷமந்திரத்தின் வலிமையைப் பற்றிச் சொல்லி விட்டு, தீண்டாதவர் அருகில் வந்துவிட்டால், மந்திரம் பலிப்பதில்லை யென்று சொன்னேன்.

ஆனால், அந்தோ! தெய்வமும் போஸ்ட் மாஸ்டர் கட்சியை ஆதரிக்கிறதா என்ன! நான் சொல்லி முடித்தேனோ இல்லையோ, போஸ்ட் மாஸ்டருக்குத் துணை செய்யவே வந்தது போல, பாம்பு கடித்தவன் ஒருவனை நாலைந்து பேர் தூக்கிக் கொண்டு வந்து போட்டார்கள். "ஐயோ! காப்பாற்ற வேண்டும். இப்போது இரண்டாவது மூர்ச்சை

போட்டிருக்கிறது. பெரிய சர்ப்பம். இரண்டு பற்கள் நன்கு பதிந்திருக்கின்றன" என்று அவர்களில் ஒருவன் கூறினான். அப்போது நாராயணையரைப் பார்க்க வேண்டும்! ஐம்பது வயதுக்கு மேற்பட்டவரும், மலைச்சரத்தில் அடிபட்டுப் பலங்குன்றித் தள்ளாடி நடப்பவருமாகிய அவரிடம் அப்போது இருபது வயது இளைஞனுடைய சுறுசுறுப்புக் காணப்பட்டது. கடைக்கு ஓர் ஆளை அனுப்பிக் கற்பூரமும் மஞ்சளும் வாங்கிக் கொண்டு வரச் செய்தார். மற்றொருவனைச் சிறு கூழாங்கற்கள் இருபத்தொன்று பொறுக்கிக் கொண்டுவரச் சொன்னார். தாம் இன்ஸ்பெக்டரிடம் உத்தரவு பெற்று, எதிரிலிருந்த குளத்துக்குச் சென்று தலை முழுகி வந்தார். அவர் ஸ்னானம் செய்துவிட்டு வருகையில் அந்தப் பக்கத்திலேயே தீண்டாதவர் யாரும் வராதபடி பார்த்துக் கொள்ளச் செய்திருந்தார். மிக விரைவாகத் தபால் ஆபீஸ் கட்டிடத்துக்குள்ளே வந்து, ஈரத் துணியுடன் உட்கார்ந்து ஜபம் செய்ய ஆரம்பித்தார். தபால் இன்ஸ்பெக்டரும் அருகில் உட்கார்ந்து ஆச்சரியத்துடன் கவனித்துக் கொண்டிருந்தார்.

தம்முடைய உத்தரீயத்தின் ஓரத்தில் ஒரு துண்டு கிழித்து மஞ்சளில் நனைத்தார். இருபத்தொரு கூழாங்கற்களையும் அதில் வரிசையாகவும் தனித்தனியாகவும் முடிந்தார். இவ்வாறு முடிகையில் மந்திரமும் ஜபித்துக் கொண்டேயிருந்தார். சுமார் பதினைந்து நிமிஷம் இவ்வாறு ஜபம் நடந்தது. இத்தனை நேரமும் எதிரில் ஒரு தாம்பாளத்தில் பரப்பப்பட்டிருந்த விபூதியின் மத்தியில் கற்பூரம் இடைவிடாமல் எரிந்து கொண்டிருந்தது. ஜபம் முடிந்ததும், நாராயணையர் எழுந்து கூழாங்கற்கள் முடிந்த துணியை விஷந் தீண்டியவன் கழுத்தில் மாலையாகப் போட்டு முடிந்துவிட்டு, மந்திரித்த விபூதியை மேலே முழுவதும் பூசச் செய்தார். மூர்ச்சையுற்றுக் கிடந்தவனுக்குச் சில நிமிஷத்தில் பிரக்ஞை வந்தது. அரை மணி நேரத்துக்குள் அவன் பழைய நிலையை அடைந்து வீட்டுக்குச் சென்றான்.

## 3

போஸ்ட்மாஸ்டர் எங்களைப் பார்த்துச் சொல்லுகிறார்:—"ஏதோ இறைவன் அருளால் இந்த மந்திரம் எனக்குச் சித்தியாயிருக்கிறது. இதனால், வேறு எந்த வகையிலும் பரோபகாரம் செய்ய இயல்பு இல்லாத நானும் பிறருக்கு உபகாரமாயிருக்கிறேன். நான் தீண்டாமை விலக்குக்கு விரோதமாயிருக்கிறேனென்று இந்த வாலிப நண்பர் என்மேல் கோபங் கொள்கிறார்......"

இப்போது இன்ஸ்பெக்டர் புன்னகை செய்தார். எனக்குப் பெரிதும் அவமானமாயிருந்தது. காந்தியைத் திட்டலாமா வென்றும் தோன்றிற்று.

"ஆனால், நானோ, ஒரு ஜீவிய காலத்தின் அநுபவத்தின்மீது சொல்கிறேன். இதோ வைகுண்டத்தை எட்டிப் பார்த்தவனை இந்த மந்திரம் உயிர்ப்பித்திருக்கிறது. ஆனால், ஒரு பஞ்சமனுடைய காற்று மட்டும் என்பேரில் பட்டிருந்தால், ஏன், தூரத்திலுள்ள பறையன் ஒருவனைப் பார்த்தால்—எப்போதும் மந்திரம் பலிப்பதில்லை. மறுபடியும் தலை முழுகிவிட்டு மந்திரிக்க வேண்டும். ஆகவே, பறையன் இடம் தீட்டு இல்லையென்று நான் எவ்வாறு ஒப்புக் கொள்ள முடியும்!"

தபால் இன்ஸ்பெக்டர் பெத்த பெருமாள் பிள்ளைக்கு என்ன வந்து விட்டது! ஏன் இப்படி இடி இடி என்று சிரிக்கிறார்! என்னுடைய தோல்வியைக் கண்டு ஆனந்தமா! அல்லது திடீரென்று பைத்தியம் பிடித்து விட்டதா!

இவை ஒன்றுமில்லையென்று அடுத்த நிமிஷத்தில் தெரிய வந்தது. உண்மைக் காரணத்தை அவர் வெளியிட்டார். இடி விழுந்ததுபோல் நான் திகைத்துப் போய் விட்டேன்.

"நாராயணய்யர்! தாங்கள் பெரிதும் ஏமாந்து போனீர்கள். மன்னிக்க வேண்டும்; நான் ஒரு பறையன்!" என்றார்.

நாங்கள் இருவரும் வாய் திறக்கவில்லை.

"நான் பறையன் என்று சொல்லிக்கொண்டு வெகு நாளாயிற்று. ஒருவருக்குமே தெரியாது. நான் பிறந்தது சிங்கப்பூரில். இளமையிலே என் பெற்றோர் இறந்து விட்டனர். அதிர்ஷ்டவசமாகக் கொஞ்சம் பொருள் சேகரித்து வைத்திருந்தனர். அங்கேயே கொஞ்சம் கல்வியும் அளித்திருந்தனர். அவர்கள் காலஞ்சென்ற பிறகு, இந்த நாட்டுக்கு வந்து கலாசாலையில் படித்துத் தேறி உத்தியோகமும் பெற்றேன். பின்னர் ஒருமுறை சிங்கப்பூருக்குச் சென்று கல்யாணமும் செய்து கொண்டு வந்தேன். வேறு இந் நாட்டில் எனக்கு உற்றார் உறவினர் இல்லை. இதுவரை பறையன் என்று நான் யாரிடமும் தெரிவித்தது கிடையாது. தெரிவிக்கச் சந்தர்ப்பமுமேற்படவில்லை" என்று இன்ஸ்பெக்டர் சவிஸ்தாரமாகக் கூறினார்.

போஸ்டு மாஸ்டர் சிறிது நேரம் திக்பிரமை கொண்டவர் போல் இருந்தார். பின்னர், "நல்லது. மிகவும் சந்தோஷம். ஆகவே, தீண்டாதவரிடம் தீட்டு இல்லை என்பது நிரூபணமாகி விட்டது. என்னுடைய குரு கூறியதை நான் தப்பாக அர்த்தம் செய்து கொண்டிருக்க வேண்டும். சரிதான், நினைவு வருகிறது. மாதவிடாயாகும் பெண்களின் தீட்டைப் பற்றியே அவர் முக்கியமாய் எச்சரிக்கை செய்தார். ஆனால், தீண்டாத வகுப்பினர் இந்தத் தீட்டு அநுசரிப்பதில்லையாதலால், அவர்களுடைய நெருக்கமுங் கூடாதென்று சொன்னதாக ஞாபகம். தாங்கள் நீண்ட காலமாகத் தூய வாழ்க்கை நடத்தி வருவதால் தாங்கள் அருகில் இருந்தும் மந்திரம் கெடவில்லை. எங்ஙனமாயினும், பிறப்பினால் தீட்டில்லை என்பது எனக்கு நிச்சயமாகி விட்டது. என் கண்கள் திறந்தன" என்று தமக்குத் தாமே சொல்லிக் கொள்பவர் போல் உரைத்தார்.

அப்போது இன்ஸ்பெக்டர் சொல்வார்:— "என் கண்களும் இன்றுதான் திறந்தன. இதுவரையில் என்னுடைய பிறப்பில் ஏதோ தாழ்வு இருப்பதாகவே எண்ணியிருந்தேன். நான் பறையன் என்று சொல்லிக் கொள்ள வெட்கப்பட்டேன். ஆனால் இறைவன் எல்லா மனிதர்களையும் ஒருதரமாகவே படைத்துள்ளார் என்பதை இப்போது அறிந்து கொண்டேன். இனிமேல் என்னுடைய பிறப்பை மறைக்க அவசியமேயில்லை."

"பறையருக்கும் தீயருக்கும் புலையருக்கும் விடுதலை" என்று நான் பாடினேன்.

# சந்துருவின் மாமனார்

கே. சரோஜா

சற்றும் எதிர்பாராத விதமாக, "வா, சந்துரு! எனக்குத் தெரிந்த ஒரு செட்டியார் இருக்கிறார். அவரிடம் இந்தச் சங்கிலியைக் கொடுத்துப் பணம் வாங்கித் தருகிறேன்" என்று கையில் சங்கிலியுடன் புறப்பட்டு விட்டான் சந்தான கிருஷ்ணன்.

சந்துரு தேள் கொட்டிய திருடனாகி விட்டான். அவன் நினைத்து வந்ததற்கு முற்றிலும் மாறாக எல்லாம் நடக்கத் தொடங்கி விடவே, சந்துருவின் தவிப்பு அதிகமாகி விட்டது. சந்தான கிருஷ்ணன் சங்கிலியை எவரிடமாவது காட்டி விட்டானென்றால் சந்துருவின் குட்டு வெளிப்பட்டு விடும். சங்கிலி தன் சுயரூபத்தைக் காட்டிச் சந்துருவின் மானத்தை வாங்கிவிடும். சந்துருவுக்கு மட்டுமா கேவலம்! சந்தான கிருஷ்ணனது கௌரவம் கூடக் காற்றில் பறந்து விடுமே! இதை எண்ணிச் சந்துரு, "வேண்டாம், சந்தானம்! உன்னிடமிருக்குமாக்கும் என்று வந்தேன்! மூன்றாம் பேருக்குக் கூடத் தெரியக் கூடாது!" என்றான்.

"என்னிடம் செப்பால் அடித்த காசுகூடக் கிடையாது. நாளைக் காலையில் ஏஜண்டு கணக்குகளைப் பார்க்கும் பொழுது நீ அகப்பட்டுக் கொண்டு விடுவாய். அந்த இரக்கமில்லாத ஏஜண்டு போலீசைக் கூப்பிடக் கூடத் தயங்கமாட்டான்!" என்றான் சந்தான கிருஷ்ணன்.

சந்துரு பதில் சொல்லாமல் நின்று கொண்டிருந்தான். நாளைக் காலைக்குள் அவன் வேலை பார்க்கும் காமாட்சி பாங்கு இரும்புப் பெட்டியில் அவன் இருநூறு ரூபாய் சேர்த்தாக வேண்டும். அந்தப் பாங்கியின் காஷியரான அவன் இருநூறு ரூபாயைக் கைத் தவறுதலாக எப்படியோ விட்டு விட்டான். கணக்குகளைத் தணிக்கை செய்ய ஏஜண்டு திடீர் என்று வந்தால்...! அவ்வளவுதான்!

"சந்துரு, நீ இங்கேயே இரு! நான் அரை மணி நேரத்தில் வருகிறேன்!" என்று கூறி விட்டுச் சங்கிலியைப் பையில் போட்டுக் கொண்டு சந்தான கிருஷ்ணன் ஓடுகிற பஸ்ஸில் தாவி ஏறினான்.

சந்தான கிருஷ்ணன் எங்கே போகிறான், என்ன செய்யப் போகிறான் என்பது தெரியாமல் சந்துருவின் மனம் குழம்பியது. யாரிடமாவது சங்கிலியை அடகு வைத்துப் பணம் வாங்கிக் கொண்டு வரலாமென்றுதான் சந்தான கிருஷ்ணன் போய் விட்டான். அது நல்ல கனமான சங்கிலி என்பதனால் கட்டாயம் பணம் கிடைக்குமென்ற நம்பிக்கையில்தான் அவன் போயிருக்க வேண்டும்.

ஆனால் சந்துருவின் மனம் படபட வென்று அடித்துக் கொண்டது. சந்துரு தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

முதல் நாள் பாங்கியிலிருந்து வரும்போது சந்துரு தன் உணர்வில்லாமல் வீடு வந்து சேர்ந்தான். பணம் காணாமல் போனது தெரிந்ததிலிருந்து அவனுக்கு ஒன்றுமே ஓட வில்லை. மறு நாள் ஒரே ஒரு நாள்தான் இடையிலிருந்தது. அந்த நாளுக்குள் சந்துரு செய்வதைச் செய்துவிட வேண்டும். அவனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை; தவித்தான்.



அவன் மனைவி சங்கரி அவன் ஏதோ யோசனையில் இருக்கிறான் என்று சிறிது நேரம் பேசாமலிருந்தாள். ஆனால் நேரம் ஆக ஆக அவன் கைகளைப் பிசைந்து கொண்டு அவஸ்தைப் படுவதைக் கண்ட பொழுது அவளால் சும்மா இருக்க முடியவில்லை.

"உடம்பு சரியில்லையா!" என்று அவன் நெற்றியில் கை வைத்துக் கேட்டாள்.

"ஒன்றுமில்லை!" என்று சொன்னான் அவன்.

"பிறகு என்ன! சாப்பிட வாருங்கள்!" என்று அழைத்தாள் சங்கரி.

சாப்பாடு பிடிக்கவில்லை சந்துருவுக்கு. கணத்துக்குக் கணம் நெஞ்சில் துயரச் சுமை அதிகமாகிக் கொண்டிருந்தது. நாளை மறுநாள் இந்நேரம் அவன் போலீஸ் லாக்கப்பில் அல்லவா இருக்க வேண்டியிருக்கும்! நினைத்துப் பார்க்கவே மெய் கூசிற்று. சங்கரி அப்பொழுது எப்படி அலறித் துடிப்பாள்!

சந்துரு சங்கரியை ஏறிட்டுப் பார்த்தான். சீக்கிரத்தில் தாய்மைப் பேறு அடையப் போகும் சங்கரி

யின் வெண்மையான முகம் அவன் கண்களுக்குக் கலங்கித் தெரிந்தன.

இரவில் சந்துரு தூங்கவில்லை. இதயம் விழித்துக் கொண்டிருக்கும் பொழுது இமைகள் எப்படி மூடிக் கொள்ளும் ! கடைசியில் அவன் ஒரு நிர்மானத்துக்கு வந்தான். அப்படிச் செய்யவே அவன் மனம் கூசிற்று. 'சங்கரியின் கழுத்தில் கிடக்கும் சங்கிலியை நானே சந்தான கிருஷ்ணனிடம் கொடுத்து இருநூறு ரூபாய் கைமாற்றாக வாங்கிக் கொள்ள வேண்டும். அடுத்த மாதம் போனஸ் கிடைக்கும். பணத்தைக் கொடுத்துச் சங்கிலியை மீட்டுக்கொண்டு விடுவது' என்று எண்ணினான். சங்கிலியின் சுயரூபம் சந்தானகிருஷ்ணனுக்குத் தெரிந்து விட்டால் என்ன செய்வது என்ற நினைவும், அதைத் தொடர்ந்தாற் போலவே பிடித்துக் கொண்டது. அவன் வேலையில் சேரும்பொழுது சந்தானகிருஷ்ணன் கண்ணை மூடிக் கொண்டு ஐந்நூறு ரூபாய் கொடுத்தான். அதனால் ஒருவரிடமும் சொல்ல வேண்டாம், காண்பிக்கவும் வேண்டாம் என்று அவனிடம் கூறிக் காதும் காதும் வைத்தாற்போலக் காரியத்தை முடித்து விடலாம் என்று அவன் எண்ணினான்.

காலையில் எழுந்ததும் குளித்துக் காப்பி சாப்பிட்டவன் "சங்கரி உன் சங்கிலியைக் கொஞ்சம் கொடு " என்றான்.

"இதோ !" என்று தன் கழுத்திலிருந்த சங்கிலியைச் சங்கரி எடுத்துக் கொடுத்தாள்.

சந்துருவினால் அவளிடம் உண்மையைக் கூறாமல் இருக்க முடியவில்லை.

"அது சரி, இதை விற்றால் எட்டு ரூபாய் கூடக் கிடைக்காதே " என்ற சந்தேகத்தை எழுப்பினாள் சங்கரி.

"தெரியும், சங்கரி ! இதைத் தங்கச் சங்கிலி என்று கூறிச் சந்தானகிருஷ்ணனிடம் இருநூறு ரூபாய் வாங்கிக் கொள்வோம். அடுத்த மாதம் போனஸ் பணம் வந்ததும் கொடுத்து விடுவோம் !" என்றான் சந்துரு.

சங்கரி சங்கிலியைக் கழற்றிக் கணவன் கையில் கொடுத்தாள். சந்துரு சங்கிலியைப் பையில் போட்டுக் கொண்டு சந்தான கிருஷ்ணனின் வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

"சந்துரு ! நீ அதிர்ஷ்டக்காரன்தானடா ! செட்டியாரை வீட்டிலேயே போய்ப் பார்த்தேன் ! சங்கிலியை எடை போட்டுப் பார்த்தார் ! மனுஷனுக்குச் சந்தேகம். சிரித்துக் கொண்டே உரைத்துக் கூடப் பார்த்து விட்டார், போ ! நாலரைப் பவுனிருக்கது. ஆனால் நான் இருநூறு ரூபாய் தான் வாங்கிக் கொண்டு வந்தேன் " என்று கூறி இருபது பத்து ரூபாய் நோட்டுகளைச் சந்துருவின் கையில் திணித்தான் சந்தானகிருஷ்ணன்.

"இருநூறு ரூபாயா ! அந்தச் சங்கிலிக்கா!" என்று கேட்டான் சந்துரு வியப்புடன்.

"ஏது, உனக்கே உன் சங்கிலியின்மீது நம்பிக்கையில்லை போல் இருக்கிறதே! சுத்தத் தங்கம் அப்பா, சுத்தத் தங்கம் !" என்றான் சந்தான கிருஷ்ணன்.

அதற்கு மேலும் அங்கிருந்தால் வியப்பினால் தான் ஏதாவது உளறினாலும் உளறி விடலாம் என்று தோன்றியது சந்துருவுக்கு. பணத்தைப் பத்திரமாகப் பையில் வைத்துக்கொண்டு, "சந்தானம்! சமயத்தில் உதவிய உன்னை நான் ஒரு நாளும் மறக்க மாட்டேன் !" என்று நன்றி கூறிவிட்டுப் புறப்பட்டு விட்டான். ஆனால் அவன் எண்ணமெல்லாம் சங்கிலியின் மீதே யிருந்தது. அது எப்படித் தங்கச் சங்கிலியாக மாறி நாலரைப் பவுனாயிற்று ! அதை அவன் சைனா பஜாரில் ஒன்பது ரூபாய்க்கல்லவா வாங்கினான் ! செட்டியார் ஏமாந்து விட்டாரா ! ஒரு நாளும் இராது. அப்படியானால்......

* * *

எல்லாத் தாய்மார்களும் ஆசைப்படுவது போலவேதான் சந்துருவைப் பத்து மாதம் சுமந்த தாயாரும் ஆசைப்பட்டாள்.

அவள் ஆசையை நிறைவேற்றும் முறையில் அவன் சங்கரியின் கரங்களை பிடித்தான். அவள் அவனுடைய மாமாவின் பெண்தான். மாமா பத்மநாப ஐயர் மிகவும் ஏழை. கோவில் அர்ச்சகர். அவரிடம் விபூதியை விட அதிகமாயிருந்தது, வறுமைதான் ! அவருக்குக் கொஞ்சம் நிலமுமிருந்தது. அது ஒரு மானம் பார்த்த பூமிதான். இருந்தாலும் தம் மகள் சங்கரியின் கல்யாணத்தைச் சிறப்பாகவே நடத்தினார். அதன் பயனாக உள்ளூர் செட்டியாரிடம் எண்ணூறு ரூபாய் வரை அவர் கடன் படும் படியாகி விட்டது.

சங்கரியைக் கைப்பிடித்த முகூர்த்தத்திலேயே சந்துருவுக்கு வேலை கிடைத்தது. நாற்





பது ரூபாய்தான் சம்பளம். என்றாலும் மனைவியுடன் மண வாழ்க்கையை ஆரம்பித்தான்.

பத்மநாப ஐயருக்கு அதிர்ஷ்டம் அடித்தது என்றே சொல்ல வேண்டும். சாபமிடப்பட்ட பூமியாகக் கிடந்த நிலத்தில் மழை கொட்டு கொட்டென்று கொட்டியது. பக்கத்திலிருந்த 'வீராணன் ஏரி' நிரம்பி வழிந்தது. நிலம் அந்தத் தடவை நல்ல விளைச்சலைக் கொடுத்தது. கடனைத் தீர்த்து விடலாம் என்ற நம்பிக்கையும் அவருக்கு உண்டாயிற்று.

இதே சமயத்தில்தான் சென்னையிலிருந்து சந்துருவை உடனே வரும்படி காகிதம் வந்தது. அவன் நண்பன் சந்தானகிருஷ்ணன், சென்னையில் காமாட்சி பாங்கியில் ஒரு காஷியர் வேலை இருப்பதாகவும் ஐந்நூறு ரூபாய் 'டிபாசிட்' கட்டினால் கிடைத்து விடுமென்றும், உடனே புறப்பட்டு வரும்படியும் எழுதியிருந்தான். சந்துரு கடிதத்துடன் மாமாவைப் பார்த்தான். பத்மநாப ஐயர் அப்பொழுதுதான் நெல்லை விற்றுக் கடனைத் தீர்த்திருந்தார். உடனே பணம் புரட்டுவது சிரம சாத்தியமான காரியமாயிருந்தது.

அவர் தனக்கு உதவத் தயாராயில்லை என்பதாகத் தப்பர்த்தம் செய்து கொண்டு சந்துரு அவரிடம் சொல்லிக் கொள்ளாமல் இரவுக்கிரவே சென்னைக்கு ரயிலேறி விட்டான். பணமில்லாமல் வந்த அவனைச் சந்தானகிருஷ்ணனே தன் சொந்தப் பணத்திலிருந்து ஐந்நூறு ரூபாய் கொடுத்து 'காமாட்சி பாங்கில்' காஷியராக அமர்த்தினான்.

இரண்டு மாதமானதும் சந்துரு சங்கரியைத் தன்னிடம் அழைத்துக் கொண்டான். மாம்பலத்தில் தாமோதர ரெட்டித் தெருவில் ஒரு சிறிய 'போர்ஷ'னில் அவர்களது தாம்பத்திய வாழ்க்கை ஆரம்பமாயிற்று.

ஒரு முறை மாப்பிள்ளையையும் பெண்ணையும் பார்க்க ஆசையுடன் சென்னைக்கு வந்தார் பத்மநாப ஐயர். யாருக்கு வந்த விருந்தாளியோ என்ற முறையில் நடந்து கொண்டான் சந்துரு. ஊருக்குப் புறப்படும் பொழுது சங்கரியைத் தம்முடன் பத்து நாளைக்கு அனுப்பும்படி சந்துருவிடம் கேட்டார். 'முடியாது' என்று கண்டிப்பாகக் கூறி விட்டு பாங்கிக்குச் சென்று விட்டான் சந்துரு.

பாங்கியில் அவனுக்குவேலை ஓடவில்லை. தான் ஏதோ தவறு செய்து விட்டதாகத் தோன்றியது. 'மாமா தனக்கு உதவி செய்யவில்லை என்பதற்காகஅவர்மீது தனக்குக் கோபமிருக்கலாம். ஆனால் சங்கரி என்ன செய்தாள்! ஆயிரமானாலும் அவளுக்கு அவர் அப்பாவல்லவா! பிறந்தகம் போக வேண்டுமென்ற ஆசை மகளுக்கு இராதா!' என்று பலவாறாகச் சிந்தித்தான் சந்துரு. கடைசியில் சங்கரியை ஊருக்கு அனுப்புவதென்று தீர்மானித்தான். அவளை வெறும் கழுத்துடன் அனுப்ப மனம் இல்லாத அவன் அன்று மாலை வீடு திரும்பும்பொழுது பார்ப்பதற்குப் பவுனைக் காட்டிலும் பிரமாதமாகத் தூக்கியடிக்கும் 'ரோல்டு கோல்டு' சங்கிலி ஒன்றை வாங்கிக் கொண்டான்.

சங்கிலி விஷயத்தைச் சங்கரியிடம் கூறி, "சங்கரி! நீ இப்பொழுது எப்படிப் போகிறாயோ, அது போலவே திரும்பி வர வேண்டும்! உன் அப்பாவிடமிருந்து ஒரு முழத் துணி கூட வாங்கி வரக்கூடாது. தெரிந்ததா! அடுத்த வெள்ளிக்கிழமை நீ இங்கே இருக்க வேண்டும். தெரிந்ததா!" என்று கூறி அவளை ஊருக்கு அனுப்பி வைத்தான்.

கிராமத்தில் எல்லோருமே சங்கரியின் கழுத்தில் கிடக்கும் சங்கிலியைப் பார்த்து ஆச்சரியப் பட்டார்கள். ஒரு வருஷ வாழ்க்கையிலேயே தன் பிள்ளை மனைவிக்குச் சங்கிலி செய்து போட்டிருக்கிறான் என்பதைக் காணச் சந்துருவின் தாயாருக்குக் கூடப் பரம திருப்தி.

சொன்னபடியே சங்கரி எட்டே எட்டு நாள் பிறந்தகம் ஆடி விட்டுத் திரும்பி வந்தாள். அவள் திரும்பி வந்த இரண்டொரு நாளைக்கெல்லாம்தான் அவன் பாங்கிப் பணத்தைத் தவற விட்டிருந்தான்.

* * *

சிவ விஷ்ணு ஆலயத்தின் முன்பு பஸ் நின்றதும் பரபரவென்று இறங்கினான் சந்துரு. சங்கரியிடம் சங்கிலி விஷயத்தைக் கூறிச் சமாதானம் செய்து விட்டுப் பிறகு பாங்கிக்குப் போவதற்காக அவன் ஓட்டமும் நடையுமாக வீட்டுக்கு வந்தான். உள்ளே மாமா பத்மநாப ஐயரின் குரல் கேட்டது.

"வழக்கு விஷயமாகத் திடீரென்று இங்கே வர வேண்டியிருந்தது! இவ்வளவு தூரம் வந்த பிறகு உன்னைப் பாராமல் போக மனம் கேட்கவில்லை. சந்துரு சௌக்கியமா! அவன் எங்கேயம்மா!" என்று கேட்டார் பத்மநாப ஐயர்.

தகப்பனாரிடம் விக்கியவாறே நடந்த விஷயத்தைக் கூறினாள் சங்கரி.

பத்மநாப ஐயர் தயங்கிக் கொண்டே, "நான் கொடுத்தால் அவன் வாங்கிக் கொள்வானா, அம்மா!" என்றார் பத்மநாப ஐயர்.

சங்கரி என்ன பதில் சொல்லுவாள்! சந்துருவின் பிடிவாதம்தான் அவளுக்குத் தெரியுமே!

"அவனுக்குப் பணம் கிடைத்து விடுமா, அம்மா!" என்று கவலையுடன் மறுபடியும் கேட்டார் பத்மநாப ஐயர்.

"ஊருக்கு வந்தபொழுது போட்டுக் கொண்டிருந்தேனே, ஒரு சங்கிலி அதைத்தான் வாங்கிப் போயிருக்கிறார்!"

"எதற்கு! விற்கவா!"

"ஆமாம்."

"அப்படியானால் நீ கவலைப்படாதேயம்மா! சந்துருவுக்கு ஒரு கஷ்டமும் வராது. இந்நேரம் அவனுக்குப் பணம் கிடைத்திருக்கும்."

"அது பித்தளைச் சங்கிலியாயிற்றே!"

"நீ ஊருக்குப் போட்டுக் கொண்டு வந்த பொழுது அது ஒரு பித்தளைச் சங்கிலி, ஆனால் இப்பொழுது அது தங்க சங்கிலி. நீ பித்தளைச் சங்கிலி போட்டுக் கொண்டிருப்பதைப் பார்த்து என் மனம் ஒரே துடியாகத் துடித்தது. உடனே அது மாதிரி ஒரு தங்கச் சங்கிலி பண்ணினேன். நீ எண்ணெய் தேய்த்துக் குளித்த அன்று அந்தச் சங்கிலியை மாற்றித் தங்கச் சங்கிலியை வைத்து விட்டேன், அம்மா!" என்று பெற்ற பாசத்தால் அன்பு பெருகப் பேசினார் பத்மநாப ஐயர்.

வெளியே நின்று இதைக் கேட்டுக் கொண்டிருந்த சந்துருவின் கல் மனம் கரைந்து விட்டது. "மாமா" என்று கதறிக் கொண்டே ஓடி வந்து அவர் காலைக் கட்டிக் கொண்டான்!

# "உங்கள் பற்களை பாதுகாருங்கள்!"

## விஸ்டம் பல் வைத்தியர் எப்படி என்று கூறுகிறார்



'விஸ்டம்' ப்ரஷால் துலக்குவது பற்களை எவ்விதம் பாதுகாக்கிறது என்பதை அறிய உங்களுக்கு பற்களின் அமைப்புப் பற்றி தெரிய வேண்டும். ஒரு பல்லின் உட்புறத்தை கவனிப்போம்....




பல்லின்மீது எனாமல் மூடியிருக்கிறது. இதனடியில் இருக்கும் குழம்பில் (தந்தம்) பல சிறு குழல்கள் உண்டு. இவை பல்லின் உணர்ச்சி மையத்துடன் சேருகின்றன.




தேங்கும் சர்க்கரை மற்றும் உணவுத் துண்டுகளால் எனாமல் தாக்கப்பட்டு சொத்தை ஏற்படுகிறது. விஸ்டம் ப்ரஷால் நன்கு துலக்குவதுதான் சிறந்த பாதுகாப்பு.



சொத்தை ஏற்படுவதைத் தடுக்காவிட்டால் அது சிறு குழல்களுக்குள் பாய்ந்து உணர்ச்சி மையத்தை அழித்து பல்லை பாழாக்குகிறது. இதற்காகவே பற்களைக் காலாகாலத்தில் பல் வைத்தியரிடம் காட்டுவது உசிதம்.

உங்கள் பற்களை ஆரோக்கியமாய் வையுங்கள். இரவிலும் காலையிலும் விஸ்டம் ப்ரஷால் துலக்குங்கள்! துலக்க சுலபமாயிருக்க அதன் சிறிய தலை மற்றும் வளைந்த கைப்பிடியமைப்பால் வாயில் மூலை முடுக்குகளிலும் புகுத்தலாம்; அதன் விறுப்பான நைலான் குச்சங்கள் பல் இடுக்குகளில் நுழையும். பொருத்தமான வடிவம் கொண்ட விஸ்டம் டூத் ப்ரஷை உபயோகியுங்கள்!

**காலாகாலத்தில் உங்கள் பல் வைத்தியரை காணுங்கள்.**

# *Wisdom* REGD.



## நீடித்து உழைக்கும் டூத் ப்ரஷ்

70A

# ரவிசந்திரிகா

## 5. "ஐயோ, கல்யாணி!"

அந்தக் கடிதத்தைப் பிரித்துப் பார்ப்பதற்குள், கல்யாணியின் மனத்தில் ஆயிரம் எண்ணங்கள் புகைந்தன.

அவ்வளவு பதற்றத்தோடும் கோபத்தோடும் போனாரே, அவர்தான் ஏதாவது விபரீதமாக எழுதியிருக்கிறாரோ?...ஐயோ, அப்படியிருக்குமானால் இனி என்ன ஆவது?

இல்லை; அவருடைய கோபம் அந்தப் படபடப்போடு சரி. கொஞ்ச நேரத்தில் எல்லாவற்றையும் மறந்து விடுவார். அப்படியானால்?...ஒரு வேளை அப்பாதான் இப்படி ஒரு கடிதம் எழுதியிருப்பாரோ? கடிதத்தை அனுப்பி விட்டு லால்குடிக்குப் போயிருப்பாரோ? ஆனால் அப்பா இப்படியெல்லாம் கடிதங்கள் எழுதி அனுப்புகிறவர் இல்லையே!...

நிச்சயம் கணவருடைய கடிதமாகத்தான் இருக்க வேண்டும். 'தெய்வமே, அப்பாவின் கடிதமாகவாவது இருந்து விட்டுப் போகட்டும், பரவாயில்லை. அவருடைய கடிதமாக மட்டும் இருக்கக்கூடாது!'

இப்படியெல்லாம் பிரார்த்தனைகள் செய்துகொண்டே கல்யாணி கடிதத்தைப் பிரித்தாள். என்ன ஆச்சரியம்! இது அவள் எதிர்பார்த்த இருவருமே இல்லை. அவளுடைய தம்பி நாகரத்தினத்தின் எழுத்து அது!

அன்புள்ள அக்காவுக்கு,

அவசரம் அவசரமாகப் புறவாசலோடு ஓடி வந்தேன். ஆனால் ஒரு மணி நேரத்தில் கோவில் வாசலில் எதிர்பாராத விதமாக அப்பாவைப் பார்த்தேன். எல்லா நடப்புகளும் சொன்னார்கள். அதன் பேரில் நான் அவர்களுக்குச் சகல விஷயங்களையும் விவரமாக எடுத்துச் சொன்னேன். அப்பா குணந்தான் உனக்குத் தெரியுமே. 'எல்லாம் கடவுள் செயல்' என்றார்கள். ஆனாலும் திரும்பவும் உன்னை வந்து பார்ப்ப



தற்கு அவர்களுடைய மனம் இடம் கொடுக்கவில்லை. மாப்பிள்ளையைப் பார்ப்பதற்கோ பயம். இரவு வண்டிக்கே லால்குடிக்குப் புறப்பட்டுப் போய் விட்டார்கள்.

எதற்கும் மனசைத் தளர விடாதே. சந்திரிகா விஷயமாக ஒரு யோசனை செய்திருக்கிறேன். எல்லாம் நேரில் வந்து சொல்லுவேன். கவலைப் படாதே.

நாகரத்தினம்

பின்குறிப்பு : 'எல்லாம் கடவுள் செயல்' என்று அப்பா சொல்லுவது எனக்குப் பிடிக்கவில்லை. எல்லாம்] அப்பாவின் செயல்தான். புள்ளி மானை வளர்த்துப் புலிக்குக் கொண்டு வந்து கொடுத்து விட்டார்கள். கடவுள் என்ன ]செய்வாராம் ?




கல்யாணிக்குத் தலை சுற்றியது. அதிலும் அந்தக் கடைசி வாக்கியத்தைப் படித்ததும் திகிலே ஏற்பட்டது. கணவனை அம் மாதிரி ஒரு புலி யென்று தம்பி சொன்னது உண்மை என்று தோன்றினாலுங்கூட, அதை அவன் சொல்லிக்கேட்பது எப்படியோ இருந்தது. எல்லாவற்றிற்கும் மேலாகக் கனவிலே வந்த மானும் புலியும் கடிதத்திலுங் கூடத் தொடர்வதைக் கண்டு உள்ளம் துடித்தது.

இரவு எப்படி இருட்டாக இருந்ததோ அப்படியிருந்தது கல்யாணியின் மனமும். இந்த இருள்

மயமான உலகத்திலே, தான் நிர்க்கதியாக நிற்பது போல் ஒரு தவிப்பு உண்டாயிற்று. அப்படியே கட்டிலில் உட்கார்ந்து கண்ணீர் வடித்தாள் கல்யாணி.

இரவு முழுதும் கல்யாணி இமையைப் பொருத்தவேயில்லை. எப்பொழுது விடியும், வெளியே போனவரைப் பற்றிய தகவல் எப்பொழுது கிடைக்கும் என்றே ஏங்கிக் கொண்டிருந்தாள்.

ஐந்து மணிக்கெல்லாம் பூபாள ராகம் மாடியிலிருந்து கேட்டது.

பொழுது விடிந்தது
பொற்கோழி கூவிற்று
பொய்கையில் தாமரை
பூத்து மலர்ந்தது!

என்று பாடிக் கொண்டிருந்தான் ரவி! அப்பொழுதுதான் கல்யாணிக்குப் போன உயிர் மீண்டது. கணவன் வீடு திரும்பி விட்டான் என்று தெரிந்து கொண்டதில் ஒரு விவரிக்க முடியாத ஆறுதல்.

'திட்டட்டும், வைபட்டும். கழுத்தைப் பிடித்து வேண்டுமானாலும் நெரிக்கட்டும், தெய்வமே! வீட்டை விட்டு மட்டும் அவர் ஓடிவிடக் கூடாது' என்று பிரார்த்தனை செய்துகொண்டே கண்களைத் துடைத்துக் கொண்டாள் கல்யாணி.

ஒரு வாரம் இப்படிக் கழிந்தது. லால்குடியிலிருந்து அப்பா கடிதம் எழுதியிருந்தார்கள், கல்யாணத்துக்கு இருவரும் புறப்பட்டு வரவேண்டும் என்று! மற்றப்படி, கச்சேரியைப் பற்றி ஒரு வார்த்தை கூடக் கடிதத்தில் இல்லை!

"ஒரு வாரமாகச் சரியாகவே பேச மாட்டேன் என்கிறீர்களே? கல்யாணத்துக்கு இன்னும் இரண்டு நாள்தானே இருக்கிறது. புறப்பட வேண்டாமா?" என்று கேட்டாள் கல்யாணி. ரவீந்திரன் பதிலே பேசாமல் மேல் உத்தரத்தையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"உங்களைத்தானே கேட்கிறேன்!" என்றாள் கல்யாணி. எத்தனை சண்டைக்கு மத்தியிலும், மனைவி என்ற மகத்தான உரிமை அந்தக் குரலில் தொனித்தது.

"கல்யாணத்துக்குத்தானே! கட்டாயம் போக வேண்டியதுதான். போய் விட்டு வா!" என்றான் ரவீந்திரன்.

"அப்படி யென்றால்? நீங்கள் வரவில்லையா?" என்று கேட்டாள் கல்யாணி.

"போய் விட்டுவா என்றுதான் சொல்லி விட்டேனே. அதற்குமேல் என்னை நச்சரிக்கக் கூடாது. தெரிந்ததா? இன்று சாயங்கிரமே லால்குடிக்கு உன்னை ரயிலேற்றுவது என்று தீர்மானித் திருக்கிறேன். நேற்றே உன்னுடைய அப்பாவுக்கும் எழுதிப் போட்டு விட்டேன். ஸ்டேஷனுக்கு வந்து கூட்டிக் கொண்டு போவார்கள்."

கல்யாணிக்குத் தன் கணவனுடைய பேச்சில் இருந்த பற்றற்ற 'தன்மை வேதனையைக் கொடுத்தது.

"ஏன் நீங்கள் இவ்வளவு தூரம் மாறிப் போய் விட்டீர்கள்? எத்தனை பேருக்குப் புத்தி சொல்லுவீர்கள். இப்பொழுது—"

"இப்பொழுது எத்தனையோ பேர் எனக்குப் புத்தி சொல்லுவதற்கு முளைத்து விட்டார்கள், இல்லையா? அதனால் நான் மற்றவர்களுக்குப் புத்தி சொல்வதை நிறுத்தி விட்டேன். சரிதானே?" என்று கேட்டான் ரவீந்திரன்.

"ஏன் வம்புப் பேச்செல்லாம் பேசுகிறீர்கள்? சீமையில் இல்லாத ஒரு சிங்காரி கிடைத்து விட்டாள் என்று தானே நீங்கள் இப்படி யெல்லாம்......"

"கல்யாணி! அதிகமாகப் பேச்சை வளர்த்துவிட்டு, பிறகு உன்னைக் கழுத்தை நெரிக்கும்படி என் முன்னால் வந்து நிற்காதே. தெரிந்ததா? நான் பழி பாவத்துக்குப் பயப்படுகிற பிறவி, தாயே!"

கல்யாணிக்கு ஆத்திரம் வந்தது. ஆனாலும் அடக்கிக் கொண்டு, சொல்ல வந்த வார்த்தைகளை அப்படியே தொண்டைக் குள்ளேயே விழுங்கிக் கொண்டாள்.

"ஏன் சொல்ல வந்ததை விழுங்குகிறாய்? பழி, பாவம் என்ற உணர்ச்சி யெல்லாம் உங்களுக்கு ஏது என்று கேட்க வந்தாய். அப்படித்தானே?"

இப்படிக் கேட்டுவிட்டு ரவீந்திரன் ஒரு விநாடி மௌனமாக இருந்தான். பிறகு உருக்கமான குரலில் பேச ஆரம்பித்தான்.

"கல்யாணி, வருஷக் கணக்காக ஒரே வீட்டிலேதான் நாம் இருவரும் வாழ்ந்து வருகிறோம். ஆனால் நம்முடைய மனங்களுக்கு மத்தியிலோ எத்தனையோ பெரிய சுவர்களை எழுப்பிக் கொண்டு விட்டாய் நீ. அது உன் குற்றமில்லை! என் குற்றமும் இல்லை. நம்மை ஒன்று சேர்த்ததே அந்த விதியின் குற்றம். இல்லை, இல்லை. அது கூடத் தவறு! விதி குற்றம் செய்யாது. பின் என்ன? கடலுக்குள்ளே முத்து கிடக்கிறது. அதனால் கடலுக்குப் பயனுண்டோ? காட்டுக்குள்ளே சந்தன மரம் நிற்கிறது. அதனால் காட்டுக்கு என்ன பிரயோஜனம்? காடு சந்தனம் பூசிக் கொள்ளுமா?......"

கல்யாணிக்குக் கண் கலங்க ஆரம்பித்தது. ரவீந்திரன் அங்கு நிற்கவில்லை. வேகமாக நடந்து வெளியே சென்று விட்டான். பிறகு மாலை நான்கு மணிக்குத்தான் வீடு திரும்பினான்!

ஆமாம். மாலை நான்கு மணிக்கெல்லாம் ரவீந்திரன் ஒரு மாட்டு வண்டியில் வந்து இறங்கினான். அவசரமாக உள்ளே வந்தான். 'விறுவிறு' என்று உள் கூடத்துக்குப் போய், "கல்யாணி, கல்யாணி,

புறப்படு! ரயிலுக்கு நேரம் ஆச்சு!" என்று மிகவும் அவசரப் படுத்தினான்.

'நம்மை ஊருக்கு அனுப்புவதில் தான் எத்தனை அவசரம்!' என்று நினைத்துக் கொண்டாள் கல்யாணி. கண்ணீர் தான் வந்தது. முந்தானையால் முகத்தைத் துடைத்துக் கொண்டே 'ட்ரங்கு'ப் பெட்டியை எடுத்து அதில் துணிமணிகளைத் திணித்தாள்—உள்ளத்தில் பொங்கி வெளிவந்த உணர்ச்சிகளை யெல்லாம் மனத்துக் குள்ளேயே அமுக்கித் திணிக்கிறவளைப் போல!

"சந்திரிகா, வீட்டைப் பார்த்துக் கொள். நான் ஸ்டேஷன் வரை போய் விட்டு வருகிறேன்!" என்று மாடி வாசலுக்குள்ளே தலையை வளைத்தவாறு சொன்னான் ரவீந்திரன். "வீட்டைப் பார்த்துக் கொள்ள வேண்டியவளைத் தானே அப்படிச் சொல்லுகிறார்!" என்று ஒரு விநாடி எண்ணிக் கொண்டாள் கல்யாணி. மனம் பற்றி எரிந்தது.

"நேரமாச்சு! ஏறு வண்டியிலே" என்று துரிதப்படுத்தினான் ரவீந்திரன்.

* * *

நாகஸ்வரம் "ரீம் ரீம் ரீம்" என்று முழங்கியது. 'அகப்பட்டுக் கொண்டான், அகப்பட்டுக் கொண்டான்' என்று சொல்லுவது போல தவுல் 'பட பட' என்று கொட்டியது. பெண்கள் குரவை இட்டார்கள். தாலிக் கயிற்றில் மூன்று முடி ஏறியது. கல்யாணியின் தங்கை கமலம், 'கிருகலக்ஷ்மி' ஆனாள்.

மணவறையைச் சுற்றி மொய்த்துக் கொண்டு நின்ற பெண்களின் கூட்டத்தில் கல்யாணியும் நின்றாள். கொட்டு மேளம் கொட்டும் போது, அவளுடைய மனம் பத்து ஆண்டுகளுக்கு முன்பு நடந்த சம்பவத்தை நோக்கி ஓடியது.

இதே லால்குடியில். இதே வீட்டில், இதே இடத்தில், இதே மாதிரிப் பெண்கள் சூழ்ந்து நின்ற போதுதான், கல்யாணிக்கும் ரவீந்திரனுக்கும் திருமணம் நடந்தேறியது. இதே உள்ளூர் நாகஸ்வரந்தான்! இதே கொட்டு மேளம் தான்! அப்பொழுது அவளுடைய இதயத்தில் அந்த 'ரீம் ரீம்' என்ற ஒலி எத்தனை விவரிக்க முடியாத உணர்ச்சிகளை யெல்லாம் கொடுத்தது! எத்தனை கனவுகள் அப்பொழுது அவளுடைய உள்ளத்தில் எழுந்தன! ரவீந்திரன் அவளுடைய கழுத்திலே தாலிக் கயிற்றைச் சுற்றி முடிபோட்ட போது, அவனுடைய விரல்களின் ஸ்பரிசத்தால் கல்யாணிக்கு உடம்பெல்லாம் புல்லரித்தது.

இப்பொழுது அந்த அனுபவங்கள் மீண்டும் கல்யாணிக்கு நினைவு வந்தன.

நாகஸ்வரத்தின் ஒலிக்குத்தான் எத்தனை சக்தி இருக்கிறது! இதயத்துக்குள் எங்கோ ஆழத்தில் புதைந்து போய்க் கிடக்கிற அனுபவங்களை யெல்லாம் அந்த ஒலி எத்தனை ஆற்றலோடு மீண்டும் மேலே எழுப்பிக் கொண்டுவந்து விடுகிறது!

இறந்த காலத்தையும் நிகழ் காலத்தையும் ஒன்றாக்கக் கூடிய மாய சக்தி. காலத்தை வெல்லக் கூடிய கணைக்கு. சங்கீதத்தைப் போல் வேறு எதற்கு உண்டு!

கல்யாணிக்கு இதயம் விம்மியது. பத்து வருஷங்களுக்கு முன்பு தான் கண்ட இன்பக் கனவுகள் எல்லாம் இப்பொழுது வீணாகப் போய் விட்டனவே! தங்கை கமலத்தின் வாழ்க்கையாவது இன்பமாக அமைய வேண்டும் என்று எண்ணிக் கொண்டாள் கல்யாணி.

இதற்குள் பந்தலில் தாம்பூலம் கொடுக்க ஆரம்பித்து விட்டார்கள். பெண்களுக்குப் பன்னீர் தெளிக்கும்படி சொல்லிக் கொண்டே, வெள்ளிப் பன்னீர்ச் செம்பைக் கொண்டு வந்து கல்யாணியின் கையிலே கொடுத்தாள் அவளுடைய தாயார். தாலிச் சரடு மகளுடைய கழுத்தில் பின்னியதிலே ஏற்பட்ட நிம்மதி தாயாரின் முகத்தில் பிரதி பலித்தது. அவள் சொன்னாள்: "கல்யாணி, ஒரு மட்டும் கமலத்துக்கு நல்ல இடமாகக் கிடைத்து விட்டது. ஒரே ஒரு குறை தான், உன் மாப்பிள்ளையும் வந்திருந்தால் எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும்! நமக்குத்தான் கொடுத்து வைக்க வில்லை!"

கல்யாணிக்குப் பன்னீர்ச் செம்பைக் கையில் வாங்கும்போதே கை பதறியது. "அம்மா! அங்கு வேறு யாரையாவது பன்னீர் தெளிக்கச் சொல்லு. எனக்குத் தலை வலிக்கிறது" என்று சொல்லிக் கொண்டே வீட்டுக்குள் நடந்து சென்றாள். தங்கையின் கல்யாணத்துக்காக அப்பா எடுத்துக் கொடுத்திருந்த கோடிப் புடவை உடம்பை "மொர மொர" என்று உறுத்திக் கொண்டிருந்தது. யாரும் இல்லாத மாடி அறைக்குள்ளே சென்று, புடவையை மாற்றிக்கொண்டு தரையிலே படுத்தாள். எங்கிருந்துதான் அப்படிக் கண்ணீர் 'மள மள' என்று வந்ததோ! பாவம்! பன்னீர் தெளிக்கவேண்டிய கையினால் தன்னுடைய கண்ணீரைத் தானே துடைத்துக் கொண்டாள் கல்யாணி.

மத்தியானம் வடையும் பாயசமுமாக 'ஷட் ரஸம்' பிரமாதமாகப் பரிமாறப் பட்டது! பெண்களின் பந்தியில் மணப் பெண்ணோடு தானும் கடமைக்காக உட்கார்ந்தாள் கல்யாணி. ஒரு கவளம்கூடத் தொண்டையில் இறங்க வில்லை. மனம் எல்லாம் திருச்சியிலே இருந்தது. போதாத குறைக்கு அவளைப் பார்த்தவர்கள் எல்லாம் 'மாப்பிள்ளை வரவில்லையாமே!'

என்று வேறு விசாரித்தார்கள். அவளைப் பாராதவர்களுங் கூடத் தேடிப் பிடித்து 'மெனக்கெட்டு' வந்து இதையே கேட்டார்கள்!

இரவு பட்டணப் பிரவேசமும் வாண வேடிக்கையும் ஒரே கோலாகலமாக நடந்தன. ஊர்வலம் முடிந்து பெண்ணும் மாப்பிள்ளையும் வீட்டுக்கு வந்து சேர இரவு ஒரு மணி ஆயிற்று. ஒரு நாள் கல்யாணம் ஆனதால், பட்டணப் பிரவேசம் முடிந்ததுமே, சீர்வரிசை வைக்கிற சடங்கும் ஆரம்பம் ஆயிற்று.

கல்யாணி அப்பாவை வெகு அவசரமாகக் கூப்பிட்டாள்.

"அப்பா! கல்யாணம் எல்லாம் சிறப்பாக முடிந்து விட்டது. இனி நான் ஊருக்குப் புறப்பட வேண்டியதுதான்."

"அதற்கு என்ன இந்த நேரத்தில் இப்படி அவசரம்?" என்று கேட்டார் கனகசுந்தரம்.

"விடிவதற்குள் நான் புறப்பட்டுவிட வேண்டும், அப்பா!" என்று குழந்தையைப் போல் பேசினாள் கல்யாணி.

"என்னம்மா! தலையை வலிக்கிறது என்றுசொன்னாயே, இரண்டுநாள் இருந்து உடம்பைப் பார்த்துக்கொண்டு போயேன், அம்மா!" என்றாள் கல்யாணியின் தாயார், அவசரமாக நடந்து வந்து கொண்டே.

"இல்லை. இங்கே இருந்தால் எனக்கு உடம்பு இன்னும் அதிகந்தான் ஆகும்!"

கனகசுந்தரம் மௌனமாக யோசனை செய்தார்.

"அப்பா! உங்களுக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. நான் எப்படியும் நாளைக் காலையில் திருச்சியிலே இருக்க வேண்டும். எனக்கு மனசு எப்படியோ இருக்கிறது!"

கனகசுந்தரம் நெற்றியைப் பிசைந்தார். மகளின் மனம் அவருக்குப் புரிந்தது. அதனாலேயே கவலை அதிகரித்தது.

"நாளை மத்தியானச் சாப்பாட்டுக்கு மேல் நீ புறப்பட்டு விடலாம், அம்மா எல்லாம் கடவுள் செயல்" என்றார் அவர்.

"அப்பா! இங்கே கேட்கிறவர்களுக்கெல்லாம் பதில் சொல்லி முடியவில்லை எனக்கு. விடிவதற்குள் நான் எப்படியும் புறப்பட்டு விட வேண்டும்!" என்று கண்டிப்போடு சொன்னாள் கல்யாணி.

"ஸ்டேஷனிலிருந்து நீ வீட்டுக்கு எப்படியம்மா தனியாகப் போவாய்?" என்று அங்கலாய்ப்போடு கேட்டார் கனகசுந்தரம்.

நாகரத்தினம் இதற்குள் அந்த சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டே அங்கு வந்து தோன்றினான்.

"அப்பா! ஏன் இதற்கு இத்தனை யோசனை செய்கிறீர்கள்? அப்புலிங்கத்தின் அப்பாவும் அம்மாவும் விடியற்காலை புறப்படுகிறார்கள். கல்யாணியையும் அவர்களோடு அனுப்பி விட்டால் போகிறது!"

"அப்புலிங்கமா? யாரைச் சொல்லுகிறாய்?" என்று கேட்டாள் தாயார்.

"அப்புலிங்கம் வரவில்லை. அவனுடைய அப்பாவும் அம்மாவும் வந்திருக்கிறார்கள். ஒரு சிவப்புக் கார் வெளியே நிற்கிறது பார். அது அவர்களுடைய கார்தான்—"

"ஓ! மூதூர் மிராசுதாரைச் சொல்லுகிறாயா!" என்றார் கனகசுந்தரம்.

"நம்முடைய கமலத்து மாப்பிள்ளைக்கு அவர்கள் நெருங்கிய உறவு, அம்மா. திருச்சியில் பெரிய பணக்காரர்கள். அவர்கள் பையன்தான் அப்புலிங்கம். என்னுடைய பழைய 'கிளாஸ்மேட்' ஆசாமி ஒரே சிவப்பழம். திருப்புகழ் தேவாரம் என்றால் உருகி விடுவான். பரம சாது. பாவம்!" என்று விமர்சனம் செய்து கொண்டே, "அப்பா! உங்களைப் பந்தலிலே தேடுகிறார்கள்!" என்றான் நாகரத்தினம்.

"கல்யாணி! நீயும் வாம்மா. மனசைத் தளர விடாதே. காலையில் உன்னை ஊருக்கு அனுப்பி வைக்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே மணப் பந்தலுக்கு நடந்தார் கனகசுந்தரம்.

சீர் வரிசைச் சடங்குகள் முடிந்தன. இரவுப் பொழுதும் கழிந்தது. கல்யாணி சம்பந்தப்பட்ட வரை அது இரவுப் பொழுதாகவே இல்லை. பகலாகவே கழிந்தது!

**கா**லை ஐந்து மணிக்கெல்லாம் குளித்து விட்டு, புறப்பட நின்றாள் கல்யாணி.

மூதூர் மிராசுதாரும் அவருடைய மனைவியும் புறப்பட்டார்கள். பெரிய தாம்பாளத்தில் அவர்களுக்கெல்லாம் வெற்றிலை பாக்குக் கொடுத்தார் கனகசுந்தரம். கல்யாணியின் தாயார் ஒரு தாம்பாளத்தில் மகளுக்கு வெற்றிலையும் மஞ்சளும் கொடுத்து, குங்குமச் சிமிழைத் திறந்து கல்யாணியின் நெற்றியிலே திலகமிட்டாள்.

"கல்யாணி! உன்னுடைய மனக் குறையெல்லாம் தீர்ந்து நீயும் அவரும் சிவனும் பார்வதியுமாக இருக்க வேண்டும், அம்மா. அந்தத் தாயுமானவர் கிருபையால் உன் வயிற்றில் ஒரு குழந்தையும் பிறந்து விட்டால், எல்லாம் சரியாகிவிடும், அம்மா!"- இப்படிச் சொல்லும்போது கல்யாணியின் தாயாருக்குக் குரல் கம்மிற்று.

மிராசுதார் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டு "ஹார்ன்" அடித்தார். "என்ன மாமா! இத்தனை வயதிலும் 'ஸெல்ப் ட்ரைவிங்'தான் போலிருக்கிறது!" என்று மிராசுதாரிடம் போய் ஒரு அசட்டு ஹாஸ்யத்தை அடித்தான் நாகரத்தினம்.

கல்யாணி அப்பாவையும் அம்மாவையும் நமஸ்காரம் பண்ணிக் கொண்டு காரின் பின் சீட்டில் ஏறி உட்கார்ந்து கொண்டாள். மிராசுதாரின் மனைவி, கல்யாணிக்

குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். கார் விர்ரென்று புறப்பட்டது.

மிராசுதாரின் மனைவி ஏற்கனவே கல்யாணியைப் பற்றி அங்கு வந்திருந்த பெண்கள் சொன்ன விவரங்களை அறிந்திருந்தாள். அது காரணமாக அளவற்ற அநுதாபம் ஏற்பட்டிருந்தது. முடிந்தால் தன் கணவரிடம் சொல்லி ரவீந்திரனுடைய வாழ்க்கையில் அமைதியை நிலைநாட்ட முயற்சிக்கலாம் என்று கூட மனத்துக்குள் எண்ணினாள். இப்பொழுது தனியாகப் பேசுவதற்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் ஏற்படவே, கல்யாணியிடம் அந்தரங்கமாக ரவீந்திரனைப் பற்றியும் சந்திரிகாவைப் பற்றியும் கேட்க ஆரம்பித்தான் அவன்.

மிராசுதார் முருகானந்தம் ரவீந்திரன் என்ற அபூர்வ வித்துவானைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறார். சந்திரிகாவின் நடனத்தைப் பற்றியும் அவளுடைய அரங்கேற்றத்தைப் பற்றியும் அவரிடமே பலர் சிலாகித்துப் பேசியிருக்கிறார்கள். ஆனால் அவர்களுடைய வாழ்க்கையில் இப்படி ஒரு போராட்டம் இருக்கக் கூடும் என்று அவர் எண்ணிப் பார்த்ததே இல்லை.

ரவீந்திரனை இரண்டொருமுறை முருகானந்தம் பார்த்திருக்கிறார். அவன் ஒரு விசித்திரமான மனிதன் என்று பட்டது. பொதுவாகக் கலைஞர்கள் எல்லாருக்குமே இப்படி ஏதாவது ஒரு விநோத சுபாவம் இருக்கும் என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டார். ஆனால் இப்பொழுது பின் ஸீட்டில் இருந்துவந்த சம்பாஷணைகள் காதில் விழ விழ அவருக்கு மனத்தைக் கலக்கியது. யோசிக்க ஆரம்பித்தார் :

கல்யாணியின் பேச்சைக் கவனித்தால் அவளும் நல்லவள் என்றுதான் படுகிறது. பழமையான தமிழ் நாட்டுப் பெண்மையின் பண்புகள் எல்லாம் அவளிடம் தெரிகின்றன. ஆனால் மனம் நொந்து போய்க் கிடப்பதால், எதையும் விபரீதமாக எடுத்துக் கொள்ளக் கூடியவள் என்று ஒரு சந்தேகம் உண்டாகிறது. ஆனாலும் நல்லவள் என்கிற அபிப்பிராயந்தான் ஸ்திரம் ஆகிறது. அதே சமயம் ரவீந்திரனும் நல்லவன்தான். சந்திரிகாதான் கெட்டவளோ? இல்லையென்றால் ஏன் நல்ல தம்பதிகளுக்குள் இத்தனை விபரீதச் சண்டைகள் எல்லாம் நடக்க வேண்டும்?

எதற்கும் சந்திரிகாவைப் பற்றி, மகன் அப்புலிங்கத்திடம் நன்றாக விசாரிக்க வேண்டும். அவன்தான் அநேக சங்கீத சபைகளில் இருக்கிறானே. நிச்சயம் இந்த நடனக்காரியைப் பற்றி அவனுக்கு நன்றாகத் தெரிந்திருக்கும். பாவம்! இத்தனை நல்லவர்களாக இருக்கிற குடும்பத்தில் இப்படிப் புயல் வீசும்படி விடக் கூடாது. இந்தச் சந்திரிகா உண்மையிலேயே சொக்குப் பொடி போட்டு ரவீந்திரனை மயக்கியிருந்தால், அதிலிருந்து அவன் தப்புவதற்கு ஒரு வழி பண்ண வேண்டியது நமது கடமை.

இப்படி எண்ணிக் கொண்டே 'ஸ்டியரிங் வீலில்' சாய்ந்தவாறு பலமாக யோசித்தார் முருகானந்தம். 'பெண்களைப் பற்றிச் சட்டென்று ஒருமுடிவுக்கு வருவது தவறு. எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ!' என்று ஒரு எண்ணம் எழுந்தது.

'எல்லாவற்றிற்கும் மகுடியை ஊதிப் பார்த்து விட்டால் போகிறது. எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்கிறது என்று தானாகத் தெரிந்து விடுகிறது!' என்று எண்ணியவராய், ஸ்டியரிங்கில் இருந்த 'ஹாரனை' ஒரு அழுத்து அழுத்தினார். வெகு பலமாக ஓசை யிட்டது அந்த மோட்டார்க் குழல்.

ஆனால், இதென்ன? திடீரென்று அந்த மாடு கலைகிறதே. பாரவண்டிதான். கிராமத்து மாடல்லவா? மோட்டார்க் குழலின் ஓசையிலே மருள்கிறது.

'பல பல' என்று விடிந்து வருகிற சமயம். இருளைக் கொஞ்சம் கொஞ்சமாக விழுங்கிக் கொண்டு வருகிறது வெளிச்சம். இன்னும் கொஞ்சம் இருள் மீதியிருக்கிறது. யோசனைப் பின்னலிலே சிக்கியிருந்த முருகானந்தம் பதறிப் போய், 'ஸ்டியரிங் வீலை' இடது பக்கமாக வளைத்தார். சாலையில் ஓங்கிப் பரந்து விசாலமாக நின்ற ஆலமரமா அது! மங்கிய வெளிச்சத்தில் இருளோடு இருளாக நிற்கிறதே! மறுபடியும் ஒரு கொடிப்பு கொடித்தார் ஸ்டியரிங் சக்கரத்தை.

"உர்...ர்" என்று ஒரு சத்தம். இடது பக்கம் பள்ளத்துக்குள்ளே சரிந்தது மோட்டார் வண்டி. அடுத்த விநாடி ஆற்றின் கரை மேட்டை வழுக்கிக் கொண்டு சரிவிலே மோதி அப்படியே அதல பாதாளத்தைநோக்கி உருண்டது அந்தச் சிவப்பு மோட்டார். பார வண்டியை ஓட்டிக் கொண்டு வந்த வண்டிக்காரன் திகைத்துப் போய், கயிற்றை இழுத்துப் பிடித்து நிறுத்துவதற்குள், காரின் பின் கதவு 'படார்' என்று திறந்து அதிலிருந்து ஒரு அம்மாள் வெளியே தூக்கி எறியப் பட்டாள்.

இருளும் வெளிச்சமும் ஒன்றையொன்று முட்டி மோதிக் கொண்டு வானத்திலே உருண்டன. அவற்றோடு பிணைந்து கொண்டே சூரிய உருண்டையும் மேகத்திலே உருண்டது. அந்த நேரத்தில் கிணற்றுக்குள்ளிருந்து வருவதுபோல "ஐயோ! கல்யாணி!" என்று ஒரு குரல் கேட்டது. அடுத்த விநாடி 'கிறுகிறு' என்று மணல் மேட்டிலிருந்து சரிந்து, ஸ்மரணை யற்றவளாய் ஆற்றின் மணலை நோக்கி உருண்டு கொண்டிருந்தாள் கல்யாணி! **(தொடரும்)**

# ஹாஸ்யக் களஞ்சியம்




"இந்த மதறாசில் எதை வேணுமானாலும் கூடையில் வாரிப் போட்டுக் கொண்டு விற்கிறார்கள். வியாபாரம் ஆகிவிடுகிறது!"









"உங்கள் வீட்டில் பூனை சப்தம் ரொம்பக் கேட்கிறதே; பூனை வளர்க்கிறீர்களா?"
"இல்லை.... சப்தத்தைத்தான் வளர்க்கிறோம்."



"இஷ்! இஷ்! எத்தனை காக்காய்கள்? இந்த ஊரில் இவ்வளவு பேர்காக்கா பிடித்தும், இன்னும் நிறையக் காக்காய் இருக்கிறதே!"



இப்படி மோதிக்காட்டா நாம் எங்கே சந்திக்க முடிகிறது? என்ன சௌக்கியமா?
சௌக்கியம் தான். ஆனல்! இப்ப மோதிண்டதில் தான் கொஞ்சம் பலமான அடி!


சாமா



"மனுஷனுக்குப் பால்யம் திரும்புகிறப்பிலே இருக்கு!"
"திரும்பலே! அவர் அதைத் திருப்பிண்டு இருக்கார்!"




"என்ன சார், நான் வரும்போதெல்லாம் வெண்டைக்காய் சாம்பாரா இருக்கு?"
"வெண்டைக்காய் மூளைக்கு நல்லது, அதனுலேதான்."




டாக்டர்
"என் மனைவிக்கும் இதே மாதிரி உடம்பு வந்தது.. வாங்கிக் கொடுத்தேன், உடனே குணம் ஆகிவிட்டது. உங்கள் மனைவிக்கும் வாங்கிக் கொடுங்கள்."
"என்ன வாங்கிக் கொடுக்கணும்?"
"ஒரு ஜோடி வைரத்தோடு."




MORNING NEWS
நகரில் ஓர் சம்பவம்

# உங்கள் ஆல்பத்திற்கு ஒரு அருமையான படம்

## —உங்கள் 'கோடக்' காமிராவைக்கொண்டு வெகு சுலபமாக எடுக்கவும் கூடும்



பொத்தானை அழுத்தி இத்தகைய கணங்களின் அபூர்வ ஆனந்தத்தை அமரத்துவம் பெறச்செய்யுங்கள்!

ஸ்படிகம்போன்ற பெரிய வியூபைண்டரின் மூலம் காட்சியைக் குறி பார்த்துக் கொண்டு பொத்தானை அழுத்துங்கள். இச்சிறப்பு மிகுந்த 'கோடக்' காமிராக்கள் விஷயத்தில் இவ்வளவே நீங்கள் செய்ய வேண்டியது — ஒவ்வொரு முறையும் பழுதேயில்லாமல் அற்புதமான படங்கள் எடுக்க முடியும்.

உங்கள் கோடக் வியாபாரியிடம் போய் மார்க்கெட்டிலுள்ள சிறந்த காமிராக்கள் அத்தனை தினுசுகளையும் காண்பிக்கச் செய்யுங்கள். உங்களுக்கு ஏற்றதான ஒரு 'கோடக்' மாடல் கண்டிப்பாக இருக்கும்.

'கோடக்' பிளாஷ்ஹோல்டர்களையும் பாருங்கள். இவற்றின் உதவியால் வெளிக் காட்சியைப் போன்றே சுலபமாக வீட்டினுள்ளும் படம் பிடிக்கலாம்.



**புதியது!**

உன்னதமான ஸிக்ஸ் - 20 'பிரௌனி' காமிரா - மாடல் F. கவர்ச்சியிலும் சிறப்பிலும் இணையற்ற ஒரு பாக்ஸ் காமிரா இது! ஒரு 'பிரௌனி' காமிராவில் நீங்கள் எதிர்பார்க்கும் எளிமையும் நம்பகத்தன்மையும் கிடைப்பது தவிர இதன் முற்றிலும் புதிய 'பிரௌன் & பெய்ஜ்' மோஸ்தரை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள். க்ளோஸ்-அப் லென்ஸ் மற்றும் கலர் பில்டர் இதிலேயே உண்டு. விரல் பட்ட மாத்திரத்தில், சிறந்த போர்ட்ரேட்டுகளும் வெளிக் காட்சிப் படங்களும் எடுத்துவிடுவீர்கள். வீட்டினுள் தெளிவான ஸ்னாப்புகள் எடுக்க ஒரு 'கோடக்' பிளாஷ்ஹோல்டரை பொருத்திக் கொள்ளுங்கள், போதும்.

உங்களை புளகாங்கிதமடையச் செய்யும் காமிரா! ரூ. 36/8
இணையான தோல் கேஸ் ரூ. 8/-
பிளாஷ்ஹோல்டர்கள் ரூ. 22/12 மற்றும் ரூ. 31/4
இதர ஸிக்ஸ்-20 'பிரௌனி' மாடல்கள் ரூ. 24/- லிருந்து.



இவ்விலைகளில் விற்பனை வரி சேராது.

**கோடக் லிட்.,** (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)
பம்பாய் - கல்கத்தா - டில்லி - மதராஸ்




## 33. பூட்டு திறந்தது!

"அண்ணா, நீ சொல்லிய காரணம்தான் சரி. அதனால்தான் அந்த நாய் பாய்ந்தபடியே சிலையாக மாறிவிட்டது. அண்ணா, கடவுள்தான் நம்மைக் காப்பாற்றினார். நீ கண்ணாடியை முகத்தை மறைத்துக் கொள்ளுவதற்காகப் படகிலிருந்து எடுத்துக் கொண்டு வந்தபொழுது அந்தக் கண்ணாடி நமக்கு இப்படி உபயோகப்படும் என்று நினைத்தாயா? அண்ணா! நீ எந்தக் காரியத்தை எடுத்துக் கொண்டாலும் அது உனக்குத் தெரிந்தோ தெரியாமலோ வெற்றிகரமாக முடிவடைகிறது. அந்த வில்லை எதற்காக இன்னும் தோள் மீது மாட்டிக் கொண்டிருக்கிறாய்? கீழே போட்டுவிடு."

"என்ன உமா, மறுபடியும் உளற ஆரம்பித்து விட்டாய்! துறவி சொல்லியபடி இந்த வில்லை அந்தக் குடிசையிலிருக்கும் பெரியவரிடம் திருப்பிக் கொடுக்க வேண்டாமா? நம் காரியம் முடிந்து விட்டால் பிறகு மற்றவைகளையெல்லாம் மறந்து விடுவதா?"

"அண்ணா, கோபித்துக் கொள்ளாதே. நான் மறந்து விட்டேன். நாம் எதை மறந்தாலும் துறவியை மறக்க முடியுமா? அவருடைய உதவி இல்லாவிட்டால் நாம்......" என்று உமா சொல்லி முடிப்பதற்குள் பிரபாகரன், "உமா, நாம் இப்படியே பேசிக் கொண்டிருந்தால் மேலே நடக்க வேண்டியவற்றைக் கவனிக்க வேண்டாமா?" என்று தன் சட்டைப் பையில் இருந்த தங்க மாம்பழத்தைத் துடைத்தான். நாய்ச் சிலையின் கழுத்தின் அருகில் கொண்டு போனான். மெதுவாக நாயின் கழுத்திலுள்ள சங்கிலியில் மாட்டப்பட்டிருந்த சிறிய சாவியினால் தங்க மாம்பழத்தைத் திறக்க யத்தனித்தான். பக்கத்திலேயே நின்று கொண்டிருந்த உமா கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தான். பிரபாகரன் தங்க மாம்பழத்தைத் திறப்பதற்கு யத்தனித்தபோது சாவி இரண்டு துண்டாக உடைந்தது. அதே சமயத்தில் தங்க மாம்பழத்தின் மீது இருந்த பொன் தகடுகளும் இரண்டாகப் பிரிந்தன.

உடனே அதனின்று ஒரு கடிதம் கீழே விழுந்தது. அந்தக் கடிதத்தைக் குனிந்து எடுத்துப் பிரபாகரனிடம் கொடுத்தான் உமா. பிரபாகரன் அந்தக் கடிதத்தை வாங்கிக் கொண்டு தங்க மாம்பழத்தை உற்றுக் கவனித்தான்.

அதற்குள் இரண்டு சிறிய கண்ணாடிப் பெட்டிகள் இருந்தன. அந்தப் பெட்டிகளும் மாம்பழ வடிவமாகக் காணப்பட்டன. ஒரு கண்ணாடிப் பெட்டி வெள்ளை நிறமாக இருந்தது. மற்றொன்று சற்று நீல நிறமாகத் தோன்றிற்று. அந்த இரண்டு பெட்டிகளுக்கு அடியிலே ஒரு சாவியும் இருந்தது.

"அண்ணா உன்னிடம் கடிதம் ஒன்றைக் கொடுத்தேனே. அதைப் படித்துப் பார். இந்தத் தங்க மாம்பழத்திற்குள் இருக்கும் சாமான்களைப் பற்றி அதில் ஏதாவது எழுதி இருக்கும் என்று நினைக்கிறேன்" என்றான் உமா.

"ஆமாம், உமா! நான் மறந்து விட்டேன். இதோ படிக்கிறேன்" என்று கூறிக் கடிதத்தைப் பிரித்தான். அதில் கீழ்வருமாறு எழுதியிருந்தது.

"எனக்குப் பிற்காலம் அரசன் வீரசிம்மனுக்கு உதவியாயிருக்கும் பொருட்டு இந்தக் கடிதத்தை எழுதியிருக்கிறேன். இதில் இருக்கும் மாம்பழ வடிவமுள்ள வெள்ளைப் பெட்டியில் கல்லறையில் படுக்க வைத்திருக்கும் ஆனந்த தீர்த்தனின் உயிரை மந்திர சக்தியினால் அடைத்து வைத்திருக்கிறேன். நீலப் பெட்டியில், அவர் மனைவி சியாமளா தேவியின் உயிரை அடைத்து வைத்திருக்கிறேன். அரசன் வீரசிம்மனின் கட்டளைப்படி அப்படிச் செய்திருக்கிறேன். இந்த இரண்டு பெட்டிகளுக்கு அடியில் கல்லறையின் சாவி வைக்கப்பட்டிருக்கிறது. இச் சாவியினால் கல்லறையைத் திறந்தால் பெரிய இரண்டு கண்ணாடிப் பெட்டிக்குள் தனித்தனியே ஆனந்த தீர்த்தனின் உடலும் அவன் மனைவி சியாமளா தேவியின் உடலும் வைத்திருப்பதைப் பார்க்கலாம். வெள்ளைக் கண்ணாடிப் பெட்டியைத்



மரத்தடியில் கோழி மேய்கிறது.
அப்படியா...? திருப்பிப் பாருங்கள்.

திறந்து அதில் படுக்கவைத்திருக்கும் ஆனந்த தீர்த்தனின் மூக்கின் அருகில் வெள்ளை மாம்பழப் பெட்டியின் நுனிப் பக்கத்தை வைக்கவும். பிறகு மாம்பழப் பெட்டியின் நுனியில் அடைத்திருக்கும் மெழுகை எடுத்து விட்டு மூடிவிடவும், அதைப் போலவே நீலக் கண்ணாடிப் பெட்டியை எடுத்துச் சியாமளா தேவியின் உடல் வைக்கப்பட்டிருக்கும் கண்ணாடிப் பெட்டியில் வைத்துப் பெட்டியை மூடவும். மூடிப் பதினைந்து நிமிஷத்திற்கெல்லாம் அவர்கள் இருவரும் உயிர் பெற்று எழுந்திருப்பார்கள். உடனே கண்ணாடிப் பெட்டியின் கதவுகளைத் திறந்து விடவும். இப்படிக்கு

வயல் காட்டுக் கிழவி

உடனே உமா, "சீக்கிரம் வா அண்ணா, சாவியை எடுத்துக் கொள். கல்லறைக் கதவுகளை திறப்போம்" என்றான்.

உடனே பிரபாகரன் சாவியைக் கையில் எடுத்துக் கொண்டான். தங்க மாம்பழத்தில் உள்ள கண்ணாடிப் பெட்டிகளை ஜாக்கிரதையாகப் பிடித்துக் கொண்டான் பிரபாகரன்; உமா பின் தொடர மெதுவாகக் கல்லறையை நோக்கி நடந்து சென்றான்.

"அண்ணா, இதோ பார்! கண்ணுக்கு எட்டிய வரையிலும் சிலைகளாகவே காணப்படுகின்றன! இந்தக் கல்லறைத் தீவிலுள்ள சிலைகள் மாத்திரம் உயிர் பெற்று எழுந்திருந்தால் சண்டைக்குப் பெரிய சேனையே தயாராகிவிடும் போல இருக்கிறதே" என்றான் உமா.

"உமா, நீ சொல்லுவது உண்மை தான். இங்கு ஒரு பெரிய பட்டாளமே சிலைகளாக மாறிவிட்டது போல் இருக்கிறது" என்று கூறிவிட்டுக் கதவைத் திறந்தான் பிரபாகரன்.

சாவியை வைத்தவுடன் கதவுகள் படார் என்று திறந்தன. கல்லறை முழுதும் இருட்டாகஇருக்கும் என்று நினைத்துக் கொண்டிருந்தான் பிரபாகரன். ஆனால் அதற்கு மாறாக ஆங்காங்கே வைக்கப் பட்டிருந்த ஜன்னல்களின் உதவியால் அறை முழுவதும் ஒரே வெளிச்சமாக இருந்தது. அந்த அறையிலே ஒரு சிறிய மேடை கட்டப்பட்டிருந்தது. அந்த மேடையிலே இரண்டு பெரிய கண்ணாடிப் பெட்டிகள் சேர்ந்தாற் போல் வைக்கப்பட்டிருந்தன. "உமா, பார்த்தாயா? இந்தக் கண்ணாடிப் பெட்டியில் இருக்கும் ஆனந்ததீர்த்தன் எப்படி இருக்கிறார் என்று? அவர் உடுத்திக் கொண்டிருக்கும் உடை அரச உடை மாதிரி அல்லவா இருக்கிறது!" என்றான் பிரபாகரன்.

"ஆமாம், அண்ணா! அவர் முகம் மிகவும் நன்றாக இருக்கிறது. உயிர் உள்ளவராகவே காணப்படுகிறார். இதோ பார், சியாமளா தேவியாரின் உடலை. தூங்குவது போலவே இருக்கிறது. இவர்கள் யாரோ? எதற்காக இங்கு வைக்கப் பட்டிருக்கிறார்கள்" என்று கேட்டாள்.

"யாராக இருந்தால் நமக்கு என்ன? நாம் எடுத்துக் கொண்ட காரியத்தின் படி இவர்களை இந்தக் கண்ணாடிப் பெட்டியிலிருந்து விடுதலை செய்து விட்டு நாம் திரும்பிச் செல்வோம். நீ மெதுவாக இந்தப் பெட்டியின் மூடியைத் திற" என்றான் பிரபாகரன்.

பிறகு கடிதத்தில் எழுதியிருந்தபடி செய்து விட்டு இருவரும் என்ன நேரிடுமோ என்று பயந்து கல்லறைக்கு வெளியே வந்தார்கள். வெளியில் இருந்தபடியே கண்ணாடிப் பெட்டிகளைப் பார்த்த வண்ணமாக நின்று கொண்டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் "சபாஷ்! பிரபாகரா, எல்லாம் ஈசன் செயல், நடப்பது நடந்தே தீரும்" என்று யாரோ சொல்லுவது போல் தோன்றியது.

உடனே உமா "அண்ணா, இதென்ன? இது துறவியின் குரல் போலல்லவா இருக்கிறது!" என்றான். இருவரும் திரும்பிப் பார்த்தனர். துறவி அவர்களுக்கெதிரில் தோன்றினார். (தொடரும்)

# இந்த பிரசித்திபெற்ற க்ரீம்கள் உங்கள் சருமத்திற்கு மிகப் பொருத்தமானவை!

**உங்களைச் சுற்றிலுமுள்ள சீதோஷ்ண நிலைக்கும் உகந்தவை**

இவ்விரண்டு அற்புதமான பாண்ட்ஸ் அழகு சாதனங்களை உபயோகியுங்கள்! அவை உங்கள் சருமத்திற்கு ஏற்றவை; இரண்டும் உங்கள் வதனத்தை சீதோஷ்ண நிலையின் கொடுமையினின்று பாதுகாத்து, சருமத்தை நிர்மலமாக, மென்மையாக வைத்திருக்கும்.



வரண்ட சீதோஷ்ண நிலை உங்கள் முகப்பொலிவைப் பாழ்படுத்தினால் — பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் உங்களுக்குத் தேவை.. அதிலுள்ள செழிப்பான எண்ணெய்கள் சருமத்திற்கு சமன மூட்டி, கடுமையான வெயில் மற்றும் வரண்ட காற்றினால் அது வாடி வதங்காமல் காப்பாற்றுகின்றன.



உங்கள் சருமம் இயற்கையாகவே எண்ணெய்ப் பசையுடையதானால், அல்லது உஷ்ணமும் ஈரகசப்பும் மிகுந்த சூழ்நிலையில் பிசுக்கடையும் பட்சத்தில்—பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் உபயோகிக்கவும். இக்குளுமையான மெல்லிய க்ரீம் சருமத் துவாரங்களில் படியும் பிசுக்கையும் அழிந்த ஜீவாணுக்களையும் அகற்றி, உங்கள் முகத்திற்கு சௌமிய பாதுகாப்பளிக்கிறது.

பாண்ட்ஸ் க்ரீம்களை தவறாமல் உபயோகியுங்கள். சொற்ப காட்களில் உங்கள் சருமம் புதுமையும் அழகும் செறிந்து விளங்குவதைக் காண்பீர்கள்— உணரவும் செய்வீர்கள்!

## உலகில் எழிலரசிகள் உபயோகிக்கும் க்ரீம்கள்

# பாண்ட்ஸ்

கோல்ட் க்ரீம்

வானிஷிங் க்ரீம்




P. 5947

# ஆரோக்கிய வாழ்வு

சீதாலக்ஷ்மி குமாரசாமி

## 19. சமையலில் கொலை!

சமையலில் கொலையா நடக்கின்றது! இது என்ன அநியாயமாய் இருக்கின்றதே! நாம் விரும்பிச் சாப்பிடும் உணவு கொலை செய்யப் படுகின்றதாமே! அவ்வாருனால் நாம் எல்லாம் உயிர்போன உணவையா சாப்பிடுகின்றோம்! இத்தனை காலம் இந்தச் சமையலைச் சாப்பிட்டு நாம் வாழவில்லையா என்று கேட்கலாம்.

ஆம், நாம் சாப்பிடும் உணவு உண்மையில் கொலைதான் செய்யப் படுகின்றது. உயிர் இழந்த உணவைத்தான் நாம் உண்கிறோம். இதை நிரூபிக்கவும் முடியும்.

இதுவரை நாம் சாப்பிடும் உணவிலுள்ள சத்துக்களைப் பற்றி யெல்லாம் ஒருவாறு உணர்ந்தோம். எவை எவைகளில் எந்த அளவில் என்னென்ன சத்துக்கள் இருக்கின்றன என்பதையும் அறிந்தோம். புரதங்கள், இனிப்புச் சத்து, கொழுப்பு, பலவித தாதுக்கள், பலவித வைடமின்கள் இவைகளின் வரலாற்றைத் தெரிந்து கொண்டோம். நாம் சாப்பிடும் உணவில் இவைகள் இருக்க வேண்டிய அளவுகளைப் பற்றியும் பல உதாரணங்கள் மூலமாக ஐயமறப் புரிந்து கொண்டோம்.

இனி, மேற்படி சத்துக்கள் எவ்வாறு சமையலில் கொலை செய்யப்படுகின்றன என்பதை ஆராய்வோம்.

நம் வயிற்றை நிரப்பக்கூடிய முக்கியமான உணவு அரிசி. இந்த அரிசி மில்லில் தீட்டுவதால் எல்லா சத்துக்களும் அழிந்து, வெறும் மாவுப் பொருள்தான் மிஞ்சி இருக்கிறது. அந்த அரிசியையும் பல முறை கழுவுவதில் ஒட்டியிருக்கும் சிறிதளவு சத்தும் போய்விடுகிறது. பின் வேக வைத்துக் கஞ்சி வடிப்பதில் கொஞ்ச நஞ்ச சத்தும் வெளியேறி விடுகிறது. பின் மிஞ்சியிருப்பது உயிரற்ற உடல் போன்ற சக்கைதானே! அரிசியில் அதன்மேல் தவிட்டில்தான் உயிர் இருக்கிறது. அது இல்லாமல் சாப்பிடுவது உயிர்க் கொலையில்லாமல் வேறு என்ன!

பின் கறிகாய்களை எடுத்துக் கொள்வோம். இவைகளுக்கு உயிர் மேல் தோல். இவைகளை நீக்கி விடுவதுடன் அதற்கு உயிரூட்டும் அதன் சாற்றையு மல்லவா நாம் அதிகம் வேக வைப்பதிலும், வேகவைத்த ஜலத்தைக் கீழே கொட்டி விடுவதிலும் போக்கடித்து விடுகிறோம்! பின் அதில் உயிர் எப்படி இருக்க முடியும்? உயிர் மாய்ந்த காய்கறிகளை வாய்க்கு ருசியை உண்டாக்க, உப்பு, காரம், புளி, பெருங்காயம், தாளிப்பு—இத்தியாதி கைங்கரியங்கள் செய்து உண்கின்றோம்.

இதனால் நாம் கண்ட பலன் என்ன! பலவித நோய்கள், குறைகள் நம்மிடம் பிரியா நட்புக் கொண்டு விடுகின்றன. பின் இவைகளைப் போக்கப் பலவித டானிக்குகள், மாத்திரைகள் மருந்துகள், ஊசிகள் என்று உபயோகிக்கத் தொடங்குகிறோம்.

"கடவுள் நமக்கு அருமையான அமிர்தமான உணவுகளை அள்ளி வழங்கியுள்ளார். ஆனால் சாத்தான் அதற்கு எதிரிடையாகச் சமையல்காரர்களைச் சிருஷ்டித்துள்ளார்" என்று உணவுக் கலையில் தேறிய ஒரு ஆங்கில விஞ்ஞானி சொல்லுகிறார். சமையல்காரர்கள் என்றால் சம்பளத்துக்காக என்று இருப்பவர்களை மட்டும் சொல்லவில்லை. பொதுவாகச் சமையல் செய்பவர்களைத்தான் சொல்லுகிறார்.

நமது சமையல் அறை என்று சீர்ப்படுமோ அன்றுதான் நமது குடும்பத்திலுள்ள அனைவரும் ஆரோக்கியமாய் இருக்க முடியும். அதுவரை நாம் என்னதான் அறிவைப் பெருக்கிக் கொண்டாலும் சரி; லக்ஷக்கணக்கில் சம்பாதித்தாலும் சரி;—இவையெல்லாம் ஆரோக்கியத்தைக் காப்பாற்றாது. வெறும் மதிப்பையும் பகட்டையும் தான் கொடுக்கும். ஆரோக்கியமென்பதை விலை கொடுத்து வாங்க முடியாது. அது சமையலறையிலிருந்து பிறக்கக் கூடியது. நமது அறிவு, சாமர்த்தியம், கவனம் முதலியவைகளைச் செலுத்தி அதனைச் சீராக்கினால்தான் ஆரோக்கியமாக நாம் வாழ முடியும்.

இன்று சமையல் செய்வது அல்லது சமையலில் கவனம் செலுத்துவது ஒரு அநாகரிகம் என்று சிலர் கருதுகின்றனர். ஏதோ வீட்டில் பெரியவர்களாய் உள்ளவர்கள் இப்பொழுதும் கவனம் செலுத்துகின்றனர். சில வீடுகளில் நடக்கும் விதத்தைப் பார்த்தால் இவர்கள்



ஏப்ரல் 16வ மாயூரத்தைச் சேர்ந்த திருவழுந்தூர் ஸ்ரீ பரிமள ரங்கநாதசாமி கோயில் தெப்ப உற்சவம் சிறப்பாக நடைபெற்றது. மேற்படி உற்சவத்தையொட்டி அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார் அவர்களின் சங்கீதக் கச்சேரி அமோகமாக நடைபெற்றது. கச்சேரிக்கு மாயூரம் நகர காங்கிரஸ் கமிட்டித் தலைவர் டாக்டர் வி. வரதாச்சாரியார் அவர்களின் குமாரன் பன்னிரண்டு வயது நிரம்பிய சீனிவாசன் திறமையாக மிருதங்கம் வாசித்துச் சங்கீத வித்வான்களின் ஆசியையும், பாராட்டையும் பெற்றான்.



“பாரதியார் கலைக் காட்சி” நடத்திப் பாரதி பதக்கம் பெற்ற திரு ஆர். ஏ. பத்மநாபன் அவர்களின் புதல்வி குமாரி மீராவின் பரத நாட்டிய அரங்கேற்றம் ஏப்ரல் 16ல் சென்னையில் சிறப்பாக நடந்தேறியது. அரங்கேற்றத்துக்குத் தலைமை தாங்கிய பேராசிரியர் பி. சாம்பமூர்த்தி அவர்கள் நாட்டியமாடிய குமாரி மீராவையும், மீராவுக்குச் சிறப்பாகப் பரத நாட்டியம் பயிற்றுவித்த ஸ்ரீமதி நீலா பாலசுப்ரமணியம் அவர்களையும் மிகவும் பாராட்டினார்.

எப்படித்தான் சாப்பிட்டு உயிர் வாழ்கின்றார்கள் என்று நினைக்கத் தோன்றும். ஒரு பெரிய பணக்கார நண்பர். நாகரிகத்திலும், படிப்பிலும் தேர்ந்த குடும்பம். பல நாட்களாய் அவர்கள் வீட்டுக்கு அழைத்ததின் பேரில் ஒரு நாள் மாலை சென்றேன். வரவேற்பது முதற்கொண்டு, டிபன் கொடுப்பது வரை மிக்க நாகரிகமாய் நடந்தன. பங்களாவே ஒரு நாகரிகச் சின்னமாக விளங்கிற்று. எல்லாம் சுற்றிக் காண்பித்தனர். கடைசியில் சமையல் அறை போன்று தோன்றின இடத்தைச் சற்று எட்டிப் பார்த்தேன். எனக்கு ஒரே ஏமாற்றமாய் ஆகி விட்டது.

அங்கங்கு சுவர்களில் எண்ணெய்ப் பிசுக்குகள், எண்ணெய்க் கறைகள் இருந்தன. தலைக்கு மேல் ஒட்டடைகள் அடர்ந்து சில இடங்களில் தொங்கிக் கொண்டிருந்தன. கால் வைக்கச் சகிக்காதபடி அழுக்கேறியிருந்தது தரை. அடுப்பங்கரை கழுவி எத்தனை வருடங்களாயிற்றோ! சமையலுக்கு நறுக்கிய காய்கறிகளின் மேல் தோல், வெங்காயத் தோல்கள் ஒரு மூலையில் குவிந்து கிடந்தன. சுமார் ஒரு வாரக் குப்பையாவது அங்கு இருக்கும். எல்லாம் சேர்ந்து ஒருவித வாடையையும், அருவருப்பையும் உண்டாக்கின.

முதலில் எனக்கு டிபன் பரிமாறின நாகரிகத்துக்கும் சமையல் உள்ளுக்கும் இவ்வளவு வித்தியாசம் இருக்குமென்று கனவிலும் நினைக்க முடியாது. வீட்டுப் பெண்மணிகளின் கவனிப்பு சமையல் அறையில் கிடையாது என்பது நன்கு தெரிகிறதல்லவா! பின் சமையல் பக்குவம் எம்மாதிரி இருக்குமென்பதையும் ஊகிக்கலாம். எப்படியோ சமையலைச் செய்து அழகிய பீங்கான் தட்டுகளிலும், வெள்ளித் தட்டுகளிலும் பரிமாறி விடுகின்றனர். மற்றபடி சமையல் அறைக்குப் பெண்கள் சென்று பார்த்துக் கொள்வதுகூட இந்தக் காலத்தில் அநாகரிகமென்று கருதும் அளவுக்கு நாகரிகம் மிகுந்து விட்டதென்றால் பின் என்ன சொல்ல முடியும்! இவர்களுக்கு வேண்டிய ஆரோக்கியத்தை டாக்டர் கொடுக்கும் மருந்துகளினாலும், ஊசிகளினாலுமே அடைய முடியுமே அன்றி, மற்றும் ஆகாரத்தினால் அடையலாமென்று சொல்லுவது பகல் கனவாகவே முடியும்.

எனவே, சமையல் அறை எப்பொழுது சீர்திருத்தம் அடைகின்றதோ அப்பொழுதுதான் உண்மையான ஆரோக்கியம் குடும்பத்தில் நிலவ முடியும். இல்லையேல் ஆரோக்கியத்தை மருந்தின் மூலமாய் விலை கொடுத்துத்தான் வாங்க வேண்டியிருக்கும். அப்படியும் அது ஸ்திரமான ஆரோக்கியமாய் இருந்தால் பரவாயில்லை; அதுதான் கிடையாது! சரி, பணக்காரர்களாக செலவு செய்யலாம். மற்றவர்கள் என்ன செய்ய முடியும்! எப்பொழுதும் ஆரோக்கியக் குறைவாகவே இருப்பதா! ஆம், முக்காலே மூன்று வீசம் பேர்கள் இன்று பெரிய நோய்கள் என்று இல்லா விட்டாலும் ஏதாவது ஒன்று அல்லது சில சுகவீனங்களைக் கொண்டே வாழ்கின்றனர். அதுவும் ஆண்களுக்கு நோய் வருவது ஒரு தினசரி பழக்கமாகி விட்டது. மலச்சிக்கல், முதுகுவலி, கால்வலி, வயிற்றுவலி, குதிகால் வலி, மயக்கம், பலவீனம், நரம்புத் தளர்ச்சி இம்மாதிரி சாதாரணக் குறைகள் நம்மில் அநேகருக்கு இருக்கின்றன. இத்தனைக்கும் காரணம் சரியான உணவு, சரியான உடல் உழைப்பு இல்லாமையே.

சகோதரிகளுக்குக் கோபம் வரலாம்; பரவாயில்லை. ஆனால் உண்மையைச் சொல்லத்தான் வேண்டியிருக்கின்றது. ஏதோ தலைமுறைத் தத்துவமாக ஒருவகை சமையலைச் செய்கின்றோமே அன்றி அதில் உள்ள நன்மை தீமைகளை அறிந்து செய்வதில்லை; அறிய வேண்டுமென்ற ஆர்வமும் நம்மில் இல்லை. இது மிக மிக வருத்தப்படக் கூடிய விஷயம். உலகுக்கு உணவளிக்கும் மாத்ரு ஸ்தானத்தை வகித்து வரும் பெண்கள் இதில் சரிவரக் கவனம் செலுத்தாமல், கணிதம் கற்று யாது பயன்! கப்பல் ஓட்டி யாது பயன்! காற்றில் பறந்து யாது பயன்! மற்றும் பல கலைகள் கற்று யாது பயன்! தன் கணவனுக்கும், குழந்தைகளுக்கும், ஏற்ற ஆரோக்கிய உணவை ருசியுடன் பரிமாறும் பெண்மணியின் வீட்டில் நிலவும் சாந்தியும், சந்தோஷமும், ஆரோக்கியமும் மற்றவர்கள் வீட்டில் காண்பது அரிது. அவர்கள் என்னதான் நள பாக சமையல்காரனை வைத்திருந்தாலும் ஒப்புக்கு, கடமைக்குக் குடும்பம் நடக்குமே யன்றி, அதில் ஒரு பாசமும், பற்றும், அன்பும், ஆத்மீகமும், ஆரோக்கியமும் கலந்து இருக்காது என்பதை அனுபவித்தவர்கள் நன்கு உணர்வார்கள். எனவே ஆரோக்கியம் சமையல் அறையிலிருந்து பிறக்கிறது என்பது முடிவாயிற்று அல்லவா! (தொடரும்)

# பற்களைப் பரிசுத்தமாக்கும் மக்ளீன்ஸ்!

இம் மூன்று கோப்பைகளைப் பற்கள் என பாவனை செய்வீர்களானால் இவைகளின் வெளிப்புறம் மற்றும் உட்புறத்தைத் தவிர, ஊத்தை சேர்ந்து அபாயகரமான கிருமிகள் வசிக்கும் இடுக்குகளை சுத்தம் செய்வது மிகக் கடினம்.



மக்ளீன்ஸ் பற்களுக்கு இடையிலுள்ள சந்துகளை துப்புரவாக சுத்தம் செய்து

## ஊத்தையை அகற்ற சிறந்த சாதனம்

பற்களின் மேல் படிந்திருக்கும் பாசியில் லிப்பாயிட்ஸ் என்று சொல்லப்படும் அசுத்தம் கலந்துள்ளது. லிப்பாயிட்டை எளிதில் சுத்தம் செய்யமுடியாது. இவை தவறாமல் சுத்தம் செய்யப்படவேண்டும். இல்லையேல் இவைகளின் உட்புறத்தில் தங்கும் திராவகச்சத்து பற்களை அரித்தே விடுகின்றது. இத்தகைய லிப்பாயிட்ஸை அறவே அகற்ற ஒரே வழிதான் உண்டு. அதாவது இதை கரையச் செய்யவேண்டும். லிப்பாயிட்ஸை கரைக்கக்கூடிய விசேஷமான திரவம் மக்ளீன்ஸில் இருப்பதால், வாயில் நுரை கூட்டாமல் மக்ளீன்ஸ் லிப்பாயிட்ஸை லகுவாக ஜாக்கிரதையுடன் துரிதமாக கரையச்செய்கின்றது. பற்களின் சிதைவைத் தவிர்க்க இது மிகவும் முக்கியம்.

மக்ளீன்ஸ் பற்பசையை தினந்தோறும் இரு முறை உபயோகியுங்கள். பற்கள் வெண்மையாகவும், ஆரோக்கியத்துடனும் விளங்கும்.

க்ளோரோபில் சேர்ந்த வகையும் கிடைக்கும்




MTY-41 TAM




## 52. உள்ளத்தில் உறைந்த உருவம்

பிராணலாலோ பழங்காலத்துப் பேர்வழி. பிஹாரிலால் சொன்னது அவருக்கு அவ்வளவாக ருசிக்கவில்லை. பெண்ணின் அபிப்பிராயத்தையும் பிள்ளையின் அபிப்பிராயத்தையும் கேட்டுக் கொண்டுதான் கல்யாணம் செய்வதென்றால், ஆழ்கடலில் அலை ஓய்ந்தபின் முழுகும் கதையாகத்தான் முடியும் என்று அவர் எண்ணினார். அதனால் அவர், பக்கத்தில் ரமேஷோ குஸுமாவோ இருக்கிறார்களே என்பதற்காகத் தயங்கவில்லை. தமக்குச் சரியென்று பட்டதைத் தைரியமாகச் சொல்லியே விடுவது என்ற முடிவுக்கு வந்தார். எனவே, "குஸுமாவின் அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொண்டிருந்தால், காரியம் சீக்கிரமாக நடைபெறுமா? பெண்களுக்கு ரொம்ப சுதந்திரம் கொடுத்து ஆலோசனை கேட்பதென்று ஆரம்பித்து விட்டால், எத்தனையோ விஷயங்கள் குறுக்கே வந்து நிற்கும். பல விஷயங்களில் மீன மேஷம் பார்க்க நேரிடும்!" என்றார். இப்புதுமை யுகத்தைப் பற்றி அவர் கொண்டிருந்த அபிப்பிராயம் இது.

"அதிருக்கட்டும், பிராணலால்! அவள் அபிப்பிராயத்தைக் கேட்டே காரியத்தை நடத்தினால்...?" என்றார் பிஹாரிலால்.

குஸுமாவுக்கு இருதயத் துடிப்பு அதிகரித்தது. ரமேஷின் உள்ளமும் படபடத்தது. அவனால் அங்கே உட்கார்ந்திருக்க முடியவில்லை. எழுந்து போய் ஒரு மூலையில் கிடந்த மேஜையருகில் உட்கார்ந்தான். பிறகு காகிதத்தையும் பேனாவையும் எடுத்துக் கொண்டு 'கிறு கிறு' வென்று ஏதோ எழுதலானான். ஆனால் அவன் மனம் எழுத்தில் செல்லவில்லை. அங்கே இருவருக்கும் இடையே நடந்து கொண்டிருந்த பேச்சையே உன்னிப்பாகக் கவனிப்பதில் ஈடுபட்டிருந்தது.

"பேஷாக நடத்தலாம். கேட்ட கேள்விக்கு ஒரு பதில் வந்துதானே ஆக வேண்டும்? அதை வைத்துக் கொண்டு மேலே நடக்க வேண்டியதைக் கவனித்தால் போயிற்று!" என்றார் பிராணலால்.

"பிராணலால்! நீயே குஸுமாவைக் கேட்டுப் பார்! அவளுக்கு ரமேஷை மணந்து கொள்ளச் சம்மதமா, இல்லையா என்று!" என்றார் பிஹாரிலால். அருமை மகளின் உள்ளம் அன்புத் தந்தையின் கண்களுக்கு ஒளிந்திருக்கவில்லை.

குஸுமாவைக் கேட்டுப் பதில் சொல்லுமாறு பிராணலாலுக்குச் சொன்னவர் அப்புறம் அங்கே அரைக் கணம் கூட நிற்கவில்லை. குஸுமா எந்தப் பதிலும் சொல்வதற்கு முன்பாகவே ரமேஷை அழைத்துக் கொண்டு அவர் வெளியே வந்து விட்டார்.

ஸர் பிஹாரிலாலும் ரமேஷும் அங்கிருந்து வேறு அறைக்குச் சென்று ஐந்து நிமிஷம் கூட ஆகியிராது. அதற்குள் பிராணலால் குஸுமாவின் பதிலுடன் அங்கே வந்து விட்டார். "தங்களுக்கு எது பிடித்தமோ, அதுவே தனக்கும் பிடித்தம் என்கிறாள் குஸுமா!" என்றார்.

"சரியாகப்போயிற்று! என் மேலேயே அவள் பொறுப்பைச் சுமத்தி விட்டாளா? ரமேஷைக் கேட்டால் இந்தச் சம்பந்தம் எனக்கு வேண்டாம் என்கிறானே!" என்று தலையைச் சொரிந்தார் ஸர் பிஹாரிலால்.

அதைக் கேட்ட பிராணலாலுக்கு ரமேஷைப் போன்ற முட்டாள் இந்த உலகத்திலேயே கிடையாது என்று தோன்றியது. தந்தையின் விருப்பத்துக்கு மாறு சொல்லாமல் ரமேஷை மணக்கக் குஸுமா சம்மதித்ததே பிராணலாலுக்குப் பிடிக்கவில்லை. அவளை மணந்து கொள்வதற்கு அருகதையுள்ளவன் ஒன்று பெரிய லட்சாதிப்பிரபுவாக இருக்கவேண்டும், இல்லாவிட்டால் மிகப் பெரிய அதிகாரியாக இருக்க வேண்டும் என்பது அவருடைய எண்ணம். தந்தை சொல் மிக்க மந்திரம் இல்லை என்ற முறையில் குஸுமா சம்மதித்தது கூட யோசித்துப் பார்த்தபொழுது அவருக்குத் தவறாகத் தோன்றவில்லை. ஆனால் ரமேஷைக் குஸுமாவுக்குத் தகுந்தவன் என்று எண்ணிப் பிஹாரி

லால் தேர்ந்தெடுத்ததுதான் அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. ஆனால் அந்த நேரத்தில் அவர் அதை அப்பட்டமாகச் சொல்லிவிட முடியுமா? இத்தனை பெரிய லக்ஷ்மி தன் வீட்டுக்கு வருவதை ஏன் இந்த அசட்டு ரமேஷ் வேண்டாம் என்கிறான் என்பதுதான் அவருக்குச் சரியாக விளங்கவில்லை. "ஏன்? நம் குஸுமாவைக் கல்யாணம் செய்து கொள்ள இவனுக்கு என்ன வலிக்கிறதாமோ?" என்று குத்தலாகக் கேட்டார்.

"குஸுமாவை வைத்துப் பராமரிக்கும் சக்தி தனக்கு இல்லை என்கிறான்!"

"பார்க்கப் போனால் ரமேஷ் சொல்வதும் நியாயம்தானே?" என்று சொன்ன பிராணலாலுக்கு ரமேஷிடம் பன்மடங்கு மதிப்பு உயர்ந்து விட்டது. 'ரமேஷ் புத்திசாலிதான்!' என்ற நம்பிக்கையும் அவருக்கு உண்டாயிற்று.

"பிராணலால் மாமா! நான் என் சுகத்தை நாடி இன்னொருவரைத் துயரத்தில் ஏன் ஆழ்த்த வேண்டும்? நீங்களே சொல்லுங்கள்! இங்கேயோ அரசபோகம் அவளுக்குக் காத்துக் கிடக்கிறது. ஆனால் என்னால் என்னுடையதென்று சொல்லிக் கொள்ள ஒரு சிறு குடிசை கூடப் போட முடியாதே!" என்றான் ரமேஷ்.

ரமேஷுக்குத் தன் கட்சிக்கு ஆள் தேவையாயிருந்தது. அதனால் இந்தச் சந்தர்ப்பத்தில் பிராணலாலின் உதவியை நாடினான். ஆனால் பிராணலால் அச்சமயம் அவனுக்கு உதவி செய்யவில்லை. அவன் காலையே வாரி விட்டு விட்டார். "என்ன பேச்சுப் பேசுகிறாய், ரமேஷ்! நம் எசமானர் நினைத்தால் வெறும் மனையை அரண்மனையாக்கித் தரமாட்டாரா? லக்ஷ்மி தேவிக் கொப்பான குஸுமா உனக்குக் கிடைத்து விட்டால் அப்புறம் பணத்துக்கு என்ன அப்பா பஞ்சம்?" என்றார்.

"நீங்கள் சொல்வது உண்மைதான். இருந்தாலும் சம்பந்தம் செய்து கொள்ளக் கூடிய இடம் எசமானரின் பெருமைக்குப் பெருமை அளிப்பதாக அமைய வேண்டாமா? நீங்களே சொல்லுங்கள். நான் என்ன ஆள்? எசமானரின் இஷ்டத்துக்கு விரோதமாக என்னால் ஒரு குழி நிலம் வாங்க முடியுமா? ஒரு சிறு குடிசை போட முடியுமா? அப்படிப்பட்ட நான் அவருடைய மகளை மணந்து கொள்வது என்றால், அது அவர்களை ஏய்த்துப் பிழைக்கும் பிழைப்பாக முடியாதா?" என்று கேட்டான் ரமேஷ்.

"நீ சொல்வது ஒருவிதத்தில் நியாயம் தான். ஆனால் உனக்கு அத்தகைய திறமையும் சக்தியும் வந்து விட்டால் இந்தச் சம்பந்தத்துக்கு ஒப்புக் கொள்வாயா, மாட்டாயா?" என்று கேட்டார் பிஹாரிலால்.

"தங்களுடன் சம்பந்தம் செய்து கொள்வதென்றாலே அது பெரும் நற்பாக்கியத்துக்கு அடையாளம் தானே?"

'முடியும், முடியாது' என்ற பதிலை ஸ்பஷ்டமாகச் சொல்வதற்குப் பதிலாக ரமேஷ் இந்தப் பெரிய பதிலைப் புரியாத முறையில் சொல்லி வைத்தான்.

"நீ எங்களைப்போல் ஆக முடியாது. ஆனால் நாங்கள் உன்னைப்போல் ஆகலாம் அல்லவா?" என்றார் ஸர் பிஹாரிலால்.

ரமேஷ் அதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. பிஹாரிலாலும் அதற்கு மேலும் அந்தப் பேச்சைத் தொடரவில்லை. "நமது பிரயாணத்துக்கான ஏற்பாடுகளை யெல்லாம் செய்து நீ முன்னாடியே எல்லாவற்றையும் அனுப்பி வை. நாமும் இரண்டொரு நாட்களில் இங்கிருந்து புறப்பட்டு விடுவோம்!" என்றார்.

"நானும் முன்னாடியே போய் ஏற்பாடுகளைக் கவனித்தால் என்னவென்று எண்ணுகிறேன். எனக்கு அந்தப் பக்கத்தில் கொஞ்சம் காரியம் இருக்கிறது. ஜகதீஷின் மனைவியைப் போய்ப் பார்த்து வர வேண்டும்!" என்றான் ரமேஷ்.



"தாராளமாகப் புறப்படு. நாங்கள் இரு தினங்களில் வந்து சேருகிறோம்!" என்று அநுமதி யளித்தார் பிஹாரிலால்.

அநுமதி பெற்ற ரமேஷ் அங்கிருந்து வெளியே சென்றான். குஸுமா எங்கிருந்தோ திடீரென்று அவனெதிரே வந்து நின்றாள். ரமேஷ் விழிகளில் வியப்புத் தாண்டவமாட அவளை நோக்கினான்.

"நீங்கள் எங்கே போகிறீர்கள்?"

"தற்சமயம் எங்கும் போகவில்லை!"

"அப்படியானால் என்னோடு வாருங்கள்! உங்களிடம் ஒரு முக்கியமான சமாசாரம் பேச வேண்டியிருக்கிறது!"

"மன்னிக்க வேண்டும். நீங்கள் எத்தனையோ விஷயங்கள் இதற்கு முன்பே என்னிடம் சொல்லி விட்டீர்கள். அதைக் கேட்டே என் மனம் கலவர முற்றுக் கொண்டிருக்கிறது. இன்னும் சொன்னால் தாங்காது!" என்றான் ரமேஷ்.

தன் இரு கைகளையும் கன்னத்தில் வைத்துக் கொண்டு குஸுமா சிரித்தாள். சங்கிலியின் முடி ஒவ்வொன்றாக அவிழ்ப்பது போலவும், அதன் முடிச்சு மேலும் மேலும் இறுகித் தன்னையே நெருக்குவது போலவும் ரமேஷுக்குத் தோன்றியது.

"உங்கள் மனம் கலவர முறுவதாகச் சொன்னீர்களே, அந்தக் கலவரம் எப்பொழுது குறையுமாம்?"

"நான் நாளைக்கு இங்கிருந்து புறப்படுகிறேன். அண்ணி கோகிலாவைச் சந்திக்கப் போகிறேன். அதற்குள் என் மனத்தை ஒரு அமைதிக்குக் கொண்டு வந்து விடலாம் என்றிருக்கிறேன். அப்புறம்தான் மேற்கொண்டு யோசனை."

"ரொம்ப சரி!" என்று சொன்ன குஸுமா சிரித்தவாறே, "அப்பொழுது என் விஷயத்தை நினைவு வைத்துக் கொள்வீர்கள் அல்லவா? அதற்கு யாரிடமிருந்தாவது நான் சிபாரிசுக் கடிதம் வாங்கி வந்து தரவேண்டியிருக்குமோ?" என்று கேட்டாள். அவளுடைய அந்த ஹாஸ்யத்தில் என்னதான் மந்திர சக்தி யிருந்ததோ, தெரியவில்லை! அதைக் கேட்ட ரமேஷ் கல்லாகச் சமைந்து நின்றான்.

அதே சமயம் பிராணலால் கோபத்துடன் ஏதோ முணு முணுத்தவாறே வெளியே வந்தார். "என்ன ஆயிற்று? எதற்காக இந்தக் கோபம்?" என்று குஸுமா அவரை நிறுத்திக் கேட்டாள்.



"என்ன ஆகிறது? எல்லாவற்றுக்கும் என்னால் 'ஆமாம்' போட முடிகிறதில்லை. எசமானருக்கோ என்ன என்ன வெல்லாமோ புதிது புதிதாகத் தோன்றுகிறது! நான் என்ன செய்ய?" என்றார் பிராணலால்.

"இப்படிச் சொன்னால் புரியுமா? என்ன ஆயிற்று என்று விவரமாகச் சொன்னால்தானே புரியும்?" என்றாள் குஸுமா.

"என்னத்தைச் சொல்வேன், குழந்தாய்? தருமம் செய்யட்டும்; தானம் செய்யட்டும்; பெரிய பெரிய புண்ணிய காரியங்களுக்குப் பணம் கொடுக்கட்டும். வேண்டாமென்று தடுக்க வில்லை. அதெல்லாம் நியாயம் தான். ஆனால் எல்லா சொத்தையும் தான பத்திரமாக எழுதி வைத்து விடுவேன் என்றால், எந்த ஊர் நியாயம் என்று கேட்கிறேன். அப்புறம் நாம் என்ன, தெருத் தெருவாக நின்று பிச்சையா வாங்குவது?" என்றார் பிராணலால்.

"யார் தன் சொத்தை யெல்லாம் தான பத்திரமாக எழுதி வைக்கப் போகிறார் களாம்?" என்று கேட்டாள் குஸுமா.

"வேறு யார்? எல்லாம் உன் அப்பா தான். இந்த மாதிரி விஷயங்களுக் கெல்லாம் என்னால் கையெழுத்துப் போட முடியாது. என்னை வேலையை விட்டே நீக்கினாலும் சரி, இந்த மாதிரி அநியாயக் காரியங்களுக்கு நான் உடன்பட மாட்டேன். இரண்டு லட்சம் ரூபாயை எடுத்துத் தனியாக வைத்துக் கொள்ளக் கூடாதாம். இந்த மாதிரி தாராளத்துக்கு, நான் செய்வது அதர்மமாகவே இருந்தாலும் கூட இடம் கொடுக்க மாட்டேன்" என்று பொரிந்து தள்ளினார் பிராணலால்.

இதே சமயம் கதவருகில் வந்து நின்ற பிஹாரிலால் மெதுவாக அடிமேல் அடி எடுத்து வைத்துப் பிராணலாலுக்கு அருகில் வந்தார். அவர் தோளின்மேல் கை வைத்து மிகவும் அமைதியான குரலில், "பிராணலால்! நான் சொல்வது உனக்குப் புரியவில்லை. இங்கே வா, சொல்கிறேன்!" என்று சொன்னார். அதற்கு மேல் அவருக்குப் பேச இடம் கொடாமல் அவர் கையைப் பிடித்து வெளியேயும் அழைத்துக் கொண்டுபோய் விட்டார்.

"ஆமாம், நம் எசமானர் தமது சொத்து—சுதந்திரம் அனைத்தையும் பொது நலத்துக்காக அர்ப்பணிக்கப் போகிறாரா, என்ன?" என்று குஸுமாவைப் பார்த்துக் கேட்டான் ரமேஷ்.

"ஆமாம், அப்படித்தான் தோன்றுகிறது. இது சம்பந்தமாக என்னைக்கூட ஒரு நாள் கேட்டார்!" என்றாள் குஸுமா.

"நீங்கள் 'சம்மதம்' தெரிவித்து விட்டீர்களா?"

"தெரிவிக்காமல்?....அவர் தம் பணத்தைத் தம் இஷ்டப்படி செலவு செய்கிறார். அதைத் தடுக்க நான் யார்? அதோடு தானம் கொடுப்பது என்று ஏற்பட்டு விட்டால் அதற்கு ஒரு எல்லையுண்டா?"

"இல்லைதான். ஆனால் உங்களுக்காக என்ன வைத்திருக்கிறார்?"

"ஒன்றும் இல்லை!"

"ஒன்றும் இல்லையா?"—ரமேஷ் நிஜமாகவே துணுக்குற்றான். "அப்புறம் நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டான்.

"என்ன செய்வேன்? ஒன்றும் செய்ய மாட்டேன். என்னைக் கவனித்துக் கொள்ளத்தான் நீங்கள் இருக்கிறீர்களே!" என்று பதில் அளித்தாள் குஸுமா.

ரமேஷ் வைத்த கண் வாங்காமல் குஸுமாவையே பார்க்கலானான். தானத்துக்கு ஒரு எல்லையில்லை என்று சொல்வதுபோல் இந்த அன்புக்கும் காதலுக்கும் கூட ஒரு எல்லை கிடையாதோ என்றே அவனுக்கு அப்பொழுது தோன்றியது.

கோகிலா கண்களைத் திறந்தாள். 'நாம் சுத்தமான அறையொன்றில் கட்டிலில் படுத்திருக்கிறோம்' என்பது அவளுக்கு விளங்கியது. விளக்கு அடக்கமாக எரிந்து கொண்டிருந்தது. அறையைச் சுற்றிலும் ஒருமுறை பார்வையை ஓட்டிய அவளுக்கு அறையில் அமைதி நிலவியிருப்பதும் அருகில் அநேகர் உட்கார்ந்திருப்பதும் தெரிந்தது. ஆவலும் ஆதுரமும் தாண்டவமாடிக் கொண்டிருந்த ராதாவின் பார்வையும் ஜகதீஷின் பார்வையும் அவளையே நோக்கிக் கொண்டிருந்தன. அதைக் கண்ணுற்ற கோகிலாவின் முகத்தில் ஒரு திருப்தி நிலவியது. அவள் கண் ஜாடை காட்டி ராதாவைத் தன் அருகில் அழைத்தாள். ராதா அருகில் வந்ததும், "என் படம் எங்கே?" என்று கேட்டாள்.

தன் புகைப்படத்தைத்தான் கோகிலா கேட்கிறாள் என்று எண்ணினான் ஜகதீஷ். கோகிலாவின் படுக்கைக்கு அடியிலிருந்து ராதா ஒரு படத்தை எடுத்தாள். பிறகு அதை எடுத்துப் போய்க் கோகிலாவின் பார்வையில் படும்படியாக ஒரு சிறிய மேஜை மீது வைத்தாள். அந்தப் படத்தில் ஜகதீஷின் உருவம் இல்லை; கார்மேக வண்ணனாகிய கண்ணனின் எழில் மிகு சித்திரமே அதில் காட்சி அளித்தது.

அதைக் கண்ணுற்றதும் ஜகதீஷின் மனத்தில் 'இந்தப்படம் எதற்காக?' என்ற கேள்வி பிறந்தது. கணவனைத் தெய்வமாகக் கருதும் மனைவி கணவனை விட்டுக் கடவுளை ஆராதிப்பதென்றால்...? அன்புக் கணவனுக்கு அது மனத்தை உறுத்திற்று.

கோகிலா அவன் மனத்தில் உள்ளதைப் புரிந்து கொண்டாள். எதற்காக அவன் இப்படி மனக் கஷ்டப்பட வேண்டும்?—இந்த யோசனையில் அவள் சிறிது நேரம் அவன் முகத்தையே பார்த்தாள்.

அவள் மிகவும் பலவீனமுற்றிருந்தாள். நாத்பாபாவின் ஆசிரமத்துக்கு வந்த அன்று ஜகதீஷின் கரஸ்பரிசம் பட்டுக் கண் விழித்துப் பார்த்தாள். அப்புறம் கண்களை மூடியவள் மூன்று நாட்கள் கழித்து இன்றுதான் மீண்டும் திறந்திருக்கிறாள். இந்நிலையில் அவள் பிறருடைய பேச்சை எங்கே கேட்டிருக்க முடியும்?

கன்னங்கரிய உருவம் படைத்த காலனின் இருள் சூழப் போகிறது என்பதைத் தெரிவிக்கத்தானோ என்னவோ, அங்கே பயங்கர அமைதி சூழ்ந்திருந்தது. அது எல்லோருடைய தூக்கத்தையும் வேறு குலைத்திருந்தது. எந்நேரத்திலும் காலன் அவளைக் கவர்ந்து செல்லலாம் என்ற பயத்தில் யாருமே கண் கொட்டாமல் அவளருகில் உட்கார்ந்திருந்தனர்.

கண்களை விழித்த கோகிலா காலன் தன் வாழ்க்கையைக் கவராமல் விட்டுச் சென்று





# 'அனஸின்'

## நான்கு மருந்துகள் அடங்கியுள்ளது.

'அனஸின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். அவை நரம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனஸினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் —

1. கொயினா: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு, வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.




அனஸினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனஸின்' இருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெறஎப்பொழுதும் அனஸினையே கேட்டு வாங்குங்கள்.

**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

A. 43

# தேவையானபோது டுமெக்ஸ் பால் உணவு கிடைக்குமா ?

குழந்தைகளுக்கு அடிக்கடி பால் உணவை மாற்றுவது அவர்களின் ஜீரணசக்தியைக் குறைக்கிறது. ஆகையால்தான் நீங்கள் குழந்தைகளுக்கு பால் உணவைக் கொடுக்க ஆரம்பிக்குமுன் கடைகளில் எக்காலத்தும் எங்கும் எளிதில் கிடைக்கக்கூடிய பால் உணவாகப் பார்த்து வாங்க வேண்டும். இது காரணம் பற்றியே நீங்கள் டுமெக்ஸ் பால் உணவையே கேட்டு வாங்கவேண்டும். டுமெக்ஸ் பால் உணவு டுபர் கொலின் டெஸ்டெட் பாலினின்று தயார் செய்யப்பட்டது. டுமெக்ஸ் உங்கள் குழந்தைக்கு உயர்ந்த, நிர்பயமான பால் உணவு. எப்போதும் எங்கும் கிடைக்கும்.

# டுமெக்ஸ் பால் உணவு

உங்கள் குழந்தைகளுக்கு டுமெக்ஸ் பால் உணவைக் கொடுத்து அவர்களது வளர்ச்சியைக் கவனியுங்கள்

விட்டான் என்பதை நினைவுறுத்துவது போலப் பார்த்தாள். அதைக் கண்ட எல்லோரும் இவ்வளவு நாளும் கண் விழித்த களைப்பைக் கணத்தில் மறந்தனர். கோகிலா உயிர்பிழைத்து விடுவாள் என்ற நம்பிக்கை ஒரு ஒளியை உண்டு பண்ணியது.

கோகிலாவுக்கு அருகில் இருந்து பணிவிடை செய்து வந்தவர்களெல்லோரும் ஒவ்வொருவராக அந்த அறையை விட்டுப் பக்கத்திலிருந்த பெரிய வராந்தாவுக்குச் சென்றனர். எனவே ஜகதீஷும் கோகிலாவும் மட்டுமே அந்த அறையில் தனியாக இருந்தார்கள். கோகிலாவின் கண்களைச் சுற்றியே தன் கவனத்தைச் செலுத்தியிருந்த ஜகதீஷின் முகத்தில் இரக்கம் கசியும் பரிதாபம் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. கோகிலா அவனைப் பார்த்து ஒரு முறை உயிரற்ற ஒரு சிரிப்பை உதடுகளில் நெளிய விட்டாள். ஜகதீஷ் தன் கைகளால் அவளது தலையை வருடினான். அவனது முகம் அவளது உடல் நிலையைக் கவனிக்கும் முறையில் சற்று அவள் பக்கமாகக் குனிந்திருந்தது. ஜகதீஷுக்கு மட்டும் காதில் விழும்படி மிகவும் மெதுவான குரலில், "உங்களைப் பார்த்துக் கொண்டே தூங்கினேன். உங்களைப் பார்த்துக் கொண்டே கண் விழித்தேன்!" என்றாள் கோகிலா.

ஜகதீஷ் ஒன்றும் பதில் சொல்லவில்லை. அன்புடன் அவளது தேகத்தைத் தடவிக் கொடுக்கலானான். காதலனின் கரங்களில் அமிர்தம் ஊறும் போலும். கோகிலா மெய்ம் மறந்து அவனது கர ஸ்பரிசத்தின் சுகத்தை அநுபவித்தாள். அவளுக்கு உயிர் வந்தது போலிருந்தது. சிறிது நேரம் கழித்துப் பலம் இழந்த தன் கையினால் அவள் அவன் கையைப் பற்றிக் கொண்டாள். ஆண் – பெண்களுக்கு இவ்வுலக வாழ்க்கையில் ஆனந்தம் அளிப்பதுஇந்தப் பாணிக்கிரஹணம் தானே? ஜகதீஷின் கரத்தைப் பற்றிய அவளுக்குச் சொல்ல முடியாத ஆனந்தம் ஏற்பட்டது. உடலிலும் உள்ளத்திலும் ஒருங்கே புல்லரிப்பு உண்டாயிற்று. சில கணங்கள் கண்களை இறுக மூடிக் கொண்டாள். பிறகு மெதுவாகக் கண்களைத் திறந்து, "அதோ படம் வைத்திருக்கிறதே, அது உங்களுக்குப் பிடிக்கவில்லை, இல்லையா?" என்றான்.



சென்னை நீதி மன்றத்திலிருந்து சமீபத்தில் ஓய்வெடுத்துக் கொள்ளப்போகும் நீதிபதி மாக் அவர்களுக்கு அட்வொகேட் ஸ்ரீ ஆர். சந்தானம் ஏப்ரல் 25ம் தேதி ஒரு பிரிவுபசார விருந்து நடத்தினர். அதில் நீதிபதிகளும், நிதி மந்திரியும், பிரமுகர்களும் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

கருத்தொருமித்த காதல் தம்பதிகள் தங்கள் தங்கள் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளை எப்படிப் பரீக்ஷித்துப் புரிந்து கொள்கிறார்கள்?

கோகிலாவின் கேள்வி ஜகதீஷைத் தூக்கி வாரிப் போடச் செய்தது. "பிடிக்கவில்லையா? யார் சொன்னார்கள்? இந்தப் படத்தை உனக்கு அளித்தவன் நான்தானே? எனக்குப் பிடிக்காததாயிருந்தால் உனக்குத் தந்திருப்பேனா?" என்றான்.

"அதிருக்கட்டும். உங்கள் உள்ளத்தில் வேறு எண்ணமே உதிக்கவில்லை என்பதை உங்களால் உறுதியாகக் கூற முடியுமா?" என்று கேட்டாள் கோகிலா.

ஜகதீஷினால் அதிகமாகப் பொய் சொல்ல முடியவில்லை. அவன் என்னதான் சொன்னபொழுதிலும் கோகிலா அவனுடைய உள்ளத்தை நன்கு புரிந்து கொண்டிருந்தாள். அப்படியிருக்கும் பொழுது அவன் பொய் பேசி என்ன பயன்? எனவே, "என் படத்தை நீ ஏன் உன்னிடம் வைத்துக் கொள்ளவில்லை என்று ஒரு கணம் எனக்கு யோசனை ஓடியது!" என்று உண்மையை ஒப்புக் கொண்டான்.

"அதோ அந்தப் படம் தூரத்தில் இருக்கிறது! ஆனால் உங்கள் படம் இதோ இங்கே இருக்கிறது!" என்று சொன்ன கோகிலா தன் இருதயத்தைச் சுட்டிக் காட்டினாள். பிறகு இரு கண்களையும் இறுக மூடிக் கொண்டு உள்ளத்துள்ளே உறைந்திருக்கும் உருவத்தை அகக் கண்களால் பார்ப்பவள் போல் முக பாவத்தை வைத்துக் கொண்டாள். பிறகு கண்களைத் திறந்து, "அதோ இருக்கும் அந்தப் படத்தினிடம் என் இருதயத்துக்குள் இடம் பெற்றிருக்கும் இந்தப் படம், என் இருத

யத் துடிப்பு நின்று விட்டாலும் என்னை விட்டு அகலக் கூடாது என்று வேண்டிக் கொண்டிருக்கிறேன்!'' என்றாள்.

அதைச் சொன்ன கோகிலா மறுபடியும் தன் இரு கண்களையும் மூடிக் கொண்டாள். கோகிலாவின் சொற்களைக் கேட்ட ஜகதீஷின் இருதயம் தழுதழுத்தது. அவன் அவ் வேளையில் பிருந்த பிரயாசை மட்டும் எடுத்துக் கொள்ளாமல் இருந்தால் கட்டாயம் கேவிக் கேவி அழுதே யிருப்பான். ஒருவேளை கோகிலா மரணத்தை எதிர்நோக்கிக் கொண்டிருக்கிறாளோ?

அப்படி யிருந்தால் ஜகதீஷ்தான் என்ன செய்ய முடியும்? அவன் அவளுக்கு வேண்டிய சிகிச்சைகள் செய்விக்கலாம். பணிவிடைகள் புரியலாம். இரவு பகல் தூங்காமல் இறைவனை வேண்டலாம்; அவனுடைய இந்த முயற்சிகளை யெல்லாம் கண்டு மரண தேவன் போனால் போகிறது என்று மனம் இரங்கிக் கோகிலாவின் உயிரை விட்டு விட்டுப் போய் விடுவானா?

'அப்படி நடக்கக் கூடும். அதற்கு உலகமே ஒன்று கூடிக் கோகிலாவின் உயிரைக் காப்பாற்றக் காலனின் காலடிகளிலே விழுந்து பிரார்த்தனை புரிய வேண்டும்!' என்றால் அவன் அதற்காகத் தன்னால் ஆன முயற்சிகளைச் செய்யத் தயாராயிருந்தான். அவன் தனது புண்ணியங்களை யெல்லாம் கோகிலாவின் உயிருக்காகப் பணயம் வைத்தான்; தான் செய்த நல்ல காரியங்களை யெல்லாம் பகவானுக்கு அர்ப்பணித்தான்.

இன்று வரை அவன் கடவுளிடம் கை நீட்டி எதுவுமே தனக்கு வேண்டுமென்று கேட்டதில்லை. கடவுளைக் காக்காய் பிடிப்பது தவறு; பிடிக்க நினைத்தாலும் பிடிக்க முடியாது என்பது அவன் அபிப்பிராயம். அதனால்தான் அவன் அம்மாதிரி அற்பச் செயல்களி லெல்லாம் இறங்கியதேயில்லை. ஆனால் இன்று தன் அகந்தை அனைத்தையும் ஒருபுறமாக மூட்டை கட்டி வைத்து விட்டுக் கோகிலாவைக் குணப் படுத்த வேண்டு மென்று கடவுளை வேண்டிக் கொண்டான், வேண்டிக் கொண்டான்; அப்படி வேண்டிக் கொண்டான்.

என்ன வேண்டிக் கொண்டு என்ன? அவன் அவநம்பிக்கை என்னும் ஆழமான குழியில் விழுந்து மூழ்கிக் கொண்டுதான் இருந்தான். அதனால் அவன் சரீரம் வலுவிழந்து தளர்ந்து விட்டன. அவனுக்குக் கைகால்களை அசைக்கவோ தலையைத் தூக்கவோ திராணி இல்லை. யாரோ கிணற்றுக்குள்ளிருந்து தன்னை "ஜகதீஷ், ஜகதீஷ்!" என்று கூப்பிடுவது போலத் தோன்றியது.

கூப்பிட்ட குரலுக்குக் காது கொடுக்க வேண்டும் என்பதற்காக வெகு பிரயா

சைப் பட்டு அவன் தலையைத் தூக்கினான். எதிரே நாத்பாபா, ரமேஷ், குஸுமா, இன்னும் ஒருவர் நிற்பது போல அவனுக்குத் தோன்றியது. நாம் என்ன, கனவு காண்கிறோமா என்று எண்ணினான். அவர்களை அங்கே காணும் பொழுது அவனுக்கு ஆச்சரியமா யிருந்தது. நாம் காண்பது கனவா, நினைவா என்பதைத் தீர்மானிக்க இறங்கிய புத்தி, காண்பது கனவல்ல என்ற முடிவுக்கு வந்தது. காரணம், நாத்பாபா அவனுடைய கையைப் பிடித்துத் தூக்கி நிறுத்தியது தான். "ஜகதீஷ்! நீ போய்க் கொஞ்ச நேரம் தூங்கு. நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறோம்." என்றார் அவர்.

"நீ இங்கே எங்கேயப்பா வந்தாய்?" என்று ரமேஷைப் பார்த்து வியப்பை அடக்க முடியாத ஜகதீஷ் கேட்டான்.

"நான் அண்ணியைக் காட்டுவதற்காக டாக்டரை அழைத்து வந்திருக்கிறேன்!" என்றான் ரமேஷ்.

ஜகதீஷ் நின்று கொண்டே யிருந்தான். டாக்டர் கோகிலாவைப் பரிசோதனை செய்து என்ன சொல்கிறார் என்பதை அறிய வேண்டும் என்ற ஆவல் தான் அவனை அப்படி நிறுத்தி வைத்தது. அம்மாதிரி சந்தர்ப்பத்தில் நம்பிக்கை அளிக்கக் கூடிய ஒரு சொல் கூட ஆயிரம் ரூபாய்க்கு என்ன, லட்சம் ரூபாய்க்குச் சமானம் ஆயிற்றே!

டாக்டர் அக்கறை செலுத்தி நோயாளியைப் பரிசோதித்தார். பிறகு என்ன என்னவெல்லாமோ சிகிச்சைகளும் செய்தார். "நோயாளி இத்தனை நேரம் எப்படி உயிரோடு இருந்தாள் என்பதே எனக்கு விளங்க வில்லை. எப்பொழுது இவ்வளவு நேரம் எவ்வித ஆபத்தும் இன்றி ஓடி விட்டதோ, இனிமேல் பயம் இல்லை என்று தான் நான் சொல்வேன். நோயாளிக்கு உள்ள ஆத்ம பலம் அபூர்வமானதாகத் தோன்றுகிறது. அதன் பலத்தில் அவள் வெகு சீக்கிரமே குணம் அடைந்து விடுவாள் என்றும் எனக்குத் தோன்றுகிறது!" என்றார் டாக்டர்.

வைத்தியக் கண் கொண்டு பார்க்கப் போனால் அந்த நோய் மிகவும் ஆச்சரியமாகத்தான் இருந்தது. இருதயத்தில் எழுந்த அடக்க மாட்டாத வேதனையை உடலால் தாள முடிய வில்லை. அதனால் சரீரம் தாங்க முடியாத ஜுரத்தினால் பீடிக்கப்பட்டு விட்டது. உள்ளத் துயரம் தீரும் நிலை ஏற்பட்டதனால் தான் உடல் நோய் குன்றி யிருக்கிறது. அது மட்டும் அல்ல; மிகவும் கணிசமாகக் குணமும் கண்டிருக்கிறது.

உள்ளத்துக்கும் உடலுக்கும் உள்ள தொடர்பு பற்றிய சாஸ்திரீய ஆராய்ச்சி

இந்தப் புதிய யுகத்திலும் கூடச் சரியாக வளரவில்லை. இவ்வாராய்ச்சி இன்னும் பிள்ளைப் பிராயத்தில் தான் இருக்கிறது; தளர் நடைதான் போட்டுக் கொண்டிருக்கிறது. கவிஞர்களும் கலைஞர்களும் கற்பனைக் கண்கொண்டு நோக்குவதனாலும் உள்ளத்து உணர்ச்சி உந்தித் தள்ளுவதினாலும் உள்ளத்துக்கும் உடலுக்கும் உள்ள சம்பந்தத்தைப் பற்றி ஒருவாறு முடிவு கண்டிருக்கிறார்கள். ஆனால் அந்த முடிவு விஞ்ஞான ரீதியாக வளரவில்லை. விஞ்ஞானிகள் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே அது தானாக வளருகிறது! வளர்வதோடு மட்டுமல்லாமல் அவர்களை வியப்பிலும் ஆழ்த்துகிறது.

மன நோய் என்பது ஒரு வைத்தியச் சொல் அல்ல, நோய்களின் அட்டவணையிலே அதன் பெயர் ஏறவில்லை. காதற் கவிதைகள் புனையும் கவிஞர்களும் அந்நோயில் அடிபடும் பைத்தியக்காரர்களும் அப்படி ஒரு நோயைச் சிருஷ்டித்து விட்டார்கள். காதல் நோய், மன நோய் என்றெல்லாம் ஒரு நோய் கிடையவே கிடையாது.

இப்படி எண்ணும் வைத்தியர்களும் டாக்டர்களும் கூட எத்தனையோ தடவைகள் இந்த உள்ளத்து நோய்க்கு இலக்காகி விடுகிறார்கள். உள்ளத்தைத் தொட்டுச் சொன்னால் அவர்களாலும் இதை மறுக்க முடியாது. இது யாவரும் நினைவு வைத்துக் கொள்ள வேண்டிய விஷயம்.

டாக்டர் சொன்னது எல்லோருக்குமே உண்மை என்று தோன்றியது. ஜகதீஷின் களைப்பு மேலிட்ட உடல், களைப்பை நீக்கிக்கொள்ள விரும்பியது. ஆனால் மனம்?...

அவனை மிகவும் வற்புறுத்தி எதிர்ப்புறத்து அறைக்குத் தூங்க அனுப்பினார்கள். அவர்கள் அவனை அடுத்த அறைக்கு அனுப்புவதற்கு முன்பாகவே, அவன் ரமேஷ் அங்கே எப்படி வந்து சேர்ந்தான் என்பதைப் பற்றி விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

ஜகதீஷின் மேல் சுமத்தப் பட்டிருந்த குற்றச் சாட்டு வாபஸ் வாங்கப் பட்டு விட்டது என்பதைக் கோகிலாவுக்குத் தெரிவித்து அவளது க்ஷேம லாபங்களை அறிந்து போவதற்காக வத்ஸராஜின் கிராமத்துக்கு ரமேஷ் வந்திருந்தான். கோகிலாவுக்குக் கடுஞ் சுரம் கண்டு விட்டதனால் நாத்பாபாவிடம் முடி கயிறு போடுவதற்காக வத்ஸராஜும் ராதாவும் அவளை அழைத்துக் கொண்டு ஓங்காரியா சென்றிருக்கிறார்கள் என்பது அங்கே அவனுக்குத் தெரிய வந்தது. தீராத வியாதியும் நாத்பாபா முடிகயிறு போட்டால் தீர்ந்து விடுகிறது என்று ஊர் முழுவதும் பேச்சாக இருந்தது. அதை நம்பி அந்தக் கிராம்யத் தம்பதிகள் ஏழெட்டு மைல் தூரமுள்ள ஓங்காரியாவுக்குக் கடுஞ் சுரத்தினால் பீடிக்கப்பட்ட கோகிலாவைக் கட்டை வண்டியில் போட்டுக் கொண்டு போயிருந்தார்கள். அதை அறிந்த ரமேஷுக்கு அவர்கள் மேல் கோபம் கோபமாக வந்தது. 'என்ன துணிச்சல் இவர்களுக்கு! இப்படியா நோயாளியை உடல் நலுங்க வண்டியில் கொண்டு போவது?' என்று சினந்தான். அந்தத் தம்பதிகளின் மேல் வந்த கோபத்தைக் காட்டிலும் அவனுக்கு நாத்பாபாவின் மேல் அசாத்திய கோபம் வந்தது. ரகசியமே உருவான நாத்பாபா தமது முடிகயிறுக்குள்ள அற்புத சமத்காரங்களை அதிகப்படுத்தி எங்கும் அதைப் பற்றியே பேசும்படி செய்யாமலிருந்தால், படிப்பு வாசனை யற்ற அந்த நாட்டுப் புறத்தார்கள் அவ்வளவு தூரம் ஓடி வந்திருப்பார்களா?— இப்பொழுது அதைப் பற்றியெல்லாம் சிந்தித்து என்ன பயன்?

அவன் அந்தச் சிந்தனையை அப்படியே விட்டு விட்டு நகரத்துக்கு ஓடினான். ஸர் பிஹாரிலாலிடம் சென்று விஷயத்தை விவரமாகச் சொல்லி விடுமுறை கேட்டான். ஒரு நல்ல டாக்டரை அழைத்துக் கொண்டு, தான் ஓங்காரியாவுக்குப் புறப்பட விரும்புவதாகவும் சொன்னான்.

"தாராளமாகப் போய் வா! நாங்களும் இரண்டு நாட்கள் கழித்து அங்கே வருகிறோம். தம்மைப் பார்க்க நாத்பாபா என்னை வரச் சொல்லியிருக்கிறார். வேறு டாக்டரை அழைத்துப் போவானேன்? நம் டாக்டரையே அழைத்துப் போயேன்! சௌகரியத்துக்கு அவரை அங்கே வைத்துக் கொள்ளலாம். இதற்காக நீ அநாவசியமாக விடுமுறை எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதும் இல்லை. நானும் ஓங்காரியாவுக்கு வந்து இரண்டொரு நாள் தங்கப் போகிறேன். அப்படியே நம் கிராமங்களைப் போய்ப் பார்வையிட்டு வந்து விடலாம். அங்கிருந்து நம் கிராமங்கள் ஒன்றும் வெகு தொலைவில் இல்லையே!" என்றார் பிஹாரிலால்.

பிஹாரிலால் இரு காரியங்களையும் ஒன்றாகப் பார்த்து விடலாம் என்று சொல்லி விடவே, ரமேஷ் டாக்டருடன் ஓங்காரியா வந்து சேர்ந்தான்.

தான் வந்து சேர்ந்த விவரத்தை விளக்கிய பின் ஜகதீஷைப் போய்ப் படுத்துத் தூங்குமாறு ரமேஷும் வற்புறுத்தினான். அது மட்டும் அல்ல; கோகிலாவைக் கவனித்துக் கொள்ளத் தான் உட்கார்ந்திருப்பதாகவும் சொன்னான். எனவே ஜகதீஷ் பக்கத்து அறைக்குப் படுக்கச் சென்றான். (அடுத்த இதழில் முடியும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor: Mi. Pa. Somasundaram







1. 500 காலன்கள் டாங்க் ட்ரெயிலர்
2. டிராக்டர் ட்ரெயிலர்
3. ஸாக்டிரக்
4. தண்ணீர் கைவண்டி
5. (Pan Type) வீல் பாரோ

மேலே குறிப்பிடப்பட்டவை எங்களுடைய சிறந்த இலேசான என்ஜினீரிங் தயாரிப்புகளில் சில. எங்கள் தயாரிப்புகளில் ஒவ்வொன்றும் முதல்தரமான சேவை யுடையதாயும் வாங்குபவர்களிடையே முதலிடத்தை விசேஷமாகப் பெற்றும் விளங்குகிறது.











கிளைகள்: பெங்களூர். • திருச்சி. • உதகை • ஹைதராபாத்

REGISTERED No. M. 4392

*Registered as newspaper in Ceylon*